




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 18 இதழ் 32

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

விளம்பி ஞு மாசியீ 24

# புது வருஷ பட்ஜெட்

இரண்டு ஆண்டுகளுக்கு முன் கண்டபடி வரிகள் விதித்து அவற்றின் விளைவாக விலைவாசிகளும் வாழ்க்கைச் செலவுகளும் அளவுகடந்து உயர்ந்து அவதிப்படும் பொது ஜனங்கள் ஒவ்வொரு வருஷமும் பட்ஜெட்டில் ஏதாவது கஷ்ட நிவாரணம் கிடைக்குமோ என்று ஏங்கி பட்ஜெட் சமர்ப்பிக்கப்படும் நாளை எதிர்பார்த்திருப்பது வழக்கம். இந்த வருஷமும் அப்படித்தான் காத்திருந்தார்கள்.

ஆனால், நிதி மந்திரிகள் மாறினாலும், வரி முறைகள் மட்டும் மாறாது, பொது மக்கள் செலுத்த வேண்டிய வரிகளைச் செலுத்தியே ஆகவேண்டும் என்பது போல் திரு மொரார்ஜி தேசாய் சமர்ப்பித்த 1959-60 ஆம் ஆண்டு பட்ஜெட்டும் இருக்கிறது. சாதாரண மக்களுக்கு ஆறுதல் அளிக்கும் அம்சம் ஏதும் இல்லை.

இல்லாவிட்டால் போகிறது; புதிதாகவாவது ஒன்றும் வரி விதிக்காமல் விட்டாலாவது போதும் என்றிருந்தால் ஒருவாறு திருப்தியடைந்திருக்கலாம். அதுவும் இல்லை. புது வரிப் பிரேரணைகள் மூலம் 23 கோடி ரூபாய் வசூல் செய்யப் போகிறார்கள். சாதாரண மக்கள் மீது நேர்முகமாக வரி விதிக்காமல் மறைமுகமாக விதித்துப் பணம் வசூலிக்கத் திட்டமிடப்பட்டிருக்கிறது.

சுத்திகரிக்கப்பட்ட டீசல் எண்ணெய், மற்றும் ஆவியாகும் எண்ணெய், குறைந்த இயக்கச் சக்தியுள்ள டீசல் எண்ணெய், டயர்கள் இவற்றின்மீது அதிக வரி விதிக்கப்பட்டிருக்கிறது. இதன் விளைவு, லாரி, பஸ் போக்குவரத்துகளின் அபிவிருத்தி தடைபடலாம். அல்லது லாரி, பஸ் முதலியவற்றிற்குப் பொதுமக்கள் செலுத்த வேண்டிய வாடகைக் கட்டணங்கள் உயர்த்தப்படலாம். இவற்றின் விளைவாக, கஷ்டத்துக்கும் நஷ்டத்துக்கும் ஆளாகிறவர்கள் பொதுமக்களே!

நாட்டுச் சர்க்கரை கிராமாந்தரங்களில் ஏழை மக்கள் உபயோகிக்கும் தினசரிப் பண்டம். ஆலைச் சர்க்கரை விற்கும் விலையில் அதை வாங்கி அவர்களால் சமாளிக்க முடியாது. வெல்லமும் நாட்டுச் சர்க்கரையும் அவர்களுக்கு ஆதரவு. இப்போது நாட்டுச் சர்க்கரைக்குப் புதிதாக வரி விதிக்கப்பட்டிருக்கிறது. ஏன்? ஆலைச் சர்க்கரைக்கு உற்பத்தி வரி இருப்பதால், கரும்பு அதிகமாக நாட்டுச் சர்க்கரை செய்ய உபயோகிக்கப்படுகிறதாம்.

இப்படி சமூகத்தின் பல பகுதியினருக்கும் உண்மை பரிகாரம் கிடைக்காவிட்டாலும், மேலெழுந்த வாரியாகப் பார்ப்பதற்கு 82 கோடி ரூபாய் வருமானத்தில் துண்டு விழுந்தாலும் புது வரிகள் மூலமும் இதர மாறுபாடுகளின் மூலமும் 23 கோடி ரூபாய் மட்டுமே வசூலிக்க வகை செய்யப்படுகிறது. பாக்கி 59 கோடி ரூபாய் ஈடு செய்யப்படாமலே விடப்பட்டிருக்கிறது. அதனால் மக்கள் திருப்தியடைய வேண்டும் என்பது போல் நிதிமந்திரியின் பிரசங்கம் அமைந்திருக்கிறது.

ஆனால் இப்போது வரிகள் மூலம் அதிகமாக வசூலிக்க முடியாத நிலைமையில் நமது நாடு இருக்கிறதென்பதுதான் உண்மை நிலை. எவ்வளவு கிடைக்க முடியுமோ அவ்வளவும் இப்போது வசூலிக்கப்படும் நிலைமை அடைந்து விட்டது. இதைப் பல சமயங்களில் பல ஸ்தாபனங்கள் எடுத்துக் காட்டியிருக்கின்றன. இது எவ்வளவு உண்மை என்பதைத்தான் திரு மொரார்ஜி தேசாயின் பட்ஜெட் நிரூபிக்கிறது.

பாதுகாப்பு இலாக்காவின் செலவு குறைக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பற்றி குறிப்பாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. ஆனால் உண்மையில் பாதுகாப்பு நடவடிக்கைகளில் எவ்விதக் குறைவும் இல்லையென்றே கூற வேண்டும். அநாவசியச் செலவுகள்தான்

குறைந்திருக்கின்றன. முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இருந்த பாதுகாப்புச் செலவைவிட இப்போதுள்ளபாதுகாப்புச் செலவு அதிகமாகவே இருப்பதிலிருந்து இது விளங்கும்.

நமது நிதிநிலைமை இன்னமும் திருப்திகரமான நிலையில் இல்லை என்பதை ஒருவாறு ஒப்புக்கொண்ட நிதி மந்திரி "உற்பத்தியைப் பெருக்கி, சேமிப்பை அதிகரித்து, தேவைகளைக் குறைத்து மக்கள் எல்லோரும் ஒத்துழைத்து நாட்டின் வருங்கால நலனுக்குப் பாடுபட வேண்டும்" என்று உணர்ச்சியுடன் பேசியிருக்கிறார். பொது மக்கள் இதுவரையில் ஒத்துழைத்துத்தான் வரிகள் கொடுத்து வருகின்றார்கள். ஒரு முறை வரி விதித்து விட்டால் அது எந்த ரூபத்திலும் நிலைத்து நிரந்தரமாகிவிடுகிறது என்ற உண்மையை அவர்கள் கண்டு அனுபவித்து வருகிறார்கள். ஆனால் அவர்கள் கஷ்டப்பட்டுச் செலுத்தும் நிதி அரசாங்கத்தின் ஊதாரிச் செலவினங்களிலும், உற்பத்திக்குப் பயனளிக்காத வகைகளிலும் விரயமாகிக் கொண்டு வருவதைக் கண்டுதான் அவர்கள் வருந்துகிறார்கள். சிக்கனத்தின் அவசியத்தையும் அதற்கேற்ப நடவடிக்கைகளின் முக்கியத்தையும் சர்க்கார் உணர்ந்து நடந்துகொண்டாலேபோதும்.

# சென்னை சர்க்கார் குழப்படி

"சர்க்கார் உணவு தான்ய வியாபாரத்தை மேற்கொள்ளும்" என்றார் நேருஜி.

"சர்க்கார் உணவு தான்ய வியாபாரத்தை மேற்கொண்டே தீரும். இதோ லைசென்சுகள் வழங்கி விட்டோம், வியாபாரிகளுக்கு!" என்றார்கள் பிரதமர் நேருஜியின் பிரதம சீடர்களான சென்னை சர்க்கார் மந்திரிகள்.

நாட்டு நிலவரம் அறிந்தவர்கள் சர்க்கார் உணவு தான்ய வியாபாரத்தில் ஈடுபட்டால் பெரும் ஆபத்தாக விளையும் என்று எச்சரிக்கை செய்தார்கள். ஆனால் எந்தச் சர்க்காரும் கேட்கவில்லை.

சென்னை மந்திரிகள், "இவ்வருஷம் விளைவு அதிகம். அதிகப்படியான நெல்லைத்தான் கொள்முதல் செய்யப் போகிறோம். அதனால் எவ்வித சிரமமும் இராது" என்று கூறி, நெல்லுக்கு விலையும் நிர்ணயித்தார்கள். அவ்வளவுதான்; சர்க்காருக்கு நெல் விற்பார் இல்லை என்ற நிலை ஏற்பட்டிருக்கிறது.

பொதுவாக அறுவடைக்காலம் என்றால் அரிசி விலையும், நெல் விலையும் குறையும். அதற்கு மாறாக நம் ராஜ்யத்தில் விலைகள் ஏறுமுகமாக இருக்கின்றன. நெல் சாகுபடி செய்யும் சொற்ப காலத்தில் ஏற்படும் விலையேற்றத்தைத் தடுப்பதற்காக இந்தத் தான்யக் கொள்முதல் திட்டம் என்று தவறான நடவடிக்கை எடுத்துக்கொண்டு, விலைகள் குறைய வேண்டிய இந்த அறுவடைக் காலத்தில் விலைகளை ஏறச் செய்து விட்டார்கள் நமது (மதி) மந்திரிகள்!

தஞ்சாவூர் நெல்லைச் சென்னை சர்க்காரால் கொள்முதல் செய்ய முடியவில்லையே தவிர, அதனால் அந்த நெல் வியாபாரம் ஆகாமல் இல்லை. கேரள ராஜ்யத்துக்கு லாரி லாரியாக வான் வானாக நெல் மூட்டைகள் போய்க்கொண்டுதான் இருக்கின்றன. சென்னை சர்க்கார் செய்த தவறு கேரள ராஜ்ய மக்களுக்கு லாபமாக முடிந்தது! சென்னை ராஜ்யத்தில் விற்க முடியாத நெல்லெல்லாம் கேரளத்துக்குப் போனதால் கேரள மக்கள் பஞ்சத்தில் இவ் வருஷம் கஷ்டப்பட மாட்டார்கள். அந்த அளவுக்குக் கம்யூனிஸ்ட் சர்க்கார் பிழைத்தது. அத்துடன் நின்றால் தேவலையே!

மந்திரி திரு சுப்பிரமணியம் தில்லிக்குச் சென்று, சென்னை ராஜ்யத்திலிருந்து உணவு தான்யம் கேரளத்துக்குப் போகக் கூடாது என்று தடையுத்தரவு வேறு போடச் செய்து விட்டார். இதன் பயனாக, மத்திய சர்க்கார் கம்யூனிஸ்டுகளிடம் பாரபட்சத்தோடு நடந்து கொள்கிறது என்று கம்யூனிஸ்டுகள் பிரசாரம் செய்யவும் வாய்ப்பளித்து விட்டார்கள்.

இப்படிக் காங்கிரஸ் செய்யும் தவறுகளெல்லாம் கம்யூனிஸ்டுகளுக்கு லாபமாகப் போய்க் கொண்டிருக்கிறது!

ஒரு தவறான நடவடிக்கை எடுத்துக் கொண்டால் அதைத்தொடர்ந்தாற்போல் பல தவறான நடவடிக்கைகள் எடுக்க வேண்டியிருக்கும் என்பதற்கு இதைவிட வேறு அத்தாட்சி என்ன வேண்டும்?

இந்தச் சமயத்தில் சென்னை ராஜ்யத்தை விட அபரிமிதமான நெல் விளைச்சலுடைய ஆந்திர சர்க்கார் செய்துள்ள காரியத்தைக் கவனிக்க வேண்டும். அவர்கள் கொஞ்சங்கூடக் கூசாமல் எங்களால் நெல் கொள்முதல் செய்யமுடியாது என்று சொல்லி விட்டார்கள்.

நாட்டு மக்களின் நலனில் அக்கறை செலுத்துவதை விட நேருஜியிடம் நல்ல பெயர் சம்பாதிக்க வேண்டும் என்பதில் அக்கறையுள்ள சர்க்கார் தவறுகளுக்கு மேல் தவறுகள் இழைத்து மக்களை அல்லற்படுத்தி வருகிறார்கள். நிலைமை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டு வருகிறது. இந்த நிலைமையிலும் வழியில்லாமல் இல்லை. சர்க்கார் உணவு தான்ய வியாபாரத்தில் தலையிடப்போவதில்லை என்று சொல்லி விட்டாலே போதும். பதுங்கியிருக்கும் தான்யம் வெளிவந்து, விலை ஏற்றங்கள் குறையும். மக்கள் இயல்பாக வாழ வழி செய்தாலே சர்க்கார் பெருதவி செய்து விட்டதாக மக்கள் நன்றி செலுத்துவார்கள்!

## தடுத்தாட்கொண்டவர் !


லாரி,பஸ் போட்டியினால் ரயில்வேக்களின் வருமானம் குறைந்து விட்டதே!
கவலைப் படாதே! நான் இருக்கிறேன்!
டயர்கள் மீது வரி
டீசல் எண்ணெய் வரி

# வாய்முத்தம் சிந்தி விடுமோ?

இவ்விதழ் மகாசிவராத்திரி வருகின்ற நாளிலே வெளியாகிறது. பாரத மக்கள் நினைவெல்லாம் சிவனைப் பற்றியே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கும். நேபாள நாட்டின் தலைநகரிலுள்ள பசுபதீசுவரர் ஆலயத்திலிருந்து கன்னியாகுமரி வரையிலுள்ள அத்தனை சிவஸ்தலங்களிலும் இரவும் பகலும் பூஜைகளும் வழிபாடுகளும் நடைபெறும். நாமும் அந்த பக்த கோடிகளுடன் சேர்ந்து, எக்காட்டவர்க்கும் இறைவனான தென்னாடுடைய சிவனுக்கு அஞ்சலி செலுத்திக் கொள்கிறோம்.

அப்படி அஞ்சலி செலுத்துகையில் தமிழ் நாட்டில் இடைக்காலத்தில் வாழ்ந்த பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் பாடிய கவிதைச் சுவை மிகுந்த அருமையான பாடலைப் பாடி இறைஞ்சுகிறோம்.

ஆய்முத்துப் பந்தரின் மெல்லணை
மீதுன் அருகிருந்து
நீமுத்தம் தாவென்(று) அவர்கொஞ்சும்
வேளையில் நித்தநித்தம்
வேய்முத்தரோ டென்குறைகள் எல்லாம்
மெல்ல மெல்லச்சொன்னால்
வாய்முத்தம் சிந்தி விடுமோ
நெல்வேலி வடிவன்னையே!

சிருங்கார ரஸமும் உரிமைப் பண்பும் துலங்கக் கவிஞர் பாடிய இவ்வரிய பாடலுக்கு ஏற்ற அழகிய வண்ண ஓவியத்தை ஓவியர் ராஜம் இவ்வார அட்டைச் சித்திரமாக வழங்கியிருக்கிறார்.

# ஆகாச வெடி

"திருப்பதி கோவிலில் பிரசாதம் வைக்கப்பட்டிருந்த வெள்ளிக் கிண்ணம் மாயமாய் மறைந்தது." —செய்தி

கிண்ணம் திரும்பக் கிடைக்கலாம். ஆனால் பிரசாதம் திரும்பாதே என்று ஏங்குகிறார் ஒரு பக்தர்.

★

"மந்திரிகளுக்குப் பூமாலைகள் போடும் வழக்கத்தை நிறுத்த வேண்டும். இதனால் வீண் செலவுதான் ஏற்படுகிறது." —மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலம்



பூ! இது ஒரு பிரமாதச் செலவு என்று ஏன் நினைக்க வேண்டும்?

★

"பங்களூர் ஹோட்டல் ஒன்றில் நடந்த பந்தயத்தில், ஒருவர் 40 போண்டா, 40 வடைகளைச் சாப்பிட்டு வெற்றி பெற்றார்." — செய்தி

"பிறர் 'பில்' கொடுக்கும்போது பந்தயம் போடுவதுபோல், சிலர் சாப்பிடுவதைப்பார்த்திருக்கிறேன்!" என்கிறார் ஒருவர்.

★

"கேரளத்துக்கு, சென்னை ராஜ்யம் நெல் ஏற்றுமதிக்குத் தடை விதித்தும், அங்கு எவ்வளவு அரிசி போகிறதென்று தெரியவில்லை..." —ஒரு எம். எல். ஏ.

மீதமுள்ள உமியை அளந்து பார்த்துத் தெரிந்துகொள்ளக் கூடாதா?

ஐம்பது வருடங்களுக்கு பிரிட்டனுடன் ரஷ்யா பரஸ்பரம் யுத்தம் செய்துகொள்வதில்லை என்று ஒப்பந்தம் செய்துகொள்ளத் தயார். —சோவியத் பிரதமர் க்ருஷேவ்

ஐம்பத்தோராவது வருடத்தில் செய்யப் போவது குறித்தும் இப்போதே ஏன் ஒரு ஒப்பந்தம் செய்துகொள்ளக் கூடாது?

★

பார்லிமென்டு, லோக சபையில் சர்தார் அமர்சிங் சைகால் என்ற காங்கிரஸ் அங்கத்தினர் சபையில் தமக்குப் பேசச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை என்று சபைத் தலைவரிடம் தெரிவித்துக் கொண்டார்!

"இதோ பேசிவிட்டாரே, அங்கத்தினர்!" என்று சுட்டிக் காட்டுகிறார் ஒருவர்.

★

"ரஷ்யப் பிரதமர் க்ருஷேவுக்குப் பல் வலி! பிரிட்டிஷ் பிரதமர் மாக்மில்லனுடன் கீவ் பிரயாணம் கடைசி நேரத்தில் ரத்து." — செய்தி

இது பல் வலியானதால், "கொஞ்சம் பல்லைக் கடித்துக் கொண்டாவது என்னோடு வரத்தான் வேண்டும்" என்று ஸ்ரீ மாக்மில்லனால் நிச்சயம் கூறியிருக்க முடியாது.

★

"......மௌன, தானத்துடன் இறந்த யானை புதைக்கப்பட்டது!" —செய்தி

யானை இறந்தது மௌனதானத்தைக் கேட்ட பின்னரா அல்லது முன்னரா என்பதை அறிவிப்பார்களா?

★

"ரயில்வேயில் நாலாவது வகுப்பு ஏற்படுத்த யோசனை." —செய்தி

மூன்றாம் வகுப்பின் மதிப்பை இப்படியாவது உயர்த்திப் பார்க்கட்டும்!

# என்ன சேதி?

## திரு நடேச பிள்ளை

சென்னையில் சென்ற வாரம் ஒரு அதிசயம் நிகழ்ந்தது. சென்னை பல்கலைக் கழகத்தின் ஆதரவில் நடைபெற்ற ஒரு விரிவுரைக்கு நூறு பேர்களுக்கு மேல் வந்திருந்தார்கள்! அதுவும் ஒரு நாளல்ல; மூன்று நாட்கள்! மூன்று நாட்கள் நடைபெற்ற அவ்விரிவுரைகளுக்கு மூன்று நாட்களும் தொடர்ந்து வந்து சிறப்பித்தார்கள். பல்கலைக்கழக விரிவுரை என்றால் பொதுவாக, பிரசங்கியார் உள்பட ஆறு அல்லது ஏழு பேர்கள் இருப்பார்கள். இத்தகைய மரபு நிலவி வரும் சென்னை பல்கலைக் கழகத்தில் ஒரு புது மரபு காணுவ தென்றால் அது ஒரு அதிசயிக்கத்தக்க செய்தியே அல்லவா?



திரு சு.நடேச பிள்ளை

இன்னொரு அதிசயச் செய்தியும் அங்கு போனபோது தெரிய வந்தது.

தமிழ் நாட்டின் தலைநகரமாகிய சென்னை மாநகரில் நூறு ஆண்டுகளாகவுள்ள இப்பல்கலைக் கழகத்தில் தமிழ் ஆராய்ச்சி விரிவுரைக்கு என்று ஒரு கட்டளை (எண்டோமெண்ட்) இதுவரை இல்லையாது என்பது தான். இதைக் கேட்ட போது வெட்கமாகவும் அவமானமாகவும் இருந்தது. இந்த வெட்கக்கேட்டைத் தற்போது சென்னை பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறைத்தலைவராகவுள்ள திரு ரா.பி.சேதுப் பிள்ளை அவர்கள் நீக்கி யிருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டு மகிழாத தமிழர் இல்லை. தாய்மொழித் தமிழுக்கு அஞ்சலி செய்ய, தம்மைப்பெற்ற நல்தாய் ஸ்ரீமதி சொர்ணம்மாள் அவர்கள் பெயரிலேயே திரு சேதுப் பிள்ளையவர்கள் 'கட்டளை' ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

இந்தக் கட்டளையின் ஆதரவில்தான் யாழ்ப்பாண அறிஞர் திரு சு.நடேசபிள்ளை அவர்கள் "திருவள்ளுவரின் காலம்" என்ற தலைப்பில் மூன்று அரிய சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். இந்தச் சொற்பொழிவுகளில் திருவள்ளுவர் கி. பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளுக்குள் வாழ்ந்தவராக இருக்க வேண்டுமேயன்றி அதற்குப் பிற்பட்ட ஐந்தாவது நூற்றாண்டோ, ஏழாவது எட்டாவது நூற்றாண்டோ அல்ல என்பதைத் தக்க சான்றுகளுடன் வலியுறுத்தினார். அப்படிச் செய்யும் போது, காலஞ்சென்ற பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள், சரித்திரப் பேராசிரியர் திரு க. அ. நீலகண்ட சாஸ்திரியார் — இவர்களது கருத்துக்களையும் ஆராய வேண்டியிருந்தது. அந்த ஆராய்ச்சியை உயர்வாக நிகழ்த்தினார், பண்புடன் பேசினார். பிற ஆசிரியர்களின் ஆராய்ச்சி முடிவுகளுடன் மாறுபடும்போது, தனிப்பட்டவர்களைத் தாக்காது, அவர்கள் புலமைக்கு உண்மையான மதிப்பளித்து மாறுபட வேண்டிய கருத்துக்களை வலியுறுத்த வேண்டும் என்ற உயரிய மரபை நிலைநிறுத்தினார்.

## தென்னாப்பிரிக்கத் தமிழர்

சென்ற வாரம் தமிழ் எழுத்தாளர் சங்கத்தினர் ஒரு நல்ல பணி புரிந்தார்கள். தென்னாப்பிரிக்காவில் பல்லாண்டுகளாக வாழ்ந்துதென்னாப்பிரிக்கத் தமிழர்களுக்கு நல்ல பணி புரிந்துவரும் தென்னாப்பிரிக்கத் தமிழர் திரு பத்தர் அவர்களுக்கு வரவேற்புரை நல்கி,தென்னாப்பிரிக்கத் தமிழர்களின் நலனில் தாய்த் தமிழகத்தினரும் தமிழ் எழுத்தாளர்களும் அக்கறை கொண்டிருக்கின்றனர் என்பதைக் காண்பித்துக் கொண்டனர்.

திரு பத்தர் அவர்கள் தென்னாப்பிரிக்காவில் சாதி, இன, மொழி வேறுபாடின்றித் தென்னாட்டவர்கள் எல்லாரும் ஒற்றுமையாக வாழ்ந்து வருவதைக் குறிப்பிட்டார். ஆந்திரர்களும் தமிழர்களும் ஒன்றாக எப்பணியும் புரியும் சால்பை விளக்கினார். தமிழர்கள் சாதி இனப் பாகுபாடின்றி, கல்யாணங்கள் செய்துகொண்டு இன்பமாக வாழும் வழக்கத்தைக் கொண்டிருக்கிறார்கள் என்பதைக் குறிப்பிட்டார். மொத்தத்தில் தாய்த் தமிழகத்தில் நிலவும் சிற்சில மனப் பூசல்கள், மனத் தாங்கல்கள் அங்கே அறவே இல்லையாது என்பதை வலியுறுத்தினார். திரு பத்தர் அவர்கள் முயற்சியால் தென்னாப்பிரிக்காவில் 55,000 பவுனில் ஒரு பெரும் கட்டடம் நிறுவி, அங்கு வாழும் எல்லாச் சாதியினரும், எல்லா மொழியினரும் அதைக் கல்யாணக் காலங்களுக்கும் மற்றக் கூட்டங்களுக்கும் பயன்படுத்தி வருவதாகக் கூறினார்.



திரு பத்தர்

திரு பத்தர் தென்னாப்பிரிக்காவில் பிறந்தவர். முதன்முறையாகத் தமிழ் நாட்டுக்கு விஜயம் செய்து திரும்பியிருக்கிறார்.

தாய் நாட்டைப் பார்க்க வேண்டும், தமிழ் நாட்டைப் பார்க்க வேண்டும், தாய்த்தமிழக மக்களுடன் பழக வேண்டும் என்ற ஆவலுடன் வந்த திரு பத்தர் அவர்கள் மிக்க இனிய நினைவுகளுடன் திரும்பியிருப்பார் என்று எண்ணுகிறோம்!

72

அவா, ஆசை, காமம் இம்மூன்றும் ஒரு பொருளைக் குறிக்கும் சொற்கள். அவாவை முற்றிலும் அகற்றி உயிரைக் காத்துக் கொள்ள வேண்டும் என்பது சாஸ்திரம். எல்லா மத சமயங்களிலும் இது பொது உபதேசம்.

ஆசையை முற்றிலும் ஒழிப்பது முடியாத காரியம் என்பது தற்காலத்தார் எண்ணம். ஆசை இருக்க வேண்டும். அதுவே மனித முயற்சிக்குக் காரண வேகம். அதை நல்ல வழியில் செலுத்துவதே முறை என்றும் எண்ணுகிறோம்.

இது சரியேயாயினும் அல்லது முன்னோர் உபதேசமாகிய அவா அறுத்தலே சரியாயினும் ஒன்று நிச்சயம். பொய்ப் பொருள்கள் அதாவது பயனற்ற பொருள்கள் மேல் ஆசை வைக்கலாகாது. வைத்தால் அதனின்று பாப எண்ணங்களும் பாபச் செயல்களும் தோன்றும். வியாதியைத் தீர்ப்பதற்கு அதன் மூல காரணத்தைக் கண்டு அதை நீப்பதைப் போல் பாபத்துக்குக் காரணம் பொய்ப் பொருள் மேல் செலுத்தும் ஆசை,—அதை நீக்க வேண்டும்.

எந்த மனித முயற்சியிலும், அது நன்முயற்சியேயாயினும், அதன் பயனில் பற்று வைத்துக் கொண்டு முயன்றால் காரியம் வெற்றி பெறும் முறையில் நடைபெறாது. பயனில் பற்று வைக்காமல் கடமையைச் செய்ய வேண்டும். ஆனபடியால் அவா அல்லது காமத்தை நீக்க வேண்டும். ஆசையே பற்றுக்கும் பகைக்கும் காரணம். வெற்றியும் தோல்வியும் ஒன்றாகக் கருதிக் கடமைகளைச் செய்ய வேண்டுமானால் பயனில் பற்றில்லாமல் கடமைகளைச் செய்ய வேண்டும். பயனில் ஆசை வைத்துக் கொண்டால் தோல்வி துக்கத்தை உண்டாக்கும். அது மேலும் மேலும் குற்றத்தில் கொண்டு போய் விடும். துக்கத்துக்குக் காரணம் பற்று என்பதை உணர்ந்து அவா அறுத்தலே நல்வழி என்பதைக் காணலாம்.

கீதையிலும் குறளிலும் உபதேசிக்கப்பட்டது பற்று விடுதல். அதற்கு வழி அவா அறுத்தல்.

பிறந்தும் இறந்தும் துக்கச் சுழலில் சிக்கியிருப்பதற்குக் காரணம் அவா. வீடு வேண்டின் அவா அறுத்துவிட வேண்டும்.

> அவாஎன்ப எல்லா
> உயிர்க்குமெஞ் ஞான்றும்
> தவாஅப் பிறப்புஈனும்
> வித்து.

[தவாஅ - தீராத]

பிறப்பைத் தோற்றுவிக்கும் விதை அவா. திரும்பத் திரும்பப் பிறந்தும் இறந்தும் செல்கிறது உயிர். இந்தத் தீராத் துன்பத்துக்குக் காரணம் ஆசை. மரத்துக்குக் காரணம் விதை. அதைப் போல் 'சம்சார'த்துக்குக் காரணம் அவா. ஜனன மரணச் சுழலைத் தீர்ப்பது வீடு.

***

ஆசை வைக்க வேண்டாம் என்றால் பயனற்ற பொருள்களுக்கு ஆசைப்பட வேண்டாம் என்பது. பயனுள்ள பொருள் ஒன்றே—அது ஜனனமரணச் சுழலிலிருந்து தப்புவது. அதற்கு வழி ஆசை நீத்தல்-வேண்டாமை. வேண்ட வேண்டுவது ஒன்றே—பிறவாமை. அதை அடைய ஆசைப்பட வேண்டும்.

> வேண்டுங்கால் வேண்டும்
> பிறவாமை; மற்றுஅது
> வேண்டாமை வேண்ட
> வரும்.

ஆசைப்பட வேண்டிய பொருள் ஏதேனும் ஒன்று உண்டாயின் அது பிறவாமை. அதைத் தவிர வேறு ஏதும் வேண்டலாகாது.

இதை உறுதியாக உணர்ந்த பின் அந்தப் பிறவாமையை அடைவது எப்படி? வேண்டாமை அதாவது அவா அறுத்த மனநிலை — அதற்கு ஆசைப்பட வேண்டும். வேண்டாமையாகிய மன நிலையை விரும்பி விரும்பி மனத்தைப் பண்படுத்தினால்பிறவாமை என்கிற சிறந்த பயனை அடைவோம்.

ஆசைப்படத் தகுந்த ஒரு பொருளுக்கே ஆசைப்பட வேண்டும். அது பிறவாமை. அதை அடையும் வழி வேண்டாமை. அவா அறுத்தல். 'வேண்டாமை' என்றால் எதற்கும் ஆசைப்படாதிருக்கும் மனநிலை.

# வட்டமேஜை

## தேவஸ்தானத்துக்கு வேண்டுகோள்

தினம் நூற்றுக்கணக்கான மக்கள் திருப்பதி வேங்கடவனைத் தரிசிக்கச் செல்லுகிறார்கள். எல்லா மக்களும் பணம் இல்லாமல் தரும தரிசனத்தின் போது பெருமாளைத் தரிசிக்கலாம். ஆனால் பகல் பன்னிரண்டு மணிக்குள் தரிசிக்க விரும்பும் மக்கள் ஏழு ரூபாய் கொடுத்து அர்ச்சனை டிக்கெட் வாங்கினால் அர்ச்சனையைப் பார்த்துப் பெருமாளையும் அருகில் சென்று ஒரு நிமிஷம் பார்த்து விட்டு வரலாம். கோயிலுக்குச் சென்று திரும்புவோர் ஆண்டவன் பிரசாதத்தை மிக முக்கியமாகக் கருதுகிறார்கள். அப்படி யிருக்கும் போது திருப்பதியில் ஏழு ரூபாய்கள் கொடுத்து டிக்கெட் வாங்கும் மக்களுக்கு ஒரு துளசிப் பிரசாதம் கூடக் கொடுப்பதில்லை. திருவேங்கடமுடையானது பிரசாதமாகக் கடைசிப் பட்சம் துளசி தளமாவது கொடுப்பார்களானால் அர்ச்சனை செய்யும் மக்கள் மகிழ்ச்சியுடன் செல்வார்கள்.

சென்னை - 17
29—1—59
ராஜம் வேம்பு

## உண்மையை உணர்வார்களா?

தங்கள் 22-2-59 'கல்கி' இதழில் கூட்டுறவுச் சாகுபடி என்ற தலைப்பில் திரு எஸ். ஒய். கிருஷ்ணசுவாமி எழுதிய கட்டுரையைப் படித்தேன். அதில் மிகவும் விளக்கமாகக் கூட்டுறவுச் சாகுபடி முறையின் கெடுதல்களைக் கூறியிருக்கிறார்.

தாங்கள் எழுதியிருந்த "தொழில் வளம் பெருகுமா?" என்ற தலையங்கத்தையும் படித்தேன். இவை போன்ற நல்ல கட்டுரைகளை இன்றைய அரசியல் தலைவர்கள் படித்து உண்மையை உணருவார்களானால் இவ்வித அவசரக் கோலமான சட்டங்களை இயற்றி மக்களைத் துன்புறுத்த முன்வர மாட்டார்கள்.

எசனூர்
21—2—59
ஈ. எஸ். லக்ஷ்மி நரசிம்மன்

## யாதவர்களின் குரல்

தற்காலம் பால் வியாபாரம் செய்பவர்கள் பெரும்பாலும் எல்லா வகுப்பிலும் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் யாதவர்களைப் போல் தலைமுறையாகச் செய்ததில்லை. மேலும் இதை ஒரு உப தொழிலாக வைத்துக் கொள்கின்றனர். கஷ்டமோ, நஷ்டமோ வந்தால் மாடுகளை விற்று விட்டு வேறு தொழிலில் புகுகின்றனர். ஆனால் பரம்பரையாய் இந்தத் தொழில் செய்து வருகின்ற யாதவர்கள் படிக்காததாலும், படிக்க வசதி இல்லாமையாலும் தலைமுறையாக வேறு வழியின்றிப் பால் விற்பனை செய்து வருகிறார்கள். தங்களுக்குள் கட்டுப்பாடும், தெளிவும் இன்மையால் அரசாங்கத்தை அணுகிச் சலுகை பெற முடியவில்லை.

நம் நாட்டில் உற்பத்தியாகும் மாட்டுத் தீவனமே இங்குள்ள கால்நடைகளுக்குப் பற்றாமல் இருக்கும்போது மாட்டுத் தீனி வகைகள் (வைக்கோலைத் தவிர மற்றவையெல்லாம்) வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு வருகின்றன. அதன் பயனாக மாட்டுத் தீவனங்கள் நம்ப முடியாத அளவுக்கும் யோசிக்க முடியாத அளவுக்கும் விலை ஏறிக்கொண்டே போகின்றன.

இந்த நிலையில் பால் விலையை உயர்த்தலாம் என்றாலோ அரசாங்கம் குறைந்த விலையில் அயல் நாட்டுப் பால் பவுடரை வரவழைத்துப் பவுடராகவும், பாலாகவும் விற்பனை செய்கிறது. பல வருடங்களுக்கு முன் பால் என்ன விலை விற்றதோ, அதே விலைதான் இன்னும் விற்கிறது. இதனால் எங்களில் பலர் மாதக் கடைசியில் மாடுகளுடனும் மனைவி மக்களுடனும் இராப்பட்டினி, பகல் பட்டினி என்று வெளியில் சொல்லிக் கொள்ள வெட்கப்பட்டுக் கிடக்கின்றனர்.

பதினைந்து வருடங்களுக்கு முன் மாட்டுத் தீவனம் விற்றதும், இப்பொழுது விற்று வருவதையும் குறிப்பிடுகிறேன்.

| | 15 வருடங்களுக்கு முன் | இன்று |
|---|---|---|
| 1 மூட்டை கோதுமைத் தவிடு | 6-4-0 | 11-12-0 |
| 1 மூட்டை துவரம் பொட்டு | 1-12-0 | 14-0-0 |
| 1 மூட்டை கடலைப் பொட்டு | 3-2-0 | 16-0-0 |
| 1 மணங்கு எள்ளுப் பிண்ணாக்கு | 1-12-0 | 5-0-0 |
| 1 மணங்கு கடலைப் பிண்ணாக்கு | 1-0-0 | 4-0-0 |
| 1படி கம்பு | 0-6-0 | 0-12-0 |
| 1 படி பயறு | 0-8-0 | 1-2-0 |
| 1 படி கடலை | 0-6-6 | 1-2-0 |

இவ்வளவிலும் பால் விலையை அதிகமாக ஏற்ற முடியவில்லை.

சென்னை
22--2--59
நி. ம. ராமகிருஷ்ணன்

## தெளிவுரைக் கட்டுரைகள்

சமீபகாலமாகத் தங்கள் இதழ்களில் வெளியாகும் நிலப் பிரச்னையைப் பற்றிய தலையங்கங்கள், கருத்துச் செறிவும் முன்னறிவும் கூடியதான தெளிவுரைக் கட்டுரைகளாகவே அமைந்தனவெனின் மிகையாகாது. நாட்டின் நலத்தில் மிகுந்த அக்கறை கொண்ட ஒப்பற்ற ஒரு தலைவரின் கருத்துக்களான அவற்றின் முழுத் திறத்தையும் இந்நாட்டின் பெரும்பான்மையோர் மட்டுமன்றி, அனைவரும் உணரும் காலமும் கண்டிப்பாக வந்தே தீரும்.

சென்னை
21-1-59
மீ. கு. பத்மநாபன்



# பக்தி வயல்



பௌராணிகர்

## 27. வாமன அவதாரம்

"இப்பொழுது நடந்துவரும் மன்வந்தரம் ஏழாவது மனுவாகிய விவஸ்வான் என்பவர் ஆட்சிக்கு அடங்கியது. பிரஹ்லாதன் பேரனை பலி என்ற அசுரராஜன் இம்மன்வந்தரத்தில் ஒரு காலடியால் உலகளந்தப் பெருமானுக்குப் பூமியை அளித்து விட்டு, அடுத்த மன்வந்தரத்தில் இந்திர பதவியை அடைவான்" என்றார் சுகர் பரீக்ஷித்திடம். "ஈசனை ஹரி ஏழையைப்போல் அரசனிடம் சென்று பூமியைப் பிச்சை கேட்பானேன்? மேலும், தனக்குப் பூமியைக் கொடுத்த மன்னனுக்கு ஏன் முக்தி தரவில்லை?" என்று பரீக்ஷித் வினவினார். அதன்மேல் வாமன அவதாரக் கதையைச் சுகர் சொல்லலுற்றார்.

போரில் இந்திரனால் அடிக்கப்பட்ட பலி, பிருகுவம்சத்தில் பிறந்த சுக்ராச்சாரியார் முதலிய அந்தணச்ரேஷ்டர்களின் சக்தியால் மீண்டும் தன் பலத்தை அடைந்தான். கடவுள் மனத்தைக் குளிரச் செய்யவே, "விச்வஜித்" என்ற பெரும் வேள்வியையும் நடத்தும்படி அவர்கள் அரசனுக்கு உபதேசம் செய்தார்கள். வேள்வியின் ஓமகுண்டத்தினின்று ஒரு பொன் தேர் வெளி வந்தது. அதில் வில்லும் எண்ணற்ற அம்புகளும் கவசமும் இருந்தன. பாட்டனாரான பிரஹ்லாதன் பலிக்கு வாடாமலர் மாலையைத் தந்தார். சுக்ரர் சங்கைக் கொடுத்தார். இவ்விதம் போருக்குச் சித்தமாகி அசுரவேந்தன் அளவில்லா வீரம் வாய்ந்த சேனைத் தலைவர் சூழ இந்திரனுடைய தலைநகரமாகிய அமராவதியை முற்றுகை போட்டான்.

அமராவதி அழகுக்கே அகமாய் விளங்கியது. வண்டாடும் சோலைகள், பூவும் கனியும் மலிந்த மரங்கள், அன்னங்கள் அசைந்து வரும் அல்லித் தடாகங்கள், ஊரைச் சுற்றி ஆகாய கங்கை, பொன் விளைத்த மாளிகைகள், இளமை இளளாது! சுடரெனத் துலங்கும் இன்ப மங்கையர், அவர்கள் கூந்தலிலிருந்து சிதறிய மலர்களின் மணம் நிரம்பிய தென்றல், சாளரம் வழியாக வெளியேறும் சந்தனப்புகை, மாடங்கள் மேலிருந்து ஊசலாடும் தோரணங்கள், ஆங்காங்கு அரம்பையர் பாடும் இன்னிசை நாதம், நாட்டியத்தின் கலகலச் சத்தம், பேரிகையும் மத்தளமும் சங்கமும் தாரையும் தரும் பேரொலி— இவ்வளவு சிறோங்கிய விண்ணகரை பலி நாலா பக்கங்களிலிருந்தும் தாக்கினான்.

பலியினுடைய சங்கோசையைக் கேட்ட இந்திரன் அச்சமுற்றான். தன் ஆசிரியன் பிரஹஸ்பதியினிடம் சென்று, "எவ்வாறு பலி எதிர்க்க முடியாத பலத்துடன் நம்மிடம் போராட வந்துளன்? அவனை அணுகவே முடியவில்லை. புவியை விழுங்கி, திசையைக் குடித்து வெளியை எரித்து விடுவான்போல் தோன்றுகிறான்" என்றுரைத்தான்.

அதற்குப் பிரஹஸ்பதி "பிருகு குலத்தைச் சேர்ந்த அந்தணரின் தவப்பயனைத் தனக்கென்று பெற்றிருக்கிறான். ஹரியைத் தவிர எவனும் பலியை எதிர்க்க இயலாது. தற்சமயம் நீங்கள் தலைமறைவாய்ச் சென்று விடுவதே நலம்" என்று உபதேசம் செய்தார். தங்களுக்குத் தோன்றிய தோற்றமெடுக்கும் திறமை வாய்ந்த தேவரும் அவர் சொல்லுக்கு இணங்கி விண்ணுலகை விட்டு வெளியேறினர். பலி அமராவதி நகரத்தில் பிரவேசித்து, மூவுலகையும் ஆளலானான்.

தங்களுடைய சீடனுக்கு வந்த பெருமையைப் பார்த்து பிருகு குலத்து அந்தணர்கள் களித்தனர். அவன் பதவி நழுவாது நிலைப்பதற்கு நூறு அச்வமேத யாகங்கள் செய்யுமாறு அவனிடம் சொன்னார்கள். பலியும் அசுவமேதத்தை ஆரம்பித்தான்.

கச்யப முனிவருக்கும் அதிதி என்ற தக்ஷன் மகளுக்கும் பிறந்தவர்கள் அல்லவா தேவர்கள். தனது மைந்தருக்கு வந்த எளிமையை எண்ணி அதிதி மனம் வருந்தினாள். சமாதி கலைந்து எழுந்த முனிவர் தம் மனைவி சோர்ந்திருப்பதைக் கண்டு அதன் காரணத்தை வினவினார். தன்னுடைய செல்வமும் இருப்பிடமும்

புகழும் பெருமையும் அசுரரால் அபகரிக்கப்பட்டதை அவரிடம் முறையிட்டு, அவைகளைத் தானும் தன் புதல்வரும் திரும்பவும் அடைவதற்கு வழிகாட்ட வேண்டுமென்று விண்ணப்பம் செய்தனள்.

"ஹரியினிடம் பக்தி செய்வதைத் தவிர மேலேறுவதற்கு வேறு ஒரு வழியும் இல்லை. மக்கட் பேற்றை அடைவதற்கென்று பிரமன் எனக்கு ஒரு நோன்பை முன் சொல்லியிருக்கிறார். அது நாராயணனுக்குப் பிரியமானது. அதற்கு 'பயோவ்ரதம்' என்று பெயர். அந்த நோன்பை நோற்று நாராயணனை மகிழச் செய்" என்று கசியபர் தம் மனைவிக்கு அவ்விரதம் செய்ய வேண்டிய வழியை விவரித்து உரைத்தார். அதிதியும் அவ்வாறே அந்த நோன்பை இடைவிடாது அனுசரித்தனள். நோன்பின் இறுதியில் தம் சொந்த ரூபத்துடன் விஷ்ணு அவள் முன் தோன்றினார். ஆனந்தக் கண்ணீர் சொரிந்து அதிதி அவருக்குத் தண்டனிட்டாள். "தேவரீர் மன மகிழ்ந்தால் மாந்தருக்கு நீடூழி வாழ்வும், சிந்தித்த ரூபமும், அளவிலாச் செல்வமும், மூவுலக ஆட்சியும், யோக சித்திகளும், அறம் பொருள் இன்பமும், மாறாத மெய்யறிவுமே கிடைக்கும்: எதிரியை வெல்லும் திறமை கிடைப்பது எம்மாத்திரம்" என்று புகழ்ந்தாள். அதற்கு ஹரி பின் வருமாறு பதில் அளித்தார்.

"விண்ணவர் அன்னையே! அசுரரால் வீட்டையும் நாட்டையும் இழந்து இன்னல் மேவிட்டிருக்கும் உன் புதல்வர் படும் பாட்டை நான் அறிவேன். எதிரியை வென்று மீண்டும் பதவியை அடைந்து அமராவதியில் ஆட்சி செலுத்தும் மைந்தரோடு வாழ விரும்புகிறாய். ஆனால் இப்பொழுது இவ்வசுரர் வெல்ல முடியாத வீரத்துடன் விளங்குகின்றனர். நற்காலம் எய்திய அந்தணர் காப்பில் வாழ்ந்து வருகின்றனர். போர் செய்து பயனில்லை. ஆனால் என்னை வழிபட்டது வீணாகாது. உனக்கே மகனாய்ப் பிறந்து தேவரைக் காப்பாற்றுவேன்."

* * *

திருமாலும் தேவருக்குத் தாயான அதிதிக்குப் பிறந்தார். சங்கு, சக்கரம், கதை, தாமரை ஒருங்கே பற்றிய நாற்கைகளும், கார்முகில் மேனியும், மஞ்சள் பட்டாடையும், மார்பிலே ஸ்ரீவத்ஸம் என்ற மருவும், காதிலே மகர குண்டலமும், தலையிலே கிரீடமும், இடையிலே மேகலையும், கைவளையும் தோள்வளையும், கழுத்திலே வண்டுசூழ் வன மாலையும் கௌஸ்துப மணியும், வாய்ந்த தன்னுருவொடு அவதாரம் செய்து, கசியபர் இருளைப் போக்கும் ஜோதியுடன் விளங்கினார். விண்ணுலகும் மண்ணுலகும் மெய்மறந்து ஆனந்தத்தில் ஆழ்ந்தன. திருமால் பிறந்தது ஆவணிமாதத்து வளர்பிறை துவாதசி தினம். சந்திரன் திருவோணத்தில் இருக்கும் வேளை. அதுவும் திருவோணத்தின் முதல் அம்சமான அபிஜித் என்ற நட்சத்திரத்தில்; சூரியன் நடுப்பகலில் பிரகாசிக்கும் தருணம். இதற்குப் பெரியோர்கள் "விஜய துவாதசி" என்ற பெயரை வழங்கியிருக்கின்றனர்.

பரமன் தன்னுருவோடு தனக்குப் பிறந்ததைக் கண்ணுற்ற அதிதி பரவசம் அடைந்தாள்; முனிவரும் மெய்சிலிர்த்தார். "போற்றி, போற்றி" என்று புகழ்ந்தார். அப்பொழுது, தாய் தந்தையர் கண் முன்னே, நாடகத்தில் ஆடும் நாயகனைப்போல் நாராயணன் திடீரென்று உருமாறி, அந்தணச் சிறுவனாய்த் தோன்றினார். இவ்விடத்தில்,

**"நீலநிறத்து நெடுந்தகை வந்(து) ஓர்**
**ஆல்அமர் வித்தின் அருங்குறள் ஆனான்"**

என்கிறார் கம்பர். அதாவது இறுதியற்ற மேனியோடு கூடிய கடவுள் பெரிய மரத்தைத் தன்னுள் அடக்கியிருக்கும் ஆலம் வித்தின் சிறிய தோற்றம் அளித்தார் என்பது பொருள். அந்தப் பாலகனுக்கு முனிவர்கள் ஒன்று கூடி, கசியபர் தலைமையில், எல்லாச் சடங்குகளையும் செய்து வைத்தனர். உபநயனம் செய்யுங்கால், அம்மாணவனுக்குக் கதிரவனே காயத்ரி மந்திரத்தை உபதேசம் செய்தார்; தேவருக்காசிரியரான பிரஹஸ்பதியே பூணூலைத் தந்தார்; தந்தையான முனிவர் முஞ்சியையும் (ஒருவித தர்ப்பையால் செய்த அரைஞாண் கயிறு), பூதேவி மான் தோலையும், சந்திரன் தண்டத்தையும், தாயார் உடுக்கத் துண்டையும், ஆகாயதேவதை குடையையும் கொடுத்தார்கள். பிரமன் கமண்டலம் தந்தார். சரஸ்வதி ஜபமாலை அளித்தனள். பிட்சை எடுக்கப் பாத்திரம் குபேரன் கொடுத்தான். பார்வதி தானுக முன்வந்து பிட்சையும் இட்டனள். இவ்விதம் நிகரற்ற பெருமையுடன் அந்த அந்தணச் சிறுவன் தனது தினசரிக் கடன்களை ஓமம் வளர்த்து ஒருங்கே செய்து வந்தான்.

பலி என்ற அசுர வேந்தன் அசுவமேத யாகம் செய்கிறான் என்ற செய்தியைச் செவியுற்ற சிறுவன் அவ்விடத்துக்குத் தானும் புறப்பட்டான். வாமனரூபம் எடுத்த மாதவன் சென்ற கோலத்தைக் கம்பர் தமிழில் அழகாய்ப் பாடுகிறார்:-

"முப்பிரி நூலினன்,
முஞ்சியன், விஞ்சை
கற்பதோர் நாவன்,
அனற்படு கையன்.

அற்புதன், அற்புத
ரேஅறி யுந்தன்
சிற்பதம் ஒப்பதோர்
மெய்க்கொடு சென்றான்."

1 அந்தணர் வலக்கையில் நெருப்பு இருப்பதாகப் பழைய நம்பிக்கை.

2 ஒரு காணுக் குருவான உடலொடு; பேரறிவை அடைந்த உடலொடு.

இந்த மாய மாணுக்கனை ஹரி நர்மதா நதியின் வடக்குக் கரையில் அமைக்கப்பட்டிருந்த, பலியின் யாக சாலையில் நுழைந்ததும், இவருடைய ஜோதியினால் மற்றவிடமெல்லாம் மங்கி விட்டது. இவரென்ன, சூரியனோ, அக்னி பகவானோ, இல்லை, ஸனத்குமாரரோ என்று அனைவரும் ஆலோசிக்கலாயினர். எழுந்து நின்று மன்னவனும் அந்தணரும் வந்தவரை வரவேற்றனர்; அவரை ஆசனத்தில் அமரச்செய்து, கால் கழுவித் தருந்த உபசாரங்களைப் பலி செய்தான்.

"தவமே உருவெடுத்தாற்போல் எழுந்தருளிய அந்தணனே! உன்னை வரவேற்கிறேன். என்னால் ஆவது என்னவென்றுரைப்பாய். இன்றே உன் வரவால் என் முன்னோர் கடைத்தேறினர். என் குலம் மேலுற்றது. இவ்வேள்வி நிறைவுற்றது. உனது சிறு காலடியால் என் நாடு புண்ணியம் அடைந்தது. பசுவோ, தங்கமோ, பொருள் நிரம்பிய வீடோ, அன்னமோ, பானமோ, மணம் செய்து கொள்ள மங்கையோ, செழிப்புற்ற கிராமங்களோ, யானையோ, குதிரையோ, தேரோ, எது வேண்டுமானாலும் கேள், தருகிறேன்" என்று பணிவுடன் பேசினான் அசுர மன்னன் பலி.

அதற்கு ஹரி பதில் கூறினார்:-

"குலத்துக்கு ஏற்றவாறுமொழிந்தனை. பிரஹலாதன் பேரனிடம் இது விந்தையன்று. அண்டினவனை ஆதரிக்காமலும் கொடுப்பேன் என்பதைக் கொடாமலும் உன் குலத்தில் யாரும் இருந்ததில்லை. உன் வம்சத்தில் பிறந்த ஹிரண்யாக்ஷனுடைய பெரும் பலத்தை அவனைக் கொன்ற விஷ்ணுவே மெச்சினார். உடன் பிறந்தவனை மாய்த்தவனைக் கொல்வதற்கு ஹிரண்யகசிபு ஹரியைத் தேடாத இடம் இல்லை; ஆனால் மாயாவிகளுள் மேலோனான மாதவன் அவன் உள்ளத்திலேயே புகுந்து ஒளிந்து கொண்டார். ஹரி அழிந்து போனதாக அவன் எண்ணினான். இறந்தபின் பகையில்லையென்று நிம்மதி அடைந்தான். உன் தந்தை விரோசனன் அந்தண வேடம் பூண்டு வந்த விண்ணவரின் வஞ்சகத்தை அறிந்தும் அவர் கேட்ட தன்னுயிரை அளித்தான். ஆகவே, அசுரருக்கு அரசனே, என் கால் அளவால் மூன்றடி நிலம் தருவாய். வேணளவு வேண்டுவதில் தவறு ஒன்றுமில்லை என்பது சான்றோர் கொள்கை" என்றனன் அந்தணன்.

மன்னவன் நகைத்தான். "தன்னலம் தெரியாத சிறுவனாயிருக்கிறாய். உலகெலாம் ஆளும் அரசனாகிய என்னை அண்டினவன் மறுபடியும் ஒருபொழுதும் ஒன்றையுமே வேண்டலாகாது. உன் வாழ்வுக்கு வேண்டிய நிலம் தருவேன். பெற்றுக் கொள்" என்றான்.

அதற்கு ஹரி "மன்னவனே! ஆசையை அடக்காதவனுக்குப் போதும் என்பதும் உண்டோ? மூன்றடி போதாதவனுக்கு நாடெல்லாம் போதாது: நாட்டை அடைந்து புவியெலாம் கோருவான்; ஆசையால் அழிந்த அரசர் அனேகர்; ஆசையை வளர்ப்பது பிறவிக்குக் காரணம்; அழிப்பது முத்திக்கு வழியாம். தேடாது கிடைப்பதில் களிப்புறுவோன் அந்தணன்: போதாதென்று பரிதவிக்கும் பிராமணனுடைய பெருமையெலாம் நனைந்த நெருப்பென நசித்து விடும். ஆகவே நான் கேட்ட மூன்றடியைக் கொடுப்பாய்" என்றார்.

பலி நகைத்தான். 'வேண்டியதை எடுத்துக் கொள்' என்றான். தானம் செய்வதற்குக் கையில் நீர் நிரம்பிய பஞ்சபாத்திரத்தை எடுத்தான். அச்சமயம் அரசகுரு சுக்கிரர் அவனைத் தடுத்தார். "இக்குறளன் விஷ்ணுவேயன்றி வேறொருவனல்லன். தேவருக்கு நன்மையை நல்கவே வந்துளன். இந்த மாய மாணவன் உன்னை அழித்து விடுவான். அசுரருக்கு ஆபத்து அண்டி வருகிறது. மூவுலகையும் தன் காலால் அளந்து விடுவான். எல்லாம் கொடுத்து விட்டு எவ்வாறு வாழ்வாய்? முதல் அடியால் புவியையும் அடுத்த அடியால் விண்ணுலகையும் அளந்துவிட்ட விஷ்ணுவுக்கு மூன்றாவது அடி வைக்க எங்கிருந்து இடம் கொடுப்பாய்? உன் வாக்கைக் காப்பாற்ற முடியாமல் மயங்கிப் பாபத்துக்கு ஆளாவாய். தனக்கு மிஞ்சிய தருமம் இல்லை. உடல் என்ற மரத்துக்கு அறம் என்பது கனி. உடல் போனால் அறம் ஏது? மாதரை வசமாக்கவும், வேடிக்கைக்காகவும், மணத்தை முடிக்கவும், தன்னுயிரைக் காப்பாற்றவும், ஆவினத்தையும் மறை ஓதுவோரையும் தீங்கு வராது பாதுகாக்கவும், பொய்மை பேசுவதில் பாபம் இல்லை" என்று நல்வார்த்தைகள் உரைத்தார், சுக்கிரர்.

# கவர்ச்சியுள்ள அழகான

## காண்கிரீட் வீடுகளை

# ஏசிசி அல்லது சங்கர் பிராண்டு ஸிமெண்ட்

## கொண்டு கட்டுங்கள்



கான்கிரீட் சுவர்கள், கான்கிரீட் தளம் மற்றும் கான்கிரீட் கூரைகளால் ஆன வீடே, பக்காவாக அமைந்த வீட்டிற்குள்ள முக்கிய மூன்று அம்சங்கள் கொண்டவையாகும். முதல் அம்சம் சிக்கனம்: அதாவது முதலீடு செலவு மிதமானதே, தவிர பராமரிப்புச் செலவும் குறைவு, தீ விபத்தினின்றும் பாதுகாப்பு ; காரணம் கான்கிரீட் எரியாது. உறுதியானது ; ஏனெனில் கான்கிரீட்டின் மூல குணமே வலுமையாகும்.





**நிலைத்திருக்கும் ஆக்க வேலைக்கு ஏசிசி அல்லது சங்கர் பிராண்டு ஸிமெண்ட் உபயோகியுங்கள். இவை கண்ட்ரோல் விலையில் ஏராளமாகக் கிடைக்கின்றன.**

* உங்கள் கட்டிட பிரச்னைகளைத் தீர்க்க எங்கள் இலவச யோசனைக்கு கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: தி கான்கிரீட் அஸோஸியேஷன் ஆப் இந்தியா, 9, மவுண்ட் ரோடு, மதராஸ்.





தி ஸிமெண்ட் மார்க்கெடிங் கம்பெனி ஆப் இந்தியா பிரை. லிட்.
தி அஸோஸியேடெட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்
தி இந்தியா ஸிமெண்ட்ஸ் லிமிடெட்

SISTA'S-C[illegible]

# வேதகாலத்திலிருந்தே....



"तंतुं तन्वन्, रजसो भानुमन्विहि,
ज्योतिष्मत:
पथो रक्ष धिया कृतान् ॥
अनुल्बणं वयत,
जोगुवामपो, मनुर्भव, . . ."

ऋग्वेद



கதிரொளி நகைக்கும்
அதிமெருகு நூலை நூற்க வேண்டும்;
முடிச்சு முரணையற்ற
வடிவமை நூலையே நெய்ய வேண்டும்.
ஆம், ஞானம் வகுத்தளித்த
நல்வழியைக் காத்து
சிந்தனையாளராய்த் திகழுங்கள்
இதுவே—
கவிஞர் பெருமக்கள் காட்டிய வழி

ரிக் வேத சுலோகம் தழுவியது




## கவின்மிகு வனப்பு
# கைத்தறி
## நெசவே

**அகில இந்தியக் கைத்தறி போர்டு**
ஷாலிமார் ஹவுஸ், விட்டட் ரோடு, பம்பாய்

DA-58-414



# குலத்துரோகி

மலையாளம்: எஸ்.கே. பொற்றெக்காட்

தமிழாக்கம்: சௌரி

நல்ல இருட்டு. தலைக்கு மேலே உள்ள நாட்டிலே மின்மினிகள் கூட்டம் கூட்டமாக மரங்களுக்கிடையே சஞ்சரித்துக் கொண்டிருந்தன.

ஆப்பிரிக்கா நாட்டில், 'காங்கோ' மலைக் காட்டில், பிரம்புக் கொடிகளும், புதர்களும், நெடிதுயர்ந்த தருக்களும் சூழ்மிய ஓர் இடத்தில், ஒரு மரத்தின் உச்சாணியில் உட்கார்ந்து காவல் காத்துக் கொண்டிருந்தான் சாற்கன். பத்திரமான இடம்தான் அது. இருந்தாலும், காவற் கடமை குடும்பத் தலைவன் என்ற முறையில் சாற்கனுக்கு உண்டு. ஆறடி உயரம்; பத்துச் சாக்கு உப்புக்கு ஒப்பான உடற்பாரம்; கிழப்பிராயம்; வலுக்குன்றாத மேனி நலம் — இவ்வளவுக்கும் உரித்தான சாற்கன் ஒரு மனிதக் குரங்கு.

உச்சாணிப் பகுதியில், கிளைக் கரங்களுக்கு இடுக்கில், பிரப்பங் கொடிகளைக் கட்டி, அதன் மேல் உலர்ந்த இலைகளைப் பரப்பி மெத்தையாக்கிய இடத்தில், சாற்கனின் இரு துணைவியரும், நாலு மக்களும் சுகமாக உறங்கிக் கொண்டிருந்தார்கள்.

அக்கொடிய கானகத்திலே, இழைந்தும் ஆர்த்தும் கேட்கிற பயங்கர ஒலங்களைக் கவனமாகக் கேட்டுக் கொண்டே, நிசிப்பொழுதைக் கழித்தாக வேண்டும். பலவும், பரிச்சயமுள்ள குரலொலிகள்தாம்.

''ஹூம்ம்ம்'' இது மலை முழக்கிப் பறவையின் அலறல்.

''க்ரிணிம், கிரிணிம், கிரிணிம்!'' 'காட்டுச்சீ விடு'களின் இன்னொலிகள்.

''ஹ்ராங்! ஹ்ராங்!...'' தொலைவில் கேட்கும், சிங்கங்களின் கர்ஜனை முழக்கங்கள்.

சாற்கன், தன் பிப்பாய் வயிற்றைச் சொரிந்து விட்டுக் கொண்டு, செவிகளைக் கூர்மையாக்கிக் கொண்டான். சிம்மங்களுக்கோ, யானைகளுக்கோ அவன் அஞ்சுவதில்லை. ஆனால், 'கரும்புலி' இருக்கிறதே (சிறுத்தை) - மகா நீசனான அற்பத்திருடன்; அதற்குத்தான் பயப்பட வேண்டியிருக்கிறது. சிறிது கவனப் பிசகாக இருந்து விட்டால் போதும் வஞ்சகக்கள்ளன் பதுங்கி வந்து, குட்டிகளைக் கவ்விக்கொண்டு ஓடி விடுவான். இதற்காகவே சாற்கன், எங்கேயாவது அலங்கல் ஏற்படுகிறதா என்று கண்ணும் கருத்துமாகக் காவல் புரிகிறான்.

சாற்கனின் சிந்தனையில் பல நினைவுகள் காட்சி தந்து கரைந்து கொண்டிருந்தன. வளர்ந்த பிரம்பும், எழுந்த கொழுந்துகளுமாகச் சீறிக் கொண்டு எரிந்த தீநாக்குகள் நினைவுக்கு வந்தன. சாற்கன் பீதியுடன் கண்களை மூடிக்கொண்டு விட்டான். சில நாட்களுக்கு முன்பு நடந்தது. ஆப்பிரிக்கக் குடிமக்களான பிக்மிகள் வாழும் பகுதிக்கு அருகிலே, ஒரு அடர்த்தியான தோப்பில் உணவு வேட்டைக்காகச் சாற்கன் படையெடுத்த போதுதான் அந்தத் தீப்பிழம்பைக் கண்டான். நடுநடுங்கி, வந்த சோடு தெரியாமல் திரும்பி ஓடி வந்து விட்டான். இடி மின்னல்களைக் கண்டாலும் அவனுக்கு அச்சம்தான். மின்னல் பளிச்சிட்டால், அவன் பீதிப் படபடப்புடன், பிரப்பங் கூண்டுக்குள் விழுந்து, முகத்தைத் தொந்திக்குள் புதைத்துக் கொண்டு விடுவான்.

தலைக்கு மேலே, உள்ள மனிதர்வாழ் பகுதியில் நடக்கும் பல கோலாகலங்களும் சாற்கனின் நினைவுக்கு வந்தன. அங்கே எல்லாரையும்விட வலிமிக்க ஒரு கொரில்லா வாழ்வதாக அவன் கேள்விப்பட்டிருக்கிறான். அந்தப் பலசாலியைக் காண வாய்க்கவில்லை அவனுக்கு. இடிமுழக்கம் அதிரும்போதெல்லாம், அந்த வலியவன்தான் பற்களை நெரித்து அட்டகாசம் புரிந்து வருகிறான் என்றே சாற்கன் நம்புவான்.

தலைக்கு மேலே உள்ள நாட்டைச் சாற்கன் கவனிப்பது வழக்கம். இன்றும் அந்த ஆசை எழுந்தது. மிக உயரமான மரமொன்றின் உச்சாணிக் கிளையில் ஏறி உட்கார்ந்து கொண்டான். கணக்கற்ற மின்மினிகள் கண்ணுக்கெதிரே ஊசலாடின. கையை விரித்து வலையாக வீசிப் பிடித்தான். பல பூச்சிகள் சிக்கியிருக்குமென்ற நம்பிக்கையுடன், மெல்லத் திறந்தான் விரல் பொறியை. வீண்! ஒன்றைக் கூடக் காணோம்!

பூமி முழுவதிலும் வெண்மையான சாற்றைப் பொழிந்து கொண்டே, ஓர் அதிசயக் கனி, ஜகஜ்ஜோதியாக எழும்பி வருவதைக் கண்டான். அந்தப் பராக்கிரமசாலியான கொரில்லாவின் ஆகாரமாகத்தான் இருக்க வேண்டும் இந்தப் பழம்.

சாற்கன், திக்கெல்லாம் தலையைச் சுற்றிப் பார்த்தான். 'அதோ, பல வண்ணங்கள் மின்னும் ஒரு கொடி! பகல் வெளிச்சம் புறப்படுகிற திசையில், இருள் மூட்டம் பரவுவதற்கு முன்பே படர்வது தெரிகிறது. அந்த அதிசயப் பழம், இந்த அற்புதக் கொடியில் காய்த்ததாகத் தான் இருக்க வேண்டும். ஆஹா! அந்தக் கனி எனக்கும் தின்பதற்குக் கிடைத்தால்?....'

பேய்மாரியாக மழை கொட்டுவதுபோன்ற சத்தம் சாற்கனின் இனிய மனோரதத்தைத் தடைசெய்தது. கையைவெளியேநீட்டிப்பார்த்தான்; மழை இல்லை. சரிதான்; காட்டா

னைகள் ஒரு பெருங் கூட்டமாக, காட்டைக் கலைத்துக் கொண்டு செல்லும் சத்தம்தான் அது. சற்றுத் தொலைவில், அவை போவதையும் பார்த்தான் சாத்தன். 'பாவம்! இன்று அந்த ராக்ஷஸக் கொரில்லாவுக்குப் பட்டினி தான். வானத்து ஒளிக்கனி மறைந்தே போய் விட்டது. நிலவெளி யெங்கும் காரிருள் குப்பி விட்டது.'

சாத்தன் கொட்டாவி விட்டான். கண்ணைச் செருகுகிறது; உறக்கக் கிறக்கம். ஆனால், தூங்க முடியாது. கூடவும் கூடாது. அவன் முதல் மனைவி 'கிரீங்' பிரசவித்து மூன்று மாதங்கள் தான் ஆகியிருக்கின்றன. கரும் புலிகள் தருணம் பார்த்துக் கொண்டிருக்கும்; சற்று அயர்ந்தால் போதும். சுற்று முற்றும் பரபரப்புடன் பார்த்துக் கொண்டான் சாத்தன். யானைகள் அலுங்கும் சத்தம்தானோ என்ற பிரமை அவனுக்கு.

சாத்தனின் இரண்டாந்தாரம் இப்போது நிறைமாதம்; 'கராங்' என்று அழைக்கப்படுபவள். அவளைப் பற்றி அவன் அடிக்கடி நினைப்பான். யுவதி; நல்ல அழகி. தொலைவில், வேறொரு காட்டில் பெரிய குடும்பத்தில் பிறந்து வசித்து வந்தவள் கராங். சாத்தன் அங்கிருந்து அவளை மயக்கி, எப்படியோ தட்டிக் கொண்டு வந்து விட்டான். மிக ஆபத்தான சாகஸச் செயல் அது. நினைத்தாலே மயிர்க் கூச்செறியும். இந்த இளையவளுக்காகச் சாத்தன் போகாத இடமெல்லாம் போய், அபூர்வமான காய்கனி கிழங்குகளைச் சேகரித்து வருவான். அன்பார் அளிக்கும் உண்டிப் பொருள்களை இன்பக் காதலி ஆவலுடன் விழுங்குகிற காட்சியை - ஆஹா! - எப்படி வர்ணிப்பது! சாத்தன் சொக்கிப் போவான். 'கராங்'கின் ஒவ்வொரு அங்கத்துக்கும் பிரத்தியேகப் பொலிவு. கவர்ச்சி. மலை மடந்தை அவள்; இதனால்தானோ என்னவோ, அவள் அப்படி ஒரு எழிற்கன்னியாகத் துலங்கிக் கொண்டிருக்கிறாள்!

ஒரு சங்கடம்; கிரீங் இருக்கிறாளே - மூத்தவள். அவளுக்கு இந்த இளையவளைக் கண்டாலே வெறுப்பு - வெறும் அசூயை தான் காரணம். புதுமண மங்கை, உணர்ச்சி அலைகளுக்கு நாணத் திரையிட்டுக் கொண்டு ஒட்டியும் ஒதுங்கியும் பழகும் இளையவளை, சந்தர்ப்பம் வாய்க்கும் போதெல்லாம் மூத்தவள் படாதபாடு படுத்தி வைப்பாள். நாய்க்குணம் படைத்த பெண்சாதி! சாத்தனுக்கோ குறுக்கிடத் தைரியம் கிடையாது. துளித் தடை செய்தால் போதும், மூத்தவள் விளாசி விடுவாள் தன் விசுவரூபத்தைக் காட்ட. மறுகணமே, புருஷனெனப்பட்ட சாத்தன் குன்றிக் குறுகிக் கிடக்க வேண்டும். இராப்பொழுது முழுவதும் ஏசலும், இடி சொல்லும். இளக்காரமுமாக மொணமொணவென்று துளைத்து விடுவாள். 'தொலைந்து போகிறான், பழிகாரி' என்று பொறுத்துப் போவதொழிய, வேறு வழி கிடையாது. மேலும், கிரீங் மூன்று குழந்தைகளுக்குத் தாய்; இந்தத் தகுதிக்காகவும் சாத்தன் மூத்தவளை மதித்துப் பவ்யமாகப் பணிந்து போகிறான்.

நிம்மதியாக உறங்கிக் கொண்டிருக்கும் தன் அருமந்த மக்களை உவகையோடு பார்த்தான் சாத்தன். எவ்வளவு அழகான குழந்தைகள்! மூத்த இரு பிள்ளைகளும் சற்று விவரம் தெரிந்தவர்கள்; மகா விஷமம். சேகரித்து வைத்திருக்கும் காய்கனிகளை, உச்சிப் பொழுதில் புசித்து விட்டு, தரையில் மல்லாந்து படுத்தபடியே அவர்கள் இளைப்பாறுவதும், தூங்கி எழுந்ததும் மரக்கிளைகளில் 'சர்க்கஸ் வித்தை' காட்டி விளையாடுவதும், நடு நடுவே தமக்குள் குஸ்தி போட்டுக் கொண்டு, கட்டிப் புரளுவதும், சாத்தனுக்கு நினைவு வந்தன. கடைசிக் குழந்தைக்கு நாலு மாதப் பிராயம்; இதற்குள்ளேயே அவள் படுத்துகிறபாடு! இன்னும் சில மாதங்கள் போனால், இந்த இடத்தை விட்டு ஜாகை மாற்றியாக வேண்டும் என்று சாத்தன் தீர்மானித்து விட்டான். இளையவள் கராங்கின் ஊருக்குத்தான் குடி போக வேண்டும். பத்திரமான மலைப் பிராந்தியம் அது. மேலும், இந்த இடம் அவ்வளவு பத்திரமான



நல்ல. மலையடிவாரத்திலுள்ள நாட்டிலிருந்து, சில துஷ்டர்கள் எதற்காகவோ இந்தப் பகுதிக்கருகே சுற்றிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களைக் கண்டாலேயே சாத்தனுக்கு அடங்கா வெறுப்பு. என்ன ஜன்மங்களோ! உடம்பெல்லாம் வழித்துவிட்ட மாதிரி, ஒரு உரோமம்கூட இல்லாத வழுக்கைத் தோற்றம். "இவர்களை நம்பக்கூடாது; இவர்களுக்கு 'மனிதர்' என்று பெயர்; சூது வாது நிரம்பிய துஷ்டப் பிராணிகள். இந்த இரு கால் மிருகங்கள் இருக்கிற திசையிலேயே நாம் வாழக்கூடாது; இல்லையோ, நம் குலமே அழிந்து விடும்." இப்படிப் பல தகவல்களைச் சாத்தனுக்கு அவன் தந்தை அறிவுறுத்தியிருக்கிறார். மனிதருக்கு வாய் விட்டுச் சிரிக்கத் தெரியுமாம்! சாத்தன் தானும் அப்படியே செய்து காட்ட வேண்டுமென்று, உற்சாகத்துடன் பல்லை இளித்துச் சிரிக்க முற்பட்டான்.

அப்போது, தொலைவில ஒரு புது விதச் சத்தம் நெருங்கி வருவது கேட்டது. முதலில் அதை அவன் பொருட்படுத்தவில்லை. பிறகு, கவனத்துடன் கவனிக்கத் தொடங்கினான். 'காட்டுச் சீவீடு'களின் குரல்களல்ல அவை; மரங்களை முட்டித் தள்ளிக் கொண்டு திரியும் மத [வே]ழங்களின் பிளிறல்களுமல்ல; பின்?....

சாத்தன் கைகளை வீசி ஆட்டிக் கொண்டு உச்சாணிக் கிளையில் ஏறினான். நாலா பக்கமும் பார்வையைப் பரப்பினான். சற்றுத் தொலைவில், காட்டின் இடைவெளியிலே உள்ள சமதரையில், தீ கொழுந்து விட்டு எரிவது தெரிந்தது. சாத்தன் பீதிப்பட்டு, கண்களை மூடிக் கொண்டான். சற்று நேரம் கழித்து, அத்தாம்வரை வெளியைக் கவனித்தான். இச்

சுவாலைகளைச் சுற்றிலும், பல இரு கால் மிருகங்கள் ஆடிப்பாடிக் கொண்டு வலம் வந்து கொம்மாளம் அடித்துக் கொண்டிருந்தன.

செம்மண்ணும் சாம்பலும் கொண்டு தீட்டிய சிறு களம்; அதைச் சுற்றிலும் களி நடனக் குதிப்பில் திளையும் பிக்மிகள், அரையிடத்தை மிருகத்தோல் கொண்டு மறைத்திருந்தனர். கொரில்லா வேட்டையில் தமக்கு வெற்றி கிடைக்க வேண்டுமென்று தம் மூதாதையருக்குப் பூசனை செய்யும் வகை





## அருள் வாக்கு

ஒரு உத்தரணியில் தண்ணீர் இருக்கிறது. ஒரு பஞ்சபாத்திரத்திலும் தண்ணீர் இருக்கிறது. பஞ்சபாத்திரத்திலுள்ள நீர் உத்தரணி நீரைக் காட்டிலும் பெரிது. செம்புத் தண்ணீர் பஞ்ச பாத்திரத்தைக் காட்டிலும் பெரிது. அப்படியே அண்டாத் தண்ணீர் செம்புத் தண்ணீரைக் காட்டிலும் பெரிது. அதைவிடப் பெரியது கிணற்று நீர். அதைக் காட்டிலும் ஆற்று நீர் பெரியது. அதைவிடச் சமுத்திரத்தின் தண்ணீர் பெரிது. அதைக் காட்டிலும் பெரிது ஒன்றுமில்லை. நாம் உத்தரணித் தண்ணீருக்குச் சமானம். இறைவன் சமுத்திரத்துக்குச் சமானம். நாம் சிறிதளவு கனத்தைத்தான் தூக்க முடியும். மூட்டை சுமப்பவன் நம்மைக் காட்டிலும் அதிகமாகத் தூக்குவான். மாடு அவனைவிட அதிகம் சுமக்கும். ஒட்டகம் மாட்டைக் காட்டிலும் அதிகம் சுமக்கும். நமக்கு ஒரு எல்லையுண்டு. கடவுள் எல்லையற்றவர். அவர் ஞானக் கடல். நாம் அவருடைய சொத்து.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

யில் நடக்கும் கூட்டுக் கூத்து இது. காப்பிரிகளின் கூத்துக் களத்துக்கு அருகிலே சிறு கூடாரம் அமைக்கப்பட்டுள்ளது. அதனுள் ஒரு வெள்ளையர் உட்கார்ந்து, பிக்மிகளின் குதூகலக் கூத்தை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார். ஜாக்ஸன் என்று பெயர். வேட்டைக்கு ஏற்பாடு செய்தவர் அவரே.

இரவு வெகு நேரம் கழித்துத் தூங்கினாலும் மறுநாள் விடிவேளைக்கு முன்பே ஜாக்ஸன் எழுந்தார். நாலு 'பூனா' சுதேசிகளும், பதினொரு பிக்மிகளும் வேட்டைக்கான ஆயுதங்களுடன் தயாராக வெளியே நின்று கொண்டிருந்தார்கள். சுருக்குக் கயிறுகளைச் சுமந்துகொண்டு, இரு காப்பிரிகள் முன்னே நடந்தார்கள். அவர்கள கைகளில் கோடரியும் வெட்டுக்கத்தியும், மற்றும் சில ஆயுதங்களும் இருந்தன. பின்னால், துப்பாக்கியுடன் ஜாக்ஸன் துரை வந்தார். உணவுக் கூடைகளும், தண்ணீர்க் குப்பிகளும் சுமந்துகொண்டு இரு பிக்மிகள் துரைக்கு இருபுறத்திலும் நடந்தார்கள். வில், அம்பு, வேல் கம்புகளுடன், மற்றப் பிக்மிகள் பின்னணிப்படையாக அணி வகுத்து வந்தார்கள்.

நடுக் காட்டுக்குள் வந்ததும், "இந்தப் பக்கத்திலேதான் கொரில்லாக் குரங்குக் குடும்பம் வசிப்பதாகத் தெரிகிறது. மரங்களை வெட்ட ஆரம்பிக்கலாம்" என்றார்.

காப்பிரிகளும் பிக்மிகளும் அந்தப்பகுதியைச் சூழ்ந்து நின்று கொண்டார்கள். நீண்ட மரங்களையும், கொடிக் குப்பல்களையும் வெட்டி வீழ்த்தத் தொடங்கினார்கள். உச்சி வேளைக்குள், அந்த அடர்ந்த - இருண்ட வனத்துள் வட்டவடிவமான இடை வெளியொன்றை ஏற்படுத்திக் கொண்டார்கள்.

"இனிமேல் காட்டுக்கு நடுவிலேயும் போய், இதேமாதிரி மரங்களை வெட்டிப் பொட்டல் வெளி உண்டாக்க வேண்டும்." ஜாக்ஸன் துரை புது உத்தரவு பிறப்பித்தார். காப்பிரிகள் வெறி வேகத்துடன் மரங்களை வெட்டிச் சாய்த்துப் புதுவழியை ஏற்படுத்தினார்கள். பெரிய பெரிய வலைகளை மரங்களோடு இணைத்துக் கட்டினார்கள். எல்லா ஏற்பாடுகளும் சரிவர அமைந்திருப்பதைப் பார்வையிட்ட பின், ஜாக்ஸன் சொன்னார்: "இனி நம் வேட்டையைத் தொடங்கலாம்." தொடர்ந்து வானத்தை நோக்கி ஒரு முறை சுட்டார்.

பிக்மிகள், 'ஹெஹா! ஹெஹா!...ஹ்வம், ஹும்!...' என்று கூச்சலைக் கிளப்பிக்கொண்டு, மரக் கூட்டங்களைக் குறித்துச் 'சரசர' வென்று அம்புகளை எய்தார்கள். காட்டு மனிதர்களான கொரில்லாக்களைப் போருக்கு அழைக்கும் முஸ்தீப்பு இது.

சாந்தன் காலைத் தீனியை முடித்துக் கொண்டு சற்றுக் கண்ணயர ஆயத்தம் செய்து கொண்டிருக்கும்போதுதான், தூரத்தில் மரங்கள் அடியோடு சாயும் ஓசைகள் கேட்டன. காட்டானைகளின் முரட்டுச் சேட்டைகளாக இருக்குமென்று நினைத்துக் கொண்டு, அவன் அசிரத்தையாக இருந்து விட்டான். ஆனால், உயரே இருந்த 'கராங்' (இளைய தாரம்) உரக்க "ஹூரியோம், ஹூரியோம்!" என்று அபாய அறிவிப்பாகக் கூக்குரலிட்டாள். சாந்தன் உடனே உயரே பாய்ந்தான். நாலு புறமும் பார்த்தான். 'ஐயையோ! செத்தோம்! தேகத்தில் உரோமம் கிடையாது; வாலும் கிடையாது. சரி! மனித விலங்குகள் தான். பேராபத்து! நாலா பக்கமும் சூழ்ந்து கொண்டல்லவா நிற்கிறார்கள்!' — உடனே சாந்தன் சமாளித்துக் கொண்டான்.

"பயப்பட வேண்டியதில்லை. நாம் இந்தப் பிரம்புக் கூண்டுக்குள்ளேயே பத்திரமாக இருக்கலாம். அந்தப் பாவிகளின் சரங்கள் இதை எட்ட முடியாது. அம் மனிதர்கள் இங்கே பக்கத்தில் வந்து விட்டால், நான் ஒரு கை பார்த்துக் கொள்ளுகிறேன்." என்று மூத்தவள் கிரீங்கிற்குத் தைரியம் கூறிவிட்டு, கர்ப்பிணியான இளையவளை இரக்கத்துடன் பார்த்தான் சாந்தன். இருவர் கண்களிலும் மரண பயம் நிழலாடியது.

காப்பிரிகளின் போர்க் கூச்சலும், சரப் பாய்ச்சலும் சகிக்க முடியாதபடி அதிகரித்து விட்டன. நெருங்கி வந்துவிட்டார்கள். இடைவிடையே இடிபோல் அதிரும் துப்பாக்கி வேட்டு, சாந்தனை நடுநடுங்க வைத்தது.

அந்தோ!......

வெறிக் கூட்டம், சாந்தன் குடும்பத்தாரின் உறைவிடத்தைக் கண்டுபிடித்து விட்டது. ஒரு கூரிய சரம் சாந்தனின் மூக்கைப் பொத்து விட்டது. சாந்தன் வீராவேசத்துடன் எழுந்தான்.

"குழந்தைகளைப் பத்திரமாய்ப் பார்த்துக் கொள்ளுங்கள். பெண் பிள்ளைகளே! நான் இதோ ரணகளத்தில் குதிக்கப் போகிறேன்.

## நூதன விவசாய சாதனங்களைத் தயாரிக்க எங்கள் சேவை

கீழ்க்கண்ட வேலைப்பாடுகளைச் செய்ய
நவீன யந்திரங்கள் பொருத்தப்பட்டவை

1 பெர்ரஸ் காஸ்டிங்ஸ்
2 வெல்டிங் (காஸ் & மின்சாரம்)
3 போர்ஜிங்
4 ஷேப்பிங்
5 டர்னிங்
6 மில்லிங்
7 டிரில்லிங்
8 திரட் கட்டிங்
9 பஞ்சிங் & ஷியரிங்
10 ஹார்டனிங் & டெஸ்டிங்

**விவசாயத்திற்கு ஏற்ற எந்தவிதமான சாதனங்களையும் நாங்கள் சப்ளை செய்கிறோம்**

விவரங்களுக்கு எழுதவும்



சூப்பரின்டென்டென்ட்
**விவசாய சாதனங்கள் தொழில் நிலையம்**
**திருச்சிராப்பள்ளி**

---

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## (பிரைவேட்) லிமிடெட்

5. சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி.
தபால் பெட்டி நெ. 414 ... ம த ரா ஸ் - 5
தந்தி: 'EVERMANS'... போன்: 85834

சேரக் கடைசி தேதி 12-3-1959 ... முதல் ஏலத் தேதி 14-3-1959

25 மாதங்கள் | **மாதாந்திர சீட்டுகள்** (2-வது சனிக்கிழமை ஏலங்கள்) | 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

டெல்லி கிளை ஆபீஸ்கள் : B-6, பிளாக் III, ஆஸப் அலி ரோடு, புது டெல்லி-1. ● 10187, அஜ்மல்கான் ரோடு கரோல்பாக், புது டெல்லி-5 ● பெங்களூர் கிளை ஆபீஸ்: "ஜெனகத் பில்டிங்ஸ்", விக்டர் ஜூபிலி பார்க் ரோடு, பெங்களூர்-2 ● பம்பாய் கிளை ஆபீஸ் : "விஜய விஹார்" 17-A, லைமன் - மாதுங்கா எஸ்டேட் (கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்) பம்பாய்-22

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

நான் அங்கேயே மரித்துவிட்டால், நீங்கள் எங்கேயாவது ஓடிப் போய்ப் பிழைத்துக் கொள்ளுங்கள்'' என்று சொல்லிக் கீழே இறங்கினன் சாந்தன்.

இரு கைகளையும் மார்பில் பலமாக அறைந்து பறையறை யொலிபோல் எழுப்பிக் கொண்டு, சாந்தன் தன் சத்துருக்களை நேருக்கு நேரே எதிர்க்கப் புறப்பட்டு விட்டான்.

ஜாக்ஸன் துரை குறி பார்த்துச் சுட்டார். தொடர்ந்து, காப்பிரிகளும் சாந்தனின் மார்பைச் சரக்கூடாக்கித் துளைத்தார்கள். இரு கைகளையும் மார்பில் வைத்து, ஈனமாக ஓலமிட்டுக் கொண்டே குப்புற விழுந்தான்; தரையில் புரண்டு துடித்தான்; பிறகு எல்லாம் ஒடுங்கி விட்டன; சாந்தன் சவமானன்.

கணவர் மரித்ததைக் கண்டதும், இரு மனைவியரும் பதறிக் கொண்டே வேறு மரத்துக்குத் தாவினார்கள். தொடர்ந்து குட்டிகளும் தாவின. பல மரங்களைக் கடந்து சற்று அப்பால் போய்ச் சேர்ந்தார்கள். அப்புறம், தாவிச் செல்ல மரத்தைக் காணும். கீழே பார்த்தார்கள். காப்பிரிகள் ஆயுதபாணிகளாகத் தயாராக நிற்கிறார்கள்; எப்படியும் பலியாக வேண்டியதுதான்.

கிரீங், கராங் இருவரும் குட்டிகளை அழைத்துக் கொண்டு, இருந்த இடத்துக்கே திரும்பி விரைந்தார்கள். ஜாக்ஸன் துரையின் உத்தரவுப்படி, அடர்த்தியான மரங்களை வெட்டிச் சாய்த்தார்கள். தாவுவதற்கும் பதுங்குவதற்குமான புகல்கள் குறைந்துகொண்டு வந்தன.

கர்ப்பிணியான கராங், பிடி தவறிப் போய், தரையில் 'தொப்'பென்று விழுந்துவிட்டாள். வயிறும் காலும் ரத்தம் பெருக, அப்போதே உயிர் துறந்தாள். அவள் பின்னுலேயே தாவிய இரு குட்டிகளும் அவ்விதமே பிடி விட்டாமல், தரையில், ஒரு பெரும் பாறை மேல் விழுந்து பரகதியடைந்தார்கள். மற்ருெரு பக்கத்தில், கிரீங் பிக்மிகளின் வலையில் விழவே, அவர்கள் ஈட்டிகளால் குத்தியே அவள் உயிரை மாய்த்தார்கள்.

பராக்கிரமசாலிகளான முதிய கொரில்லாக்களைக் கொன்றதும், குட்டிகளைக் கைப்பற்றப் புதர்களையும் மரங்களையும் கலைத்துப் பார்த்தார்கள். ஒரு மரத்தடியில், அழுது கொண்டே உட்கார்ந்திருந்த கொரில்லாக் குட்டி ஒன்றைக் கண்டு பிடித்தார்கள். ஜாக்ஸன் ஓடி வந்து, பின்பக்கமாக அக் குட்டியின் மென்னியைப் பிடித்து, அசையவொட்டாமல் அமர்த்தி வைத்தார். பிக்மிகள் கயிறு கொண்டு அதைக் கட்டிச் சிறைப்படுத்தினர்கள். அந்திப் பொழுதோடு, எல்லாம் முடிந்து விட்டன. வெற்றிப் பெருமிதத்துடன் பிக்மிகளும், காப்பிரிகளும், ஜாக்ஸனும் கூடாரத்துக்குத் திரும்பினர்கள்.

எங்கும் அமைதி. ஜாக்ஸன் கூடாரத்துக்குள், நாற்காலியில் சாய்ந்து, 'பைப்பை'ப் புகைத்துக்கொண்டிருந்தார். வெளியே, கானகமெங்கும் வெண்ணிலவு வழிந்து தேங்கி இருந்தது. ஒரு கறுத்த உருவம், கூடாரத்துக்குள் மெல்ல நுழைந்தது.

இருளில், வந்தவனின் முகத்தைச் சரியாகப் புலப்படுத்திக் கொள்ள முடியவில்லை. நீண்ட சொக்காய் அணிந்திருந்தான்; பெல்டு,

## அருள் வாக்கு

ஒருவன் மற்ருெருவனைச் சிரமப்படுத்த நினைக்கக் கூடாது. வாயினாலும் ஒருவனைப் புண்படுத்திப் பேசக் கூடாது. அப்படியே உடலாலும் ஒருவருக்கும் துன்பத்தைச் செய்யக்கூடாது. சுபாவமாக ஒருவனுக்கும் பிறரைத் துன்பப்படுத்தத் தோன்ருது. சகவாசத்தினுல், கோபத்தினுல் ஹிம்சை செய்யத் தோன்றும். நம் குழந்தை கூரைக்கு நெருப்பு வைத்து விட்டால் நாம குழந்தையைத் துன்புறுத்துவோமா? உடனே நெருப்பை அணைத்துவிடுவோம். மீண்டும் அந்த மாதிரி நேராமல் கவனித்துக்கொள்வோம். அதைப் போலவே துன்பம் செய்கிறவனிடத்திலும் குழந்தை போல் அன்பு பாராட்டிப் பகைமையை வெல்ல வேண்டும். அதுதான் உண்மை அஹிம்சை. இப்படிப்பட்டவனிடத்தில் கொலைகாரன் கூடச் சாந்தம் அடைந்து விடுவான். மனம் சொன்னபடி கேட்க அஹிம்சை ஒரு சாதனம்.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

தொப்பி எல்லாம் இருந்தன. ஆறடிக்கு மேலான உயரம்; நல்ல தடியன்.

'' குட்ஈவினிங் ஜாக்ஸன் !'' - வந்தவன் முதல்தரமான ஆங்கிலத்தில் பேசி, நிசப்தத்தைக் கலைத்தான்.

'' குட்ஈவினிங்....! நீங்கள்....நீங்கள்....? எனக்கு ஞாபகம் வரவில்லையே!'' ஜாக்ஸன் எழுந்திருக்க முயன்ருர்; முடியவில்லை.

'' நாம் ஒரே குடும்பத்தவர்தான். இதற்கு முன் ஒருமுறை நாம் சந்தித்திருக்கிறோம்.''

'' இருக்கலாம், உங்களுடைய குரலைக்கூட எங்கோ முன்பு கேட்டதாக ஞாபகம், எங்கள் குடும்பம் இங்கிலாந்திலுள்ள 'நோர்போக்' நகரத்திலிருந்து அமெரிக்காவுக்குக் குடியேறியது. உங்கள் பேர்?''

'' என்னை ஜாக் என்று அழையுங்களேன். நம் குடும்பக் கதையைப் பிறகு சொல்லுகிறேன். நீங்கள் வந்த காரியம்—கொரில்லா வேட்டை எப்படி?''

ஜாக்ஸன் துரையின் கண்கள் விரிந்து பளபளத்தன. அன்று நடந்த சுவையான கொரில்லா வேட்டையைப் பற்றி யாரிடமாவது வர்ணித்துச் சொல்ல வேண்டும் என்று ஏங்கிக் கொண்டிருந்தார் ஜாக்ஸன். ஜாக் போன்ற படித்த மனிதன் கிடைத்ததில் அவருக்கு மிக்க மகிழ்ச்சி.

'' மிஸ்டர் ஜாக்! இன்று நல்ல அதிர்ஷ்டமான தினம். ஒரு கொரில்லாக் குட்டி கிடைத்திருக்கிறது. அதோ பாருங்கள், மூலையில் கூண்டுக்குள் கிடக்கிறது. கொரில்லா வேட்டையில் தான் பெற்ற முதல் வெற்றி இதுதான். இந்த ஏற்பாட்டுக்கு ஆயிரம் ரூபாய் செல

வாகி யிருக்கிறது. இது சொற்பச் செலவு தான். இந்தக் குட்டியை உயிரோடு அமெரிக்காவுக்குக் கொண்டு போய் விட வேண்டும். மிருகக் காட்சிச் சாலைக்காரர்கள் இதற்கு இருபதினாயிரம் ரூபாய் கொடுக்கப் போட்டி போட்டுக் கொண்டு வருவார்கள்.''

''வயதான கொரில்லா எதுவும் கிடைக்கவில்லையோ?''- ஜாக்கின் குரல் இடறி விழுவதுபோல் வெளிப்பட்டது.

''மிஸ்டர் ஜாக்! உங்களுக்குக் கொரில்லா வேட்டையைப் பற்றி எதுவும் தெரியாது போலிருக்கிறது. வயதான கொரில்லாக்களைப் பிடித்தால், பராமரிக்கவோ பழக்கவோ முடியாது. அவை சிலதினங்களுக்கெல்லாம் செத்து விடும். குட்டிகள் கிடைப்பதுதான் நமக்கு லாபம். ஆனால், ஒரு கஷ்டம்; ஒரு குட்டியைக் கைப்பற்ற வேணுமானால், அந்தக் குடும்பத்தின் பெரிய கொரில்லாக்களைக் கொன்றொழியக் காரியம் வெற்றி பெறாது.''

''அப்படியா?....இன்றைய வேட்டையிலே எத்தனை கொரில்லாக்கள் இறந்தன?''

''முதலிலே, எங்களுக்கெதிரேயே மார்பைக் காட்டிக் கொண்டு போரிட வந்த தந்தைக் கொரில்லாவைக் கொன்று வீழ்த்தினோம். வலையில் விழுந்து சிக்கிய ஒரு தாய்க் குரங்கை பிக்மிகள் ஈட்டிகளால் குத்திக் கொன்றார்கள். மற்றொரு பெண் கொரில்லா, இரு குட்டிகள் - இவை பிடி தவறிக் கீழே பாறைமேல் விழுந்து மரித்தன. ஏதோ, நாங்கள் செய்த பாக்கியம் என்றுதான் சொல்ல வேண்டும். இந்தக் குட்டி மாத்திரம், சிறு காயம்கூடப் படாமல், ஒரு மரத்தடியில் உட்கார்ந்து அழுது கொண்டிருந்தது. இலகுவாகப் பிடித்து விட்டோம். இனிப் பயமில்லை. இந்தச் 'சிடுங்கன்' (பிடிவாதக்காரன்) இப்போது கொஞ்சம் பால் குடிக்கத் தொடங்கி யிருக்கிறான். அடாடா! மிஸ்டர் ஜாக், நான் உங்களுக்கு ஒரு உபசாரமும் செய்யவில்லையே; மன்னிக்க வேண்டும். சிகரெட் வேண்டுமா?''

''வேண்டாம். எனக்கு அது பழக்கமில்லை.''

''அப்படியானால், உயர்ந்த ரக 'லோலோ ஜல்' இருக்கிறது. அமெரிக்காவிலிருந்து நானே தயாரித்துக் கொண்டு வந்தது. கொஞ்சம் ருசி பாருங்களேன்.''

''வேண்டாம். நான் புலால் உணவு புசிப்பதில்லை.''

''அப்படியானால் உங்கள் ஆகாரம் என்ன?''

''காய், கனி, கிழங்கு, தண்ணீர்தான்.''

''சரிதான்; நீங்கள் காட்டு மனிதன் கொரில்லாவின் பரம்பரையைக் கடைப்பிடிப்பவர் போலிருக்கிறது!''

''ஆமாம். நானொரு தனிக்காட்டு மனிதன். இப்படி வாழ்வதில் எனக்குக் கர்வம் உண்டு. ஜாக்ஸன்! நீயும் ஒரு காலத்தில் காட்டு மனிதனாக வாழ்ந்தவன்தான்; மறந்து விடாதே! பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக இருக்கலாம். ஒரு நாள், உனக்கு ஒரு புதுமையான காரியம் செய்துகாட்ட வேண்டுமென்று தோன்றியது. முயன்று, ஒரு முறை சிரித்தாய். நாங்கள் எவ்வளவோ முயன்றும் அந்தச் செயலைச் செய்து காட்ட முடியவில்லை. சிரிக்கத் தெரிந்து விட்ட செருக்கில், நீ நம் இனத்தையும் இடத்தையும் புறக்கணித்து, எங்கோ வெகு தூரம் போய் விட்டாய். வனப் பிரதேசங்களை விட்டு, திறந்தவெளி நிலத்துக்குச் சென்று குடியேறி விட்டாய்.

''பிறகு, உனக்கும் உன் வாழ்வு முறைக்கும் ஏற்பட்ட அலங்கோல மாறுதல்களை நாங்கள் வெட்கத்துடன்தான் எண்ணிப் பார்க்க வேண்டியிருக்கிறது. நாற்றமெடுத்த இறைச்சியும் மது வகையும் உனக்கு உரிய உணவாகி விட்டன. கொலைக் கருவிகளைச் செய்து வைத்துக் கொண்டு, சுயகுலத்தாரையே கொன்று குவிப்பதை உள்ளக் களித்தலாகச் செய்து கொண்டாய்! ஆனால் நாங்களோ, நம் பண்டைப் பரம்பரை முறைப்படியே வாழ்ந்து வருகிறோம். நாங்கள் உங்களுக்கு எவ்வித இடையூறும் செய்யாமல், இவ்விருண்ட கானகத்துள்ளே, சாகபக்ஷிணிகளாக மனைவி மக்களுடன் நிம்மதியாகவே வாழ்ந்து வருகிறோம். நீங்களோ இங்கேயும் படையெடுத்து வந்து சாது ஜீவன்களான எங்களைக் கொன்று சாய்க்கிறீர்கள். ஏ பாவி! குலத்துரோகி! இப்போதாவது கண் திறந்து பாரடா! நான் யாரென்பதை இனியாவது அறிந்து கொள்; என் மார்பைப் பாரடா!''

ஜாக் ஆவேசத்துடன் கத்தினான். தொடர்ந்து தன் ஓவர்கோட்டை அகற்றி, தொப்பியையும் தூர எறிந்து, நெஞ்சகத்தையும் மார்பையும் திறந்து காட்டி எதிரே நின்றான்.

ஆறடி உயரமும் அறுநூறு ராத்தல் பளுவும் உள்ள பருத்த மேனியன் சாற்கனின் பயங்கர உருவம் தன்னை நெருங்கி வருவதைக் கண்ட ஜாக்ஸன் நடுநடுங்கிப் போய், எழுந்தோட முயன்றார்; முடியவில்லை.

சாற்கனின் மார்பிலிருந்தும் நெஞ்சிலிருந்தும் குருதி வழிந்துகொண்டிருந்தது. பிக்மிகள் எய்து துளைத்த மார்பகம் ஒரு பெரிய 'பின் குஷன்' போல் இருந்தது. சாற்கனின் பிளந்த வாயும், அறுபட்ட நாசியும் துடித்துக் கொண்டிருந்தன.

ஜாக்ஸன் அருகில் வைத்திருந்த துப்பாக்கியை எப்படியோ கையில் எடுத்துக் கொரில்லாவின் மார்பைப் பார்த்துச் சுட்டார்.

'டுமீல்!....'

பிறகுதான் ஜாக்ஸனுக்குச் சுயப்பிரக்ஞை வந்தது. மலங்க மலங்க விழித்துப் பார்த்தார்; குழப்பமாக இருந்தது. ஒன்றும் புரியவில்லை. வெடியோசை கேட்டதும் வெளியே காவல் காத்து நின்ற காப்பிரிகள் ''புவானா! புவானா! (ஐயா!)'' என்று கூவி ஓடி வந்தார்கள்.

''கொரில்லா!........கொரில்லா!.......'' ஜாக்ஸன் அரைப் பிரக்ஞையில் கத்தினார்.

காப்பிரிகள் கூடாரத்துக்கு உள்ளேயும் வெளியேயும் பரபரப்புடன் ஓடியாடித் தேடினார்கள். பிறகு, திரும்பி வந்து, ''புவானா! இங்கே எங்கேயும் கொரில்லாவைக் காணோமே?'' என்றார்கள்.

ஜாக்ஸன் துரை தம் கையிலிருந்த துப்பாக்கியைக் கவனித்தார். அதன் குழலிலிருந்து மெல்லிய ரேகைகளாகப் புகை வழிந்து கொண்டிருந்தது; தோட்டா வெடித்த நாற்றமும் மாறவில்லை.

ஜாக்ஸன் மெள்ள எழுந்து, கொரில்லாக் குட்டியை அடைத்து வைத்திருந்த கூண்டுக்கு எதிரே சென்றார். மார்பில் குண்டடிபட்டு, ரத்தப்பெருக்கில் பிணமாகிச் சுருண்டு கிடந்தது அந்தக் கொரில்லாக் குட்டி.




அத்தியாயம் 32

## *'ஒப்புரவுமொழிமாறு ஓலை'

காய்த்த மரத்தில் நான்கு புறத்திலிருந்தும் கல்லெறி விழும் என்பார்கள். பழுத்த மரமாக இருந்து விட்டாலோ இன்னும் அதிகமான துன்பம்தான். எதற்கும் அடங்காத அறிவின் கூர்மையை வைத்துக் கொண்டு வாழ்கிறவர்கள் எவ்வளவோ எதிரிகளை உண்டாக்கிக் கொள்ளவும் தயாராகத்தான் இருக்க வேண்டும். எட்ட முடியாத உயரத்தில் புரிந்துகொள்ள முடியாத சாமர்த்தியத்தோடு நெஞ்சின் பலத்தால் நிமிர்ந்து நிற்பவர்களுக்குச் சுற்றியுள்ளவர்களின் பகையும் வெறுப்பும் கிடைக்கத்தான் செய்யும்.

பொருட்செறிவுள்ள செழுமையான சொற்களால் உட்பொருள் நயம் பொருந்த ஒரு மகாகவி காவியம் ஒன்று எழுதியிருந்தால் அதைப் புரிந்து கொள்ளத் தகுதியற்றவர்களும், புரிந்து கொள்ள முடியாதவர்களும், காரணமின்றி அதன்மேல் வெறுப்படைவது போல் தென்பாண்டி நாட்டின் மகாமண்டலேசுவரர் மேல் சிலருக்கு வெறுப்பு உண்டாகியிருந்தது.

"மக்களின் மனப் பண்பு தாழ்ந்து கீழ்த்தரமாகப் போய் விட்டால் உயர்வும், தரமும் உள்ள எல்லாப் பொருள்களின் மேலும் ஏதோ ஒருவகை வெறுப்பு வந்து விடுகிறது. மண்ணில் வாழ்ந்து கொண்டிருந்தாலும் மனத்தில் மண் படாமல் வைத்துக் கொள்ள வேண்டும். ஆனால் பேதைமையின் காரணமாகப் பெரும்பாலோர் மனத்தையும் மண்ணில் புரட்டிக் கொண்டு விடுகிறார்கள்" என்று கோட்டாற்றுச் சமணப் பண்டிதர் அடிக்கடி மகாராணியிடம் சொல்லுவார்.

அன்றைக்குக் காலையில் இந்த வார்த்தைகளை மீண்டும் நினைத்துப் பார்க்க வேண்டிய நிலை மகாராணி வானவன்மாதேவிக்கு ஏற்பட்டது. சுசீந்திரம், காந்தளூர் முதலிய இடங்களுக்குச் சென்று விட்டு முன் சிறை வழியாக அரண்மனைக்குத் திரும்பி வந்து சில நாட்கள் ஆகியிருந்தன.

---

* இந்தக் காலத்தில் அரசாங்கத்தின் மேல் கொண்டு வருகிற நம்பிக்கை இல்லாத் தீர்மானம் மாதிரி அந்த நாளில் தென்பாண்டி நாட்டில் அரசர்கள் மேலோ, பொறுப்பு மிக்க மகா மண்டலேசுவரர் போன்றவர் மீதோ — கொண்டு வரும் நம்பிக்கையில்லாத் தீர்மானத்துக்கு ஒப்புரவு மொழி மாறு ஓலை என்று பெயர். குற்றத் தலைவர்கள் ஒன்று கூடி ஒப்புரவு மொழிமாறு ஓலை கொண்டுவருவர்.
Ref: No. 73, Olai document of Kollam 878 T. A. S. Vol V. P. 215

திரும்பி வந்த அன்றைக்கு மறுநாளே திருவாட்டாற்றுத் தாயின் மகனுக்காகச் செலுத்த வேண்டிய அபராதப் பொன் அனுப்பப்பட்டது. அந்த உதவியைத் தாம் செய்வது யாருக்கும் தெரியாமல் செய்தார் வானவன்மாதேவி. அபராதப் பொன் அனுப்பப்பட்ட தினத்தன்று மாலையே சுசீந்திரம் அர்ச்சகர் அரண்மனைக்கு வந்து மோதிரத்தைத் திருப்பிக் கொடுத்து அங்கு நடந்ததையெல்லாம் விவரித்து விட்டுச் சென்றார். 'ஒரு தாயின் உள்ளமும், அவள் மகனின் கைகளும் வெந்து போகாமல் காப்பாற்றி விட்டோம்' என்ற நினைவு இன்பமாகத்தான் இருந்தது மகாராணிக்கு. அருள் மயமான வானவன்மாதேவியின் மனம் அப்படிப் பிறருக்கு உதவி செய்தும், பிறருக்காகத் தன்னை இழந்தும் வாழும் பண்பை இயல்பாகவே பெற்றிருந்தது. வெயில் பட்டவுடன் வாடும் பூப்போலப் பிறர் துன்பத்தை உணர்ந்து இரங்கும் மனம் அது.



சுசீந்திரத்திலிருந்து திரும்பிய பின்பு சில நாட்கள் மகாராணி அந்தப்புரப் பகுதியிலிருந்து வெளியேறவே இல்லை. கோட்டாற்றுப் பண்டிதர் அன்றொரு நாள் ஓலையில் எழுதிக் கொடுத்துச் சென்றிருந்த அந்தச் செய்யுளையும், காந்தளூர் மணியம்பலத்தில் மறைந்து நின்று கேட்ட அறிவுரைகளையும் நினைத்துக் கொண்டே பொழுதைப் போக்கினார். அரண்மனையிலேயே மற்றோர் பகுதியில் தங்கியிருந்த மகா மண்டலேசுவரரைக் கூட அவர் சந்திக்க விரும்பவில்லை. எண்ணங்கள் பழுத்து முதிரும் ஒரு குறிப்பிட்ட நிலையில் யாரையும் சந்திக்காமல், யாரோடும் பேசாமல், தனக்குள்ளேயே, தன்னைத் தானே உள்முகமாக ஆழ்ந்து பார்க்கும் உயர்ந்த நிலை ஏற்படும். அந்தநிலையில்தான் தென்பாண்டி நாட்டின் மாதேவியார் இப்போது இருந்தார்.

ஆனால் அவரது பேரின்ப மோன நிலையைக் கலைக்க அந்த அதிர்ச்சி தரும் ஓலையோடு அன்று காலையில் பொன்மனைக் கூற்றத்துக் கழல்காற் மாறனார் வந்து சேர்ந்தார். தென்பாண்டி நாட்டின் மற்றக் கூற்றத் தலைவர்களெல்லோரும் சேர்ந்து தங்களுடைய ஏகப் பிரதிநிதியாக அந்த ஓலையோடு அவரை மகாராணியாரிடம் அனுப்பியிருந்தனர்.

வைகறையில் நீராடி வழிபாடு முடித்துக் கொண்டு. புனிதமான நினைவுகளில் இலயித்துப் போய் வீற்றிருந்த மகாராணிக்கு முன் புவனமோகினி தோன்றி அந்தச் செய்தியைக் கூறினாள்:

"தேவி! மிக முக்கியமான காரியமாகப் பொன்மனைக் கூற்றத்துக்

கழற்கால் மாறனார் அவசரமாகத் தங்களைச் சந்திக்க வந்திருக்கிறார்."

"கூற்றத் தலைவர் கூட்டம் நடந்து முடிந்த அன்றே அவர்களெல்லாம் திரும்பிப் போய்விட்டார்களே! இப்போது கழற்கால் மாறனார் மட்டும் மறுபடியும் எதற்காக வந்திருக்கிறார்? தனியாகத் தான் வந்திருக்கிறாரா? அவரோடு வேறு யாராவது வந்திருக்கிறார்களா?" என்று திகைப்புத் தொனிக்கும் குரலில் மகாராணி வண்ணமகளைப் பார்த்துக் கேட்டார்.

"தேவி! அவர் மட்டும்தான் தனியாக வந்திருக்கிறார்" என்று புவனமோகினி பதில் கூறியதும்,

"அப்படியானால் நீ ஒன்று செய், புவனமோகினி! அவரை அழைத்துக் கொண்டு போய் நேரே மகாமண்டலேசுவரர் தங்கியிருக்கும் மாளிகையில் விட்டு விடு. ஏதாவது அரசாங்க சம்பந்தமாகத் தான் பேசுவதற்கு வந்திருப்பார். நமக்கு எதற்கு இந்த வம்பெல்லாம்? நிம்மதியாகத் தெய்வீகச் சிந்தனைகளில் ஈடுபட்டிருக்கிற மனத்தை அரசியல் சேறுபட விடுவதற்கு இப்போது நான் தயாராயில்லை. திருவாசகத்தையும் திருக்குறளையும் நினைத்துக் கொண்டிருக்கும் நிலையில் தெற்கேயும், வடக்கேயும் யார் படையெடுக்கப் போகிறார்கள் என்று தெரிந்து கொண்டு புதிய கவலைகளைச் சுமக்க வேண்டாம். எதுவாக இருந்தாலும் சரி; வந்திருப்பவரை மகாமண்டலேசுவரரிடமே கொண்டு போய் விட்டு விடு. அவர் பாடு; வந்திருப்பவர் பாடு. பேசித் தீர்த்துக் கொள்ளட்டும்" என்று ஒட்டுதல் இல்லாமல் கூறினார் மகாராணி வானவன்மாதேவி.

புவனமோகினி திரும்பிச் சென்றாள்.

"எந்த எந்தப் பற்றுக்களிலிருந்து நம்மை விடுவித்துக் கொள்கிறோமோ அந்தந்தப் பற்றுக்களால் வரும் துன்பங்கள் நமக்கு



"இல்லை" என்று முன்பொரு நாள் காந்தளூர் மணியம்பலத்தில் கேட்ட அந்தச் சொற்களை நினைத்துப் பெருமூச்சுவிட்டார் மகாராணி. நெஞ்சின் சுமையைக் குறைக்க அந்தப் பெருமூச்சை விட்டார் மகாராணி. நெஞ்சின் சுமையைக் குறைத்து அந்தப் பெருமூச்சு வெளியேறினபோது நிம்மதி உள்ளே குடிபுகுந்தாற்போல் இருந்தது. சிறிது நேரந்தான் அந்த நிலை. இரண்டாவதாக மற்றொரு பெருமூச்சை வெளியேற்றும் செய்தியைத் தாங்கிக் கொண்டு புவனமோகினி திரும்பி வந்தாள்.

"தேவி! அவர் மகாமண்டலேசுவரரைச் சந்திக்க விரும்பவில்லையாம். தங்களைத்தான் சந்தித்துப் பேசியாக வேண்டுமாம். நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்து விட்டேன். அவர் கேட்கவில்லை. பிடிவாதமாக உங்களையே காண வேண்டுமென்கிறார்."

அவனிடம் என்ன பதில் சொல்லி அனுப்புவதென்று சிறிது தயங்கிய பின், "சரி! வேறென்ன செய்ய முடியும்? நீ போய் அவரை இங்கேயே கூட்டிக் கொண்டு வா" என்று சொல்லி அனுப்பினார் மகாராணி. 'மகா மண்டலேசுவரரைப் பார்க்க விரும்பவில்லை' என்று வெறுத்துச் சொல்கிற அளவு கழற்கால் மாறனுக்கு அவர்மேல் அப்படி என்ன மனத்தாங்கல் ஏற்பட்டிருக்க முடியும் என்ற ஐயம் மகாராணிக்கு ஏற்பட்டது. திடீர் திடீரென்று தம்மைச் சுற்றியிருப்பவர்கள், இருப்பவைகள் எல்லாம் புதிர்களாக மாறிக்கொண்டு வருவதாகப் பட்டது அவருக்கு. 'உலகத்தில் ஒவ்வொரு மனிதரும் கண்ணின் நோக்கத்தில் எப்படிப்படுகிறார்களோ அப்படிக் கருத்தின் நோக்கத்தில் படுவதில்லையா? அல்லது மனிதர்களையும், சுற்றுப்புறத்தையும் அளந்து பார்த்து விளங்கிக் கொள்ளும் ஆற்றல் என்னுடைய மென்மையான மனத்துக்கு இல்லாமல் போய்விட்டதா?' என்று திகைத்தார் மகாராணி வானவன்மாதேவியார்.

அந்தச் சமயத்தில் புவனமோகினி கழற்கால் மாறனாரைக் கூட்டிக் கொண்டு வந்து நிறுத்தினாள். தென்பாண்டி நாட்டின் ஐம்பெருங் கூற்றத் தலைவர்களுக்குள் செல்வாக்கு மிகுந்தவரும் பொன்மனைக் கூற்றத்துத் தலைவரும், வயது மூத்தவரும் தென்னவன் தமிழவேள் பாண்டிய மூவேந்த வேளார் என்ற சிறப்புப் பட்டம் பெற்றவரும் ஆகிய கழற்கால் மாறனார் முன் வந்து மகாராணியை வணங்கினார். அவர் கையில் உறையிட்டு இலச்சினை பொறித்த ஓலைச் சுருள் இருந்தது. அவருடைய வயதுக்கும், அனுபவத்துக்கும் மரியாதை கொடுத்து எழுந்து நின்று வணங்கினார் மகாராணி.

"வரவேண்டும், பெரியவரே! அதிகாலையில் சிரமப்பட்டு வந்திருக்கிறீர்கள். அரசாங்கக் காரியமாக இருக்குமானால் மகா மண்டலேசுவரரைப் பார்த்தாலே போதுமானதென்று தான் உங்களை அவரிடம் அழைத்துப் போகச் சொன்னேன். நீங்கள் என்னையே பார்க்க வேண்டுமென்று கூறினீர்களாம்."

"ஆமாம்! நான் பார்க்க வந்தது தென்பாண்டி நாட்டு மகாராணியாரைத்தான்" என்று கழற்கால் மாறனார் கூறிய பதிலில் கடுமையும், சிறிது அழுத்தமும் ஒலித்தாற்போல் தோன்றியது மகாராணிக்கு.

"அது சரிதான்! ஆனால் ஒரு அரசாங்கக் காரியமாக என்னைச் சந்தித்து நீங்கள் அடைய முடிந்த பயனைக் காட்டிலும் மகா மண்டலேசுவரரைச் சந்தித்து அதிகமான பயனை அடையலாமே என்பதற்காகத்தான் சொன்னேன்."

"இல்லை, மகாராணி! நாங்கள் இனி என்றுமே மகா மண்டலேசுவரர் என்ற முறையில் அந்தப் பதவியில் வைத்து அவரைச் சந்திக்க விரும்பவில்லை. காரணம், அவர்மேல் எங்களுக்கு நம்பிக்கை இல்லை. அவருடைய செயல்களையும் நாங்கள் புரிந்து கொள்ள முடியவில்லை!"

இதைக் கேட்டதும் அமைதியான மகாராணியின் விழிகள் நீண்டு உயர்ந்து அகன்று விரிந்தன. தம் செவிகளையே அவரால் நம்ப முடியவில்லை. மறுபடியும் அவர் முகத்தை நிமிர்ந்து பார்த்துக் கேட்டார்:—

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

"மகா மண்டலேசுவரர்மேல் எங்களுக்கு நம்பிக்கை இல்லை என்று சொல்லுகிறேன்."

"'எங்களுக்கு'—என்றால்...? உங்களுக்கும், இன்னும் வேறு யாருக்கும்? நீங்கள் ஒருவராய்த்தானே இங்கு வந்திருக்கிறீர்கள்?"

"மகாராணியவர்கள் என்னுடைய துணிச்சலுக்காக என்னை மன்னிக்க வேண்டும். நான் ஒருவனாக இங்கு வந்திருந்தாலும், மற்றக் கூற்றத் தலைவர்களோடு கூடிக் கலந்து பேசி, அவர்கள் கையொப்பமிட்ட 'ஒப்புரவு


பெரியபுராணம்




குமரேச சதகம்







அழகு மிகுந்த நீண்ட
அடர்ந்த கூந்தலுக்கு

# பாமாலிவ்

**பெர்ப்யூம்ட் கோகோனட் ஹேர் ஆயில்**

குடும்பம் முழுவதிற்கும்
மிக்க உகந்தது!








பெரிய எகானமி அளவு புட்டியினால்
பணம் மிச்சமாகிறது! மூன்று விரு
விருப்பான வாசனைகளில் கிடைக்கும்;
லவண்டர், மல்லிகை, ரோஜா.

PCH/G/3 TAM.

---



வலிமைக்கு புலி மார்க்கு தேயிலை

# புலி மார்க்கு
# தேயிலை




LIPTON (INDIA) LIMITED *(Incorporated in England)*

LTC-6 TM.

மொழிமாறு ஓலை'யையும் கொண்டு தான் வந்திருக்கிறேன். இதோ எங்கள் ஓலை......''

அவர் தாம் கையோடு கொண்டு வந்திருந்த ஒப்புரவு மொழி மாறு ஓலையை மகாராணியிடம் நீட்டினார். அந்த விநாடி வரையில் சாந்தமும், அமைதியும், கருணையும் கலந்த ஒரு பெருமலர்ச்சி நிலவிக் கொண்டிருந்த மகாராணியாரின் முகத்தில் மண்ணுலகத்து உணர்ச்சிகளின் சிறுமைகள் படிந்தன. பயமும், கலவரமும், பதற்றமும் நெற்றியில் சுருக்கங்கள் இட அந்த ஓலையை அவரிடமிருந்து வாங்கினார் மகாராணி. அப்படி வாங்கும் போது அவருடைய கைகள் மெல்ல நடுங்கின. மேலே இட்டிருந்த இலச்சினைகளை நீக்கி அரக்கை உதிர்த்து அதைப் பிரிக்கும்போது கைகள் இன்னும் அதிகமாக நடுங்கின. நீர்ப்பரப்பில் ஏதேனும் ஒரு பொருள் விழுந்தால் முதலில் சிறிதாக உண்டாகும் அலைவட்டம் வளர்ந்து, விரிந்து பெரிதாகிக் கரை வரையில் நீள்வதைப் போல் அந்தப் பயங்கர ஓலைச் சுருள் விரிய விரிய மகாராணியின் பயமும் அதற்கேற்ப விரிந்தது.

"ஐயோ! ஒரு மனிதர் மிக உயர்ந்த நிலையில் சாதாரண அறிவால் புரிந்து கொள்ள முடியாதவராக இருந்தால் அவருக்குத்தான் எத்தனை கெடுதல்கள்? எவ்வளவு பேருடைய பகை? முதுகைத் தட்டிக் கொடுத்துப் பாராட்டி விட்டுக் காலைவாரி விடுகிற உலகமாகவல்லவா இருக்கிறது! மடையனைப் பார்த்து அறிவாளியாக வேண்டுமென்று உபதேசிக்கிறார்கள். அறிவாளியைப் பார்த்து அவன் ஏன் அவ்வளவு அறிவாளியா யிருக்கிறானென்று பொறாமைப் படுகிறார்கள். வளர்ச்சிக்குப் பாடுபட்டுக் கொண்டே தளர்ச்சி அடைகிறார்களே. பழங்காலப் புலவர் ஒருவர் திரி சொற்களால் பாடி வைத்த கடினமான அங்கதப் பாடல் (பொருள் ஒளித்து வைக்கப்பட்ட பாடல்) போல் சாமானிய மானவர்களுக்கு விளங்கிக் கொள்ள முடியாதவராக இருக்கிறார் மகாமண்டலேசுவரர். அதனால்தான் இத்தனை குழப்பமும் ஏற்படுகிறது. இது என்ன கேவலமான உலகம்! எட்டாததாக, உயர்ந்ததாக, மேலே உள்ள பொருள்களையெல்லாம் கீழே புழுதியிலும் அழுக்கிலும் புரளும்படி தரையில் இறக்கிப் பார்த்து விட ஆசைப் படுகிறார்களே. என்ன செய்வது? மனித இயல்பே அப்படி அமைந்து விட்டது. உயரமான மரக்கிளைகளிலும், செடி, கொடிகளின் கொம்புகளிலும் இருக்கும் பழங்களையும், பூக்களையும், தரையில் உதிரச் செய்து பயன் படுத்துகிற வழக்கம் போலச் சில மேலான மனிதர்களையும் கீழே இறக்கித் தள்ளிப் பார்க்க ஆசைப்படுகிறார்கள் போலும். பெருமையும், வளர்ச்சியும் அடைய வேண்டுமானால் கீழே இருப்பவர்களையும் மேலே போகச் செய்ய வேண்டும். மேலே இருப்பவர்களையும் கீழே இழுத்துத் தள்ளி என்ன பயன்? ஒரு நொண்டி, 'ஊரிலுள்ள கால் பெற்ற மனிதரெல்லாம் நொண்டியாக மாற வேண்டும்' என்று ஆசைப்படுவது போலன்றோ இருக்கிறது?

"தாம் சாவதற்குள் ஒரு நாளாவது அல்லது ஒரு சில நாழிகைகளாவது



'தென்பாண்டி நாட்டு மகாமண்டலேசுவரர்' என்ற பெயரோடு பதவி வகித்து விட்டுச் சாக வேண்டுமென்று இந்தக் கழற்கால் மாறனுருக்கு ஆசை. அந்த ஆசையின் விளைவு தான் வயது முதிர்ந்த காலத்தில் இப்படி மனம் முதிராத செயல்களைச் செய்யத் தூண்டுகிறது. பெரிய மனிதராக இருந்து கொண்டு சிறிய காரியத்தைச் செய்கிறாரே! பாவம்; இவர் என்ன செய்வார்? பதவி ஆசை, பெயர் ஆசை, அதிகார ஆசை; மற்றக் கூற்றத் தலைவர்களின் தூண்டுதல், எல்லாம் சேர்ந்து இந்த ஒப்புரவு மொழி மாறு ஓலையோடு இவரை இங்கே அனுப்பியிருக்கின்றன.''



ஆபிரகாம் லிங்கனின் 150வது பிறந்தநாள் விழா 'தினமணி' துணையாசிரியர் திரு ஏ. ஜி. வேங்கடாச்சாரியார் தலைமையில் பிப்ரவரி 9ந்தேதி கோகலே மன்றத்தில் கொண்டாடப்பட்டது. எதிராஜ் மகளிர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியை ஸ்ரீமதி ஆ. ரா. இந்திரா பேசுகிறார். மேடையை அலங்கரித்த லிங்கன், காந்திஜி படங்களுக் கருகே திரு வேங்கடாச்சாரியார், திரு ம. பொ. சிவஞான கிராமணியார், திரு எஸ். நாராயணஸ்வாமி, திரு பெ. நா. அப்புஸ்வாமி ஆகியோர் அமர்ந்திருக்கின்றனர்.

கையில் வாங்கிய ஓலையைச் சிறிது சிறிதாக விரித்துக் கொண்டே இவ்வளவு நினைவுகளையும் மனத்தில் ஓட விட்டுச் சிந்தித்தார் மகாராணி. ஓலையைப் படிக்கத் தொடங்குவதற்கு முன்னால் தலையை நிமிர்த்தி எதிரே நின்று கொண்டிருந்த கழற்கால் மாறனாரை வானவன்மாதேவி கூர்ந்து நோக்கினார். நோக்கிக் கொண்டே கேட்டார்: "இந்த ஓலையை நான் படித்துத் தானாக வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா? நன்றாகச் சிந்தித்து விட்டு என் கேள்விக்குப் பதில் சொல்லுங்கள். அவசரமில்லை." மகாராணியின் இந்தக் கேள்வியைச் செவியுற்றுக் கழற்கால் மாறனார் சிறிது மிரண்டார். பின்பு சமாளித்துக் கொண்டு கூறினார்:—

"மகாராணியவர்கள் உடனடியாக இந்த ஓலையைப் படித்துப் பார்த்து மகாமண்டலேசுவரருடைய பொறுப்புக்களைக் கைமாற்றி அமைக்கவேண்டுமென்பது என் விருப்பம் மட்டுமில்லை. எல்லாக் கூற்றத் தலைவர்களும் ஒரு மனத்தோடு அப்படி விரும்பியே என்னை இங்கே அனுப்பியிருக்கிறார்கள். இதில் இனிமேலும் சிந்திக்க எதுவுமில்லை."

அவருடைய பதிலைக் கேட்டதும் மகாராணி அந்த ஓலையைப் படிக்கத் தொடங்கிவிட்டார்.

"திருவளர, நலம் வளரக் குமரி கன்னியா பகவதியார் அருள் பரவி நிற்கும் தென்பாண்டி நாட்டு மகாராணியார் திருமுன்பு, பொன்மனையிற் கூடிய கூற்றத் தலைவர்கள் தம்முள் ஒரு நினைவாய், ஒருமனமாய், ஒன்றுபட்டு நிலை நிறுவி நிறைவேற்றி அனுப்பும் ஒப்புரவு மொழி மாறு ஓலை.

காலஞ் சென்ற மகாமன்னர் நாள் தொட்டு இன்றுகாறும் நம்முள் தலை நின்று அறிவும், சூழ்ச்சியும் வல்லாராய் மருங்கூர்க் கூற்றத்து முதன்மை பூண்டு இடையாற்று மங்கலத்தினிருந்து மகாமண்டலேசுவரராயிருக்கும் நம்பியானவர் அண்மையிற் சிறிது காலமாய் மற்றக் கூற்றத் தலைவர்களைக் கலக்காமலும், பொருட்படுத்தாலும், தாமே நினைந்து, தாமே செயற்பட்டு வருதலை நினைந்து வருந்துகிறோம்.

கன்னியாகுமரித் தேவ கோட்டத்தில் இந்த நாட்டு அரசியைப் பகைவர் வேலெறிந்து கொல்ல முயலும் அளவு கவனக் குறைவாக இருக்க நேர்ந்தது, காணமற் போன இளவரசரைத் தேடி அழைத்துவர முயற்சி செய்யாமலிருந்தது, பாண்டி நாட்டின் மதிப்புக்குரிய அரசுரிமைப் பொருள்களைத் தம்முடைய மாளிகையிலிருந்து கொள்ளை போகும்படி விட்டது, கரவந்தபுரத்தார் கண்காணிப்பில் இருக்கும் கொற்கை முத்துச் சலாபத்தில் பகைவர் புகுந்து குழப்பம் விளைவிக்கும் அளவுக்குப் பாதுகாப்புக் குறைவாக இருந்தது;—போன்ற காரணங்களால் இனி மகாமண்டலேசுவரர் மேல் யாங்கள் நம்பிக்கை கொள்வதற்கில்லை என்பதை எல்லோரும் கூடிக் கையொப்பம் நாட்டிய இந்த ஒப்புரவு மொழி மாறு ஓலை மூலம் மாதேவியாகிய மகாராணியாருக்கு அறிவித்துக்

கொள்கிறோம். இவ் வோலை கொண்டு சமூகத்துக்கு வருபவர், மூதுகுரவரும் பொன்மனைக் கூற்றத் தலைவருமாகிய கழற்கால் மாறனார் ஆவார். இவ் வண்ணம் இவ்வோலை கூடியெழுது வித்த நாளும், எழுதுவித்தவர் பெயர் களும். வருமாறு.'' என்று முடிந் திருந்த அந்த ஓலையின் கீழே இடை யாற்று மங்கலம் நம்பி நீங்கலாக மற்ற நால்வருடைய பெயர்களும், எழுதிய நாளும் காணப்பட்டன. மகாராணி வேதனையோடு கூடிய சிரிப்புடன், ''நல்லது! உங்கள் ஓலையை நான் படித்து விட்டேன், பெரியவரே!'' என்று கழற்கால் மாறனாரைப் பார்த் துச் சொன்னார்.

''படித்ததும் மகாராணியாருக்கு என்ன தோன்றுகிறதென்று எளி யேன் அறியலாமோ?'' என்று அவர் கேட்டார்.

''ஆகா! தாராளமாக அறியலாம். இதோ சொல்கிறேன்; கேளுங்கள். எந்த ஓரே ஒரு மனிதருடைய சிந்த னைக் கூர்மையினால் இந்த நாடும், நாளும், நம்பிக்கைகளும், காப்பாற் றப் படுகின்றோமோ அந்த ஒரு மனி தரை அந்தப் பதவியிலிருந்து இழக்க எனக்கு விருப்பமில்லை.''

''அப்படியானால் தென் பாண்டி நாட்டு மகாராணியார் எங்களையெல் லாம் இழந்துவிடத்தான் நேரும்.''

''நான் உங்களை இழந்துவிடுவது தான் நல்லதென்றோ, அல்லது நீங்கள் என்னை இழந்துவிடுவதுதான் உங்க ளுக்கு நல்லதென்றோ தோன்றினால் அப்படியே வைத்துக் கொள்ளுங் களேன்!'' என்றார் மகாராணி.

''எங்கள் ஒத்துழையாமையின் விளைவு மிகவும் பயங்கரமாக இருக்கு மென்பதை இப்போதே கூறிக் கொள்ள விரும்புகிறேன்.''

''அதற்கு நான் என்ன செய்யட்டும்! நீங்களே உங்களைப் பயங்கரமாக்கிக் கொள்கிறீர்கள்!''

''சரி! நான் வருகிறேன்.'' இமுட்டுப் புலி பின்னோக்கிப் பாய்வது போல் விருட்டென்று கோபமாகத் திரும் பினார் கழற்கால் மாறனார்.

''எங்கே அவ்வளவு அவசரம்? கொஞ்சம் இருங்கள்; போகலாம்'' என்று சிரித்துக் கொண்டே அப் போதுதான் உள்ளே நுழைந்த மகா மண்டலேசுவரரைப் பார்த்தபோது பூதம் கண்ட சிறு பிள்ளைபோல் நடுங்கினார் கழற்கால்மாறனார்.

## அத்தியாயம் 33

# கொடும்பாளூர்க் கழுமரத்தில் கோட்டாற்றான் குருதி

கொடும்பாளூர்க் கோட்டைக் குள் அரண்மனைக் கூத்தரங்கத்தில் ஆடிக் கொண்டிருந்த தேவராட்டி பயங்கரமாக அலறிக் கொண்டே தன் கையிலிருந்த திரிசூலத்தை மான் கண் சாளரத்தை நோக்கிச் சுழற்றி எறிந்த போது, அந்தச் சாளரத் துக்குப் பின்னால் ஒளிந்து கொண் டிருந்தவனைப் பிடிப்பதற்காக ஐந்து பேருடைய பத்துக் கால்கள் விரைந்து சென்றன.

ஓடத் தொடங்கிய அந்தப் பத்துக் கால்கள் யாருடையவை என்று இங்கு சொல்லித்தான் தெரிய வேண்டு மென்பதில்லை. இடையாற்று மங்க லத்து மகாமண்டலேசுவரர் மாளிகை யிலிருந்து தென்பாண்டி நாட்டு அர சுரிமைப் பொருள்கள் காணமற் போய் விட்டன என்ற செய்தியைக் கொடும்பாளூர் மன்னன் வாயிலிருந்து கேட்டு வியந்து நின்று கொண்டிருந்த சோழன் உள்பட மற்ற நான்கு பேரும் ஓடினார்கள்.

அந்த மான் கண் பலகணியின் மறு புறம் கொடும்பாளூர் அரண்மனையின் சித்திரகூடம் அமைந்திருந்தது. கோனாட்டு அரச பரம்பரையின் வீரச் செயல்களை விளக்கும் அற்புதமான ஓவியங்கள் அந்தக் கூடத்துச் சுவர் களை நிறைத்துக் கொண்டிருந்தன. சித்திர கூடத்தின் பின்புறம் கோட்டை மதிற் சுவரை ஒட்டினாற் போல் பெரிய தோட்டம் இருந்தது. மதிற் சுவரின் உட்புறத்தைப் போலவே வெளிப்புறத்திலும் அகழிக் கரையை ஒட்டித் தென்னை மரங்கள் அடர்ந்து வளர்ந்திருந்தன.

ஒளிந்திருந்தவனைப் பிடிப்பதற்கா கச் சித்திர கூடத்துக்குள் ஓடி வந்த வர்கள், நாற்புறமும் மூலைக் கொருவ ராகச் சிதறிப் பாய்ந்தனர். ஆனால் அங்கே ஒளிந்து கொண்டிருந்த ஆள்

அவர்கள் வருவதற்குள் சித்திரக் கூடத்து எல்லையைக் கடந்து தோட்டத்துக்குள் புகுந்து விட்டான் என்பது அவர்களுக்குத் தெரியாது. சித்திர கூடத்தின் மூலை, முடுக்குகளெல்லாம் தேடிப் பார்த்து விட்டு ஓரளவு ஏமாற்றத்தோடு அவர்கள் தோட்டத்துக்குள் நுழைந்தபோது, "அதோ! அங்கே பாருங்கள்; மதில் சுவர்மேல்" என்று ஒரு துள்ளுத் துள்ளிக் கொண்டே சுட்டிக் காட்டிக் கூச்சலிட்டான் இளைப்பழுவூர்க் கண்டன் அமுதன். அந்தக் கணமே மற்ற நான்கு பேருடைய பார்வையும் நான்கு வில்லிலிருந்து ஒரே குறியை நோக்கிப் பாயும் அம்புகள் போல் அவன் சுட்டிக் காட்டிய திசையிற் போய்ப் பதிந்தன. அங்கே ஒரு மனிதன் மதில்மேலிருந்து சுவரை ஒட்டி வளர்ந்திருந்த அகழிக்கரைத் தென்னைமரம் ஒன்றின் வழியாக வெளிப்புறம் கீழே இறங்க முயற்சி செய்து கொண்டிருந்தான். அவனுடைய முதுகுப்புறம்தான் சித்திர கூடத்துக் கொல்லையில் நின்று கொண்டு பார்த்த அவர்களுக்குத் தெரிந்தது. முகம் தெரியவில்லை. உட்பக்கத்திலும் மதில் சுவர் அருகே அதே மாதிரி மற்றொரு தென்னை மரம் இருந்ததனால் அந்த ஆள் அதன் வழியாகத்தான் மதில்மேல் ஏறியிருக்க வேண்டுமென்று அவர்கள் அனுமானித்துக் கொண்டார்கள். மிக வேகமாகத் தென்னை மரங்களில் ஏறிப் பழக்கப்பட்டவனாக இருந்தாலொழிய அவ்வளவு விரைவில் மேலே ஏறி மதில் சுவரை அடைந்திருப்பது சாத்தியமில்லை.

"திருட்டு நாய்! மதில்மேலிருந்தே செத்துக் கீழே விழட்டும்!" என்று கடுங் கோபத்தோடு இரைந்து கத்திக் கொண்டே பாம்பு படமெடுத்து நெளிவது போல் இருந்த ஒரு சிறு குத்துவாளை இடையிலிருந்து உருவிக் குறி வைத்து வீசுவதற்கு ஓங்கினான் கொடும்பாளூர் மன்னன். சோழன் அருகிற் பாய்ந்து வந்து வாளை வீசுவதற்கு ஓங்கிய கொடும்பாளூரானின் கையைப் பிடித்துக் கொண்டான்.

"பொறுங்கள்! நீங்கள் விவரம் தெரிந்த மனிதராக இருந்தால் இப்படிச் செய்ய மாட்டீர்கள். திருட்டுத்தனமாக இங்கே அவன் எப்படி நுழைந்தான் என்பதையும் எதற்காக நுழைந்தான் என்பதையும் முழுமையாகத் தெரிந்துகொள்ள வேண்டுமானால் அவன் வந்த வழியே அவன் போக்கில் அவனை வெளியேற விட்டுக் கடைசியில் பிடித்துக் கொண்டு உண்மை அறிய வேண்டும். கையில் அகப்பட்ட ஒரு காடையை (ஒரு வகைப் பறவை) வெளியே விட்டால் காட்டிலுள்ள காடைகளையெல்லாம் அதைக் கொண்டே பிடித்து விடலாம். ஓசைப்படாமல் திரும்பி வாருங்கள். அவன் சுதந்திரமாகக் கவலையின்றித் தென்னை மரத்தின் வழியாக மறுபக்கம் அகழிக்கரையில் போய் இறங்கட்டும். நாம் அங்கே போய்க் காத்திருந்து அவனைப் பிடித்துக் கொள்ளலாம்" என்றான் சோழ மன்னன். எல்லோரும் உடனே அங்கிருந்து அகழிக்கரைக்கு விரைந்தனர்.

"கொடும்பாளூராரே! எனக்கு ஒரு சந்தேகம். இவ்வளவு வேகமாகத் தென்னைமரம் ஏறி இறங்கத் தெரிந்தவனாக இருந்தால் தென்னை மரங்கள் அதிகமாக இருக்கும் பகுதியைச் சேர்ந்தவனாக இருக்க வேண்டும். ஒருவேளை தென்பாண்டி நாட்டு நாஞ்சிற் பகுதியைச் சேர்ந்தவனாக இருக்கலாம்" என்று அகழிக்கரைக்குப் போகும்போது சோழன் கொடும்பாளூர் மன்னனிடம் சந்தேகம் தொனிக்கும் குரலில் மெதுவாகச் சொன்னான். "சந்தேகமே இல்லை!

## அருள் வாக்கு

ஈசுவரன் நமக்குச் செல்வத்தைக் கொடுக்கிறார். அதை வைத்துக் கொண்டு பரோபகாரம் செய்ய வேண்டும். ஒவ்வொருவரும் தங்கள் சக்திக்கு ஏற்றவாறு தர்மம் செய்ய வேண்டும். சின்னக் குளமாவது வெட்டலாம். ஆடுமாடுகள் கூடத் தண்ணீரைக் குடித்து ஆனந்தமடையும். நந்தவனம் வைக்கலாம். இறைவனுக்கு மலர்க் கைங்கர்யம் செய்யலாம். சத்திரம் கட்டி அன்னதானம் செய்யலாம்; தண்ணீர்ப் பந்தல் வைக்கலாம். அன்னதானத்திலும் சிறந்தது வித்தியாதானம். தர்மப்பள்ளி நிறுவிப் பிள்ளைகளுக்குக் கல்வியைப் புகட்டலாம். இப்படி ஒவ்வொருவரும் தங்களால் முடிந்த தர்மத்தைச் செய்து வந்தால் உலகத்தில் துன்பமே இருக்காது. ஒவ்வொருவரும் தங்கள் கஷ்டங்களைப் பாராட்டாமல் பிறர் துயரங்களை நீக்கினால் உலகம் முழுவதும் ஒற்றுமையாக வாழ முடியும்.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது" என்று கொடும்பாளூரானிடமிருந்து பதில் வந்தது.

அகழிக்கரைத் தென்னை மரத்திலிருந்து அவன் கீழே இறங்கவும் அவர்கள் ஐந்து பேரும் ஓடிப் போய்ச் சுற்றி வளைத்துக் கொள்ளவும் சரியாக இருந்தது. அவன் தப்பி ஓட முடியவில்லை. ஆ! இப்போது அவனுடைய முகத்தையும், முழு உருவத்தையும் நன்றாகப் பார்க்க முடிகிறது. இந்தக் கோணல் வாயையும், நீள மூக்கையும், கோமாளித்தனமான தோற்றத்தையும் பார்த்ததுமே நமக்கு இதற்கு முன்பே எங்கோ பார்த்திருக்கிறோம் போன்ற நினைவு வருகிறதல்லவா? ஆம்! இந்தக் கோமாளி ஏற்கெனவே நமக்கு அறிமுகமானவன்தான்.

வட திசையில் ஒற்றறிவதற்கும், வேறு சில இரகசியக் காரியங்களுக்காகவும் மெய்க்காவற் படை வீரர்களில் ஐம்பது பேர்களைத் தேர்ந்தெடுத்து, மகா மண்டலேசுவரர் வடக்கே அனுப்பினாரல்லவா? அப்போது பொய் கூறுவதில் சிறந்தவனைத் தேர்ந்தெடுப்பதற்கு அவர் வைத்த சோதனையில் வெற்றி பெற்ற கோமாளிதான் இப்போது சிக்கிக் கொண்டு விழிக்கிறான்.

தன்னைச் சுற்றி நான்கு புறமும் ஓட முடியாமல் எதிரிகளால் வளைத்துக் கொள்ளப்பட்ட நிலையில் அன்று தாங்கள் புறப்பட்டபோது வழியனுப்பிய மகா மண்டலேசுவரரின் சில சொற்களை அவனுடைய அகச் செவிகள் மானசீகமாகக் கேட்டன.

"அகப்பட்டுக் கொண்டால் சதையைத் துண்டு துண்டாக்கினாலும் உண்மைகளைச் சொல்லி நாட்டைக் காட்டிக் கொடுக்கும் துரோகத்தைச் செய்யக் கூடாது. உயிர், உடல், பொருள், எதையும் எந்த விநாடியும் இழக்கத் தயாராயிருக்க வேண்டும்"— இந்தக் கணீரென்ற குரலோடு அந்தக் கம்பீரமான முகம் தோன்றி எதிரிகளிடையே மாட்டிக் கொண்ட அவன் மனத்துக்கு உறுதியின் அவசியத்தை நினைப்பூட்டி வற்புறுத்தின.

"அடே! அற்பப் பதரே! இந்தக் கொடும்பாளூர்க் கோட்டைக்குள் புகுந்து ஒற்றறிய முயன்றவர்கள் எவரையும் இதுவரையில் நான் உயிரோடு திரும்ப விட்டதில்லை. நீ யார்? எங்கிருந்து வந்தாய்? எதற்காக வந்தாய்? என்பதையெல்லாம் மரியாதையாகச் சொல்லிவிடு. என்னுடைய கோட்டைக் கழுமரத்துக்கு நீண்ட நாட்களாக இரத்தப் பசி ஏற்பட்டிருக்கிறது. அதைத் தணிக்கத்தான் நீ வந்து சேர்ந்திருக்கிறாய்"— என்று தன் இரும்புப் பிடியால் அகப்பட்டவனின் இரண்டு கைகளையும் இறுக்கிப் பிடித்துக் கொண்டு இரைந்தான் கொடும்பாளூர் மன்னன். ஆனால் அகப்பட்டவனோ முற்றிலும் ஊமையாக மாறி விட்டான். அன்றிரவு நெடுநேரம் வரையில் அவனை ஓரிடத்தில் கட்டிப் போட்டு என்னென்னவோ சித்திரவதைகளெல்லாம் செய்தார்கள். அவன் பேசவே இல்லை. கடைசியாகக் கொடும்பாளூரான் ஒரு பயங்கரமான கேள்வி கேட்டான் :— "அடே! ஊமைத் தடியா; நாளைக்காலையில் இரத்தப் பசியெடுத்துக் காய்ந்து, உலர்ந்து கிடக்கும் இந்தக் கோட்டையின் கழுமரத்தில் நீ உன் முடிவைக் காணவேண்டுமென்றுதான் விரும்புகிறாயா?"

"செய்யுங்கள் அப்படியே!"— எல்லோரும் ஆச்சரியப்படுமாறு அதுவரை பேசாமல் இருந்த அவன் இந்த இரண்டே வார்த்தைகளை மட்டும் முகத்தில் உறுதி ஒளிர உரக்கப் பேசிவிட்டு மீண்டும் வாய் மூடிக் கொண்டு ஊமையானான். அவனிடமிருந்து உண்மையைக் கறக்கும் முயற்சியில் அவர்கள் ஐந்து பேருமே தோற்றுப் போனார்கள். கொடும்பாளூரான் பயமுறுத்தி மிரட்டினான். சோழன் நயமாகப் பேசி அரட்டினான். கண்டன் அமுதனும், பரதூருடையானும், அரசூருடையானும், அடியடியென்று கைத்தினவு தீர அடித்தார்கள். பார்ப்பதற்குக் கோமாளி போல் இருந்த அந்த ஒற்றனோ தன் கொள்கையில் தளராமல் திடமாக இருந்தான்.

கோட்டைக்குள் ஏறிக் குதிக்க வசதியாக உள்ளும் புறமும் வளர்ந்திருந்த அந்த இரண்டு தென்னை மரங்களையும் இரவோடிரவாக வெட்டிச் சாய்க்குமாறு தன் ஆட்களுக்கு உத்தரவு போட்டான் கொடும்பாளூர் மன்னன். மறுநாள் வைகறையில் புலருவதற்காகக் கீழ்வானில் செம்மை படர்வதற்கு முன்னால் கொடும்பாளூர்க் கோட்டைக் கழுமரத்தில் செம்மை படர்ந்து விட்டது. கோட்டாற்றுப் படைத்தளத்தில் வீரனாக உருவாகி அரண்மனையில் மெய்க்காவலனாகப் பணியாற்றிய தென்பாண்டி நாட்டு வீரன் ஒருவனின் குருதி அந்தக் கழுமரத்தை நனைத்துச் செந்நிறம் பூசி விட்டது. (தொடரும்)

அவள் எவ்வளவு அழகாயிருக்கிறாள்...

அவள் உபயோகிப்பது **பாண்ட்ஸ்**

**நீங்களும் சருமத்தை மிருதுவாகவும், வழவழப்பாகவும், அழகாகவும் வைத்துக் கொள்ள பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகியுங்கள்**

இலேசானதும் பனிக்கட்டிபோல் மென்மையானதுமான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் சருமத்தின் மென்மையான அழகைப் பாதுகாத்து, அதை எழிலுடனும், பொலிவுடனும் இருக்கச்செய்யும். எண்ணெய்ப் பசையில்லாத இந்த க்ரீம் தேய்த்துக்கொண்ட மறு விநாடியிலேயே மறைந்து விடுகிறது. பவுடர் போட்டுக் கொள்வதற்குமுன் இந்த க்ரீமைத் தடவிக்கொண்டால் பவுடர் மணிக்கணக்கில் படிந்திருக்கும்.




**சருமத்தை சுத்திகரிக்கும் சிறந்த க்ரீம்**

தினமும் இரவில் பாண்ட்ஸ் கோல்டு க்ரீமை முகத்தில் தடவுங்கள். அது உங்கள் மிருதுவான சருமத்தை சுத்தம்செய்து முக அழகைப் பாதுகாக்கும்.

*சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பரேடட்*

*(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது)*

# தமிழ் கூறும் நல்லுலகம்

பினாங்கு தமிழர் பிரதிநிதித்துவ சபையின் ஆதரவில் தமிழர் திருநாள் 27-1-59 அன்று பினாங்கு நகர மண்டபத்தில் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. நாலாயிரத்துக்கு அதிகமான மக்கள் கேட்டு, கண்டு ரசித்தார்கள். 'வாழ்க நிரந்தரம்' தமிழ் மொழி வாழ்த்துடன் விழா ஆரம்பமாயிற்று. திருநாள் குழு செயலாளர் திரு கி.த. ராமசாமி அவர்கள் வரவேற்புரைக்குப் பின் திரு டி. பி. எஸ். கிருஷ்ணசாமி அவர்கள் கூட்டத்துக்குத் தலைமை தாங்கினார்கள். செல்விகள் இந்திராதேவி, கமலா மணி, கௌரி, லீலாமணி, சிவமணி, சரஸ்வதி, வைஜயந்திமாலா ஆகியோரின் பூஜா நடனம், அலாரிப்பு, ஜதிஸ்வரம் முதலிய நடனங்கள் கண்ணுக்கு இனிமையாக இருந்தன. பாரதியார் ஔவையார் போன்ற மாறுவேடப் போட்டியும் நடைபெற்றது.

திருச்சி அர்ச்சூசையப்பர் கல்லூரி தமிழ்த் துறைத் தலைவர் பேராசிரியர் ரம்போலா மாஸ்கரேனஸ் அவர்களும், சென்னை மாநிலக் கல்லூரி பேராசிரியர் திரு க. கோவிந்தராசன் அவர்களும், சிங்கப்பூர் தமிழ் முரசு ஆசிரியர் தமிழ்வேள் கோ. திரு சாரங்கபாணி அவர்களும், தமிழர் பண்பாடு, வீரம், தமிழ் மொழியின் சிறப்பு, இலக்கிய நயம் முதலியன பற்றி விரிவாக எடுத்துரைத்தார்கள். பூப்பந்துப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கும், நடனமாடிய செல்விகளுக்கும் நகர மேயர் திரு டி. எஸ். இராமநாதன் ஜே. பி. அவர்களின் துணைவியார் பரிசுகள் வழங்கினார்கள்.

★

சிந்திரிவாழ் தமிழர்கள், ஸ்ரீமதி நீலகண்டன் அவர்களின் தலைமையில் நடந்து வரும் கர்நாடக கலாமண்டலி என்ற சபையின் ஆதரவில் நடந்த கச்சேரிகளைக் கேட்டு மகிழ ஒரு அரிய வாய்ப்பு கிடைத்தது. தமிழ் நாட்டை விட்டுப் பல மைல்களுக்கு அப்பாலுள்ள பீகார் மாகாணத்தில் இருக்கும் உரத் தொழிற்சாலையில் பணிபுரிபவர்களுக்கு உழைப்புக்கு உற்சாக மூட்ட அவ்வப்போது சங்கீதக் கச்சேரிகள் நடைபெற்று வருகின்றன. இச்சபை ஆரம்பித்து மூன்று வருடங்களாகியும் இந்தக் குறுகிய சமயத்துக்குள் கர்நாடக சங்கீதத்தின் தலைசிறந்த பாடகர் பாடகிகள் இங்கு வந்து கச்சேரி செய்தது சிந்திரி வாழ் தமிழர்களின் பெரும் பாக்கியமே. முதன் முதலில் திருச்சேரை சகோதரர்களின் நாகஸ்வரக் கச்சேரி கோவிலில் ஆரம்பிக்கப்பட்டது. பிறகு ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி, ஸ்ரீமதி எம். எல். வஸந்தகுமாரி, திரு ஜி. என். பாலசுப்பிரமணியம், ராதா ஜயலக்ஷ்மி, ஸ்ரீ ஆலத்தூர் சகோதரர்கள் ஆகியவர்களின் கச்சேரிகளும், கேரள சகோதரிகளின் நாட்டியமும் நடைபெற்றன. குடியரசு தினத்தன்று திரு ஏ.கே.சி.நடராஜன் கிளாரினெட் இன்னிசை வழங்கினார்.

பிரதி வருஷமும் பாரதியார், ஸ்ரீ முத்துசுவாமி தீக்ஷிதர், அய்யாவாள் இவர்களுடைய தினத்தை மேற்படி சபையினர் கொண்டாடுகின்றனர். இவ்வருடம் தீக்ஷிதர் தினத்தன்று சுப்ரீம் கோர்ட் ஜட்ஜ் சங்கீத கலாநிதி ஸ்ரீ டி. எல். வெங்கடராமய்யர் அவர்கள் தீக்ஷிதர் அவர்களைப் பற்றி மிகவும் அழகாகவும் தெளிவாகவும் பேசினார்.

★

மத்திய அந்தமான் நீளத் தீவு (லாங் ஐலண்ட்) தமிழர் படிப்பகத்தின் சார்பில் இரண்டாம் ஆண்டு பொங்கல் விழா காட்டு இலாகா மாவட்ட உயர் அதிகாரி திரு சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில் விமரிசையாக நடைபெற்றது.

தலைவர் தமிழர் படிப்பகச் சுடர்க் கொடியை ஏற்றி வைத்தார். திரு ராம கிருஷ்ணன் அவர்கள் பொங்கலின் சிறப்பு பற்றியும், திரு திம்மாரெட்டி அவர்கள் 'பொங்கல் விழாவும் தமிழ் நாடும்' என்பது பற்றியும், திரு குலாம் ரசூல் அவர்கள் 'தமிழர் அன்றும் இன்றும்' என்பது பற்றியும் சொற்பொழிவாற்றினர். தலைவர் அவர்கள் நீளத் தீவு தமிழர் படிப்பகத்தின் முன்னேற்றத்தைப் பற்றியும் தமிழர்களின் சிறப்பு பற்றியும் விரிவாகப் பேசினார்.

செயலாளர் திரு சேக் முகம்மது அவையில் குழுமியிருந்த அனைவருக்கும் நன்றி நவில, திரு நாகு அவர்கள் பொங்கல் விழா பாட்டு பாடியபின் கூட்டம் இனிது முடிந்தது.

★

திருச்சி ஜங்ஷனிலுள்ள கல்லுக்குழியில் சத்சங்கம் இரண்டாண்டுகளாகப் பல அரிய பணிகளையாற்றி வருகிறது. சத்சங்கத்தின் மூன்றாவது ஆண்டு விழாவை பிப்ரவரி 15-ம் தேதி முதல் ஐந்து நாட்கள் விமரிசையாகக் கொண்டாடினர். இவ்வைபவத்துக்கு அட்வகேட் திரு எம். வி. கிருஷ்ணமூர்த்தி ராவ் தலைமை வகித்துச் சிறப்பித்தார்கள். மாணிக்கவாசகர் திருப்பள்ளியெழுச்சி, பஜகோவிந்தம், தொண்டரடிப் பொடியாழ்வார் திருப்பள்ளியெழுச்சி ஆகியவைகளில் சிறுமிகளுக்குப் பாடல் போட்டிகள் நடைபெற்றன. அச்சிறுமிகளுக்கு ஸ்ரீமதி சுலோசனா மகாதேவன் அருமையாகப் பயிற்சியளித்திருந்தார். சிறுவர்களுக்குப் பேச்சுப் போட்டியும் நடந்தது. ரயில்வே டிவிஷனல் என்ஜினியர் திரு பி. பாண்டுரங்க ஷெனாய் வெற்றி பெற்ற சிறுவர் சிறுமிகளுக்குப் பரிசுகள் வழங்கினார்.

# சோக்ரதர் சம்வாதங்கள்

க. சந்தானம்

## 8. ஆத்மாவின் அரசாங்கம்

*[பங்கெடுத்துக்கொள்ளுவோர் — சோக்ரதர், கனக்சேகான், ஆதிமந்தேசன் முதலானோர்]*

சோக்: ஒவ்வொருவருக்கும் தாகம், பசி முதலிய ஓர் ஆசை சமூகத்தில் இருக்கின்றதல்லவா?

கன: இருக்கிறது.

சோக்: எல்லாவற்றிலும் முதன்மையானது தாகம். அதற்குப் பின் பசி என்று சொல்லலாமா?

கன: சரி.

சோக்: தாகம் என்பது அதைச் சாந்தி செய்யும் ஏதாவது பானம் வேண்டுமென்ற ஆசை மட்டுமா? அல்லது குளிர்ந்த பானம், உஷ்ணமான பானம், அதிகம், குறைவு என்ற விசேஷங்களோடு கூடியதா?

கன: ஒவ்வோர் ஆசையும் அதனைத் தீர்த்துக் கொள்ளும் விருப்பம் மட்டுமேயாகும். வேறு தனிப் பொருளைப் பற்றியது அதற்கும் அதிகமாகும்.

சோக்: தாகத்துக்கு ஆசையிருக்கும் பொழுது அதை அடக்கி வைக்கும் சக்தி அந்த ஆசையிலிருந்து வேறுபட்டதாக இருக்க வேண்டுமல்லவா? ஆசை ஓர் புறம் மிருகத்தைப் போல் பானத்தை நோக்கிப் பலவந்தப் படுத்தும்பொழுது, அதை எதிர்ப்பது மற்றோர் உணர்ச்சியாகுமல்லவா? ஒரே ஆசை முரண்பாடான இரண்டு காரியங்களைச் செய்ய முடியாதன்றோ?

கன: ஒருகாலும் முடியாது.

சோக்: சிலவேளை தாகமாக இருந்தாலும் ஜனங்கள் பானத்தை மறுப்பதுண்டா?

கன: பலர் அடிக்கடி அப்படிச் செய்கின்றனர்.

சோக்: அப்பொழுது நாம் என்ன சொல்லுவது? அவர்களுடைய ஆத்மாவில் பானத்தை விரும்பும் ஓர் உணர்ச்சியும் அதை மறுக்கும் மற்றோர் உணர்ச்சியும் ஒன்றோடொன்று எதிர்க்கிறதென்றும், மறுக்கும் உணர்ச்சி வெற்றி பெற்றதென்றும் கூறலாமா?

கன: அது பொருத்தமாகும் என்று நினைக்கிறேன்.

சோக்: ஆகவின் இவ்விரண்டும் தனிப்பட்ட சக்திகள் என்று அனுமானிக்க வேண்டும். மறுக்கும் சக்தி ஆத்மாவின் சிந்தனைச் சக்தியிலிருந்து தோன்றுகிறது. பானத்தை நாடும் சக்தி மனிதனின் இயற்கையான ஆசாபாசங்களின் சக்தியாகுமல்லவா?

கன: அப்படி நிர்ணயிப்பது நியாயமே.

சோக்: இவ்விரண்டையும் பிரித்து விட்டோம் என்று வைத்துக் கொள்ளுவோம். நமக்கு ஆத்திரத்தை மூட்டும் மனோவேகம் வேறொன்றா அல்லது இவ்விரண்டில் ஒன்றா?

கன: இயற்கையான ஆசாபாசங்களில் அடங்கியதாகத் தோன்றுகிறது.

சோக்: தனது ஆசைகளால் பகுத்தறிவுக்கு விரோதமாக ஒருவன் காரியம் செய்யும்பொழுது, தனக்கு எதிராகக் கோபித்துக் கொண்டு தன்னையே வைது கொள்வதில்லையா? அப்பொழுது இரண்டு உணர்ச்சிகளுக்கு முரண்பாடு ஏற்படுகிறது. அந்தச் சந்தர்ப்பங்களில் மனோவேகம் பகுத்தறிவின் கூட்டாளியாகக் காணப்படுகிறது. பகுத்தறிவு தெளிவாக ஓர் வழிகாட்டுங்கால், அதற்கு எதிராக மனோவேகம் ஆசைகளோடு கூடுவதைக் கண்டிருக்கிறாயா?

கன: இல்லை.

சோக்: ஒரு மனிதன் தான் தவறு செய்ததாக உணரும்பொழுது, அவன் நிலைமை என்ன? அவன் எவ்வளவு தூயவனாக இருக்கிறானோ, அவ்வளவு ஆத்திரமின்றிப் பொறுமையுடன் தனக்கு அளிக்கப்படும் நியாயமான தண்டனையை ஏற்பான் அல்லவா?

கன: உண்மை.

சோக்: தனக்குத் தீங்கு இழைக்கப்பட்டது என்று அவன் எண்ணினால் என்ன செய்கிறான்? மிகவும் கோபித்து, கொதித்து எழுந்து தனக்கு நியாயம் கிடைப்பதற்காகச் சண்டை போட மாட்டானோ? அதன் பொருட்டுத் தாகம், பசி முதலிய பலவித கஷ்டங்களையும் பொருட்படுத்த மாட்டான். தன் காரியம் கூடினால் அல்லது தான் மாண்டாலொழிய அவனது மனோவேகம் குன்றாது. இடையன் தன் காவல் நாயை அடக்குவது போல், பகுத்தறிவு கூப்பிட்டால் மட்டுமே அவனுடைய வேகம் சாந்தமாகும்.

கள : நமது உதவிக் காவலர்களைக் காவலர்களின் காவல் நாய்களாகச் செய்ய வில்லையா?

சோக் : ஆனால் மனோ வேகத்தைப் பற்றி நமது அபிப்பிராயம் இப்பொழுது மாறிவிட்டது போலும்! சற்று முன், அது ஆசாபாசங்களுக்குள் அடங்கியது என்று எண்ணினோம். ஆத்மப் போரில் அது பகுத்தறிவின் கட்சியில் இருப்பதாகத் தோன்றுகிறது.

கள : அப்படியே.

சோக் : ஆதலால், அது மூன்றாவது அம்சமாகக் காணப்படுகிறதல்லவா? நமது நகரத்தில் காவலர், உதவிக் காவலர், மக்கள் என்று மூன்று வகுப்புக்கள் இருந்தது போல் ஆத்மாவில் பகுத்தறிவு மனோவேகம், ஆசாபாசங்கள் என்று மூன்று வகுப்புக்கள் இருப்பதாகப் புலப்படுகிறது. தீய வழக்கத்தினால் கெட்டு விடாமல் இருந்தால், மனோவேகம் பகுத்தறிவின் தோழனாகவும் தோன்றுகிறது.

கள : அது மூன்றாவது அம்சமாகத் தான். இருக்க வேண்டும்.

சோக் : பகுத்தறிவிலிருந்து அது வேறு தான். ஆசாபாசங்களிலும் அடங்கவில்லை.

கள : அது இப்பொழுது தெளிவாகப் புலப்படுகிறது. குழந்தைகளிடம் மனோ வேகம் தீவிரமாகக் காணப் படுகிறது. ஆனால் பகுத்தறிவு புலப்படுவதில்லை.

சோக் : நீ கூறுவது மிகவும் பொருத்த மானது. மிருகங்களைக் கவனித்தால் இது தெளிவாகிறது. ஹோமர் ஓரிடத்தில் பின் வருமாறு கூறியிருக்கிறார்:

'கொடிய மனோ வேகத்தைக் கண்டித் துத்தர மார்புடைத்து வருந்தினன்.'

இதில் ஹோமர் நன்னெறியைக் கேட்கும் ஓர் தத்துவத்தையும், அநியாய ஆத்திரமூட்டும் மற்றோர் தத்துவத்தையும் சுட்டிக் காட்டி முதல் தத்துவம் இரண்டாவதைக் கண்டித்தது என்கிறார்.

கள : நீங்கள் கூறுவது முற்றிலும் சரி.

சோக் : மிகவும் பிரயாசைப்பட்டு நீந்திக் கரை சேர்ந்து விட்டோம். ராஜ்யத்தைப் போலவே ஆத்மாவிலும் மூன்று பிரிவுகள் இருக்கின்றன.

கள : ஆமாம்!

சோக் : அப்படியானால், ராஜ்யத்தைப் போலவே ஆத்மாவிலும் விவேகம் அதே பணி செய்யுமல்லவா?

கள : நிச்சயமாக.

சோக் : அவ்விதமே வீரமும் ராஜ்யம், ஆத்மா இரண்டிலும் ஓர் தன்மையதாக இருக்குமன்றோ? தன்னடக்கமும் அப்படியே இருக்குமல்லவா?

கள : சந்தேகமின்றி.

சோக்: முடிவாக, ராஜ்யத்தில் போலவே ஆத்மாவிலும் நீதி ஓர் விதமாகவே அமையுமன்றோ?

கள : அதுவும் அப்படியே!

சோக்: ராஜ்யத்தில் மூன்று வகுப்பினரும் தம் தம் கடமைகளைச் சரிவரச் செய்வதே நீதி என்ற நிர்ணயத்தை மறந்து விட்டோமா?

கள : மறக்கவில்லை.

சோக் : அதனால், பகுத்தறிவு விவேக முள்ளதானதால் அரசு புரிய வேண்டும். மனோவேகம் அதற்குத் துணை புரிய வேண்டும்.

கள : அதுவே சரி!

சோக்: மனப் பயிற்சியும், தேகப் பயிற்சியும் சேர்ந்து ஆத்மாவின் அம்சங்களை ஒன்றோடொன்று ஒத்துழைக்கச் செய்யுமல்லவா?

கள : நிச்சயமாக!

சோக்: இவ்விரண்டும் இப்படிப் போதிக்கப்பட்டு ஆத்மாவின் பெரும்பான்மை அம்சமான ஆசாபாசங்களை அடக்கி அவற்றின் மீது காவல் புரியும். இல்லையேல் அவை சுக வேட்டையில் ஈடுபட்டுத் தமது கடமைகளைச் செய்யாமல் ஆத்மாவின் மீது ஆதிக்கம் பெற்று அதனைக் கவிழ்த்து விடுமல்லவா?

கள : அதற்கென்ன சந்தேகம்?

சோக் : இவ்விரண்டும் தேகம், ஆத்மா இரண்டுக்கும் வெளி எதிரிகளிடமிருந்து காப்பாற்றும் பகுத்தறிவு புத்திமதிகூறும். மனோவேகம் அதன்படி தீமையை எதிர்த்துப் போர் புரிந்து நன்மையை நிலை நாட்டும்.

கள : உண்மை.

சோக் : துன்பத்தையும் இன்பத்தையும் பொருட்படுத்தாமல் பகுத்தறிவின் உபதேசங்களைப் பின்பற்றுவோனையே வீரனென்று அழைப்போம்.

கள : அப்படியே.

சோக் : ஆத்மா எல்லா அம்சங்களுக்கும் நியாயமான விதிகளைச் செய்யும் காரணத்தாலல்லவா ஒருவனை விவேகி என்று கூறுகிறோம்?

கள : ஆம்!

சோக் : மூன்று அம்சங்களும் முரண்பாடின்றி ஒற்றுமையாக இருக்கும் பொழுது ஒருவனுக்குத் தன்னடக்கம் இருப்பதாக அறிகிறோம்.

கள : ராஜ்யத்திலும் சரி, ஆத்மாவிலும் சரி, தன்னடக்கத்தின் தன்மை இதுவே.

சோக் : ராஜ்யத்தில் போல் ஆத்மாவிலும் நீதியின் சொரூபம் நன்கு பிரகாசிக்கிறதா?

கள : பிரகாசிக்கிறது.

சோக்: இப்பொழுது நீதியுள்ள புருஷனையும், நீதியுள்ள ராஜ்யத்தையும் நாம் கண்டு விட்டோம் என்று கூறினால் அது வாய்ப்பாகுமா?

கள : கடவுள் சாட்சியாக, இல்லவே இல்லை.

சோக் : இப்பொழுது அநீதத்தைப் பற்றி ஆலோசிப்போம்.

கள : அவசியம்.



தொலை நாடுகளில் இருந்தாலும் தமிழ் மக்கள் தமிழை மறந்துவிடுவதில்லை; தமிழறிந்த மேதையைக் கௌரவிக்கத் தயங்குவதில்லை. சென்னை 'கலைமகள்' ஆசிரியர் திரு கி. வா. ஜகந்நாதன் அவர்கள் பர்மாவுக்குத் தமிழர் திருநாளில் கலந்து கொள்ளச் சென்றிருந்தார். அவுங்சான் மைதானக் களியாட்டத் திடலில் நடந்த தமிழ் விழாவுக்குப் பர்மா நகரப் பிரமுகர்கள், பத்திராதிபர், பொதுமக்கள் அனைவரும் திரளாக விஜயம் செய்திருந்தனர். திரு கி. வா. ஜ. அவர்கள் 'தமிழ்ப் பண்பாடு' 'விருந்தோம்பல்' என்னும் இரு சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்.

தாயகத்திலிருந்து வந்துள்ள ''கலைமகள்'' ஆசிரியருக்குப் பர்மா தமிழர்கள் பதின்மூன்று தினங்களும் வரவேற்பளித்துக் கௌரவித்தது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. பர்மா தமிழ்மக்கள் அவரது அரிய உரைகளைக் கேட்டுப் பரவசமானார்கள்.

இந்திய தூதுவ அலுவலக முதற் செயலாளர் திரு முருகேசன் அவர்களையும், திரு கி. வா. ஜ.வையும், விழாத் தலைவர் திரு எஸ். லட்சுமணன் அவர்களையும், விழாக் குழுத் தலைவர் திரு ஏகாம்பரம் கலைமகள் ஆசிரியருக்கு மாலையணிவித்துக் கௌரவிப்பதையும் இந்தப் படங்களில் காணலாம்.

---

சோக்: அது மூன்று அம்சங்களுக்குள் ஓர் வித முரண்பாடாக இருக்க வேண்டுமல்லவா? ஓர் அம்சம் தனது எல்லையை மீறி ஆத்மாவின் மீது முழு ஆதிக்கம் பெற முயன்றால் அவ்விதக் குழப்பம் நேரிடும்.

கள: மிகவும் சரியாகக் கூறினீர்கள்.

சோக்: நீதியும், அநீதியும் தெளிவாகி விட்ட படியால், நீதி வழுவாமல் ஒழுகுவதும், அநீதமாக நடப்பதும் நன்கு புலப்பட்டு விட்டதல்லவா?

கள: எப்படி?

சோக்: உடலுக்கு ஆரோக்கியமும், வியாதியும் எவ்விதமோ, அவ்விதமே ஆத்மாவுக்கு நீதியும், அநீதியும்.

கள: சிறிது தெளிவாகக் கூறுங்கள்.

சோக்: ஆரோக்கியமான வாழ்க்கையால் ஆரோக்கியம் ஏற்படுகிறது. அதில்லாமல் தாறுமாறான வாழ்க்கையால் நோயால் பிடிக்கப்படுகிறான். அவ்வாறே நீதி வழுவாமல் இருந்தால், நீதி நிலை நிற்கிறது. அதற்குமாறாக அநீதியாகக் காரியம் செய்தால் அநீதி ஆத்மாவில் குடி கொள்கிறது.

கள: முற்றிலும் உண்மை.

சோக்: ஆதலால் தர்மம் என்பது ஆத்மாவின் ஆரோக்கியம், அழகு, நல்ல நிலை. அதர்மம் என்பது வியாதி, விகாரம், பலவீனம்.

கள: அப்படியே.

சோக்: என்னுடன் வருவாய். நாம் ஏறியிருக்கும் மலை உச்சியிலிருந்து காண்போம். அதோ பார். தர்மத்தின் சொரூபம் ஒன்றே. அதர்மத்தின் உருவங்களுக்குக் கணக்கில்லை. ஆனால் நான்கு சொரூபங்கள் தெளிவாகத் தோன்றுகின்றன.

கள: நீங்கள் கூறுவது எனக்கு விளங்கவில்லையே?

சோக்: எத்தனை விதமான அரசியல் அமைப்புக்கள் உண்டோ அத்தனை விதமான ஆத்மாக்களும் உண்டு.

கள: அவை எத்தனை?

சோக்: ஐந்துவித அமைப்புகள், ஐந்து வித ஆத்மாக்கள்.

கள: அவற்றை வர்ணிக்க வேண்டும்.

சோக்: ஓர்வித ராஜ்யத்தை தர்மராஜன் ஆளும் அரசு என்றும், உத்தமர் ஆளும் அரசு என்றும் இருவிதமாகக் கூறுவர். ஆனால் அது உண்மையில் ஒன்றே. காவலன் ஒருவனானாலும், பலரானாலும், நமது திட்டப்படி கல்வியும், பயிற்சியும் பெற்றால் ராஜ்யத்தின் தன்மை திரியாது.

கள: திரியாது.

சோக்: அவ்வித ராஜ்யத்தையும் அதன் அமைப்பையும் தர்மம் என்று கூறுவேன். மற்றவை அதர்மமென்றும், தீயவை என்றும் சொல்ல வேண்டும். பிரதேச ராஜ்யத்துக்கும் சரி, மனிதனின் ஆத்ம ராஜ்யத்துக்கும் சரி, இந்தப் பாகுபாடு பொருந்தும்.



போர்ட் டிரஸ்ட் பிரதம காஷியர் திரு ஆர். சுந்தரராஜன் அவர்களின் குமாரி மைதிலிக்கும் திரு வி. சக்கரபாணிக்கும் விவாகம் நடைபெற்றது.



வீனஸ் பிக்சர்ஸ் திரு கிருஷ்ணமூர்த்தியின் மருமான் சௌ. ஜயலட்சுமிக்கும் திரு வி. ஜி. ரவிக்கும் தியாகராயநகரில் திருமணம் நடந்தேறியது.

# வாழ்க மணமக்கள்



திரு எம். பரமேசுவரய்யர் பி. ஏ., எல். டி., அவர்களின் குமாரி சௌ. சீதாலக்ஷ்மிக்கும் திரு சீனிவாசனுக்கும் பெரியகுளத்தில் விவாகம் நடந்தது.



உசிலம்பட்டி நியூஸ் ஏஜண்ட் திரு டி. கே. ஜெயராமுக்கும், சௌ. சசிகலாவதிக்கும் திருமணம் விமரிசையாக நடைபெற்றது.



திரு பொன்னுண்டன் குமாரியும் குரும்பூர் கல்வி ஏஜண்டின் சகோதரியுமான சௌ. பிலோமின் சரோஜாவுக்கும் திரு ரொசாரியோ ராயினாக்கும் திருமணம் நடந்தது.



இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் துணைச் செயலாளர் திரு என். கே. ரகுநாதனுக்கும், சௌ. அன்னம்மாவுக்கும் திருமணம் நடைபெற்றது.



# பத்து ரூபாய்ப் பணம்

சீர்காழி அருணாசலக் கவிராயரை இராமாயணக் கதை தெரிந்த எல்லோரும் நன்றாகத் தெரிந்து கொண்டிருப்பார்கள். அவர் இயற்றிய இராம நாடகக் கீர்த்தனைகள் தமிழ் நாட்டு மக்களின் உள்ளங்களி லெல்லாம் சுவை நிரப்பிக் கொண்டிருக்கின்றன. பஞ்ச லட்சணம், தியாகேசர் வண்ணம் போன்ற வேறு சில நூல்களிலும் திறமையைக் காட்டியிருக்கிறார் அருணாசலக் கவிராயர். ஆனாலும் தமிழ்நாடு முழுவதும் அவருடைய பெயரை என்றும் மறந்துவிடாமலிருக்கும்படி அவர் செய்துவிட்டுப் போன சுவைக் காவியம் அவருடைய இராம நாடகக் கீர்த்தனைகள்தான்.

அவர் வாழ்ந்த காலத்தில் அவருடைய கலை வாழ்வைக் குறைவின்றிக் கவனித்துத் தேவையான உதவிகளைச் செய்தவர்கள் மணலிமுத்துக்கிருஷ்ண வள்ளல், பெருவணிகராகிய தேப்பெருமாள், பாப்பைய வேள் என்போர் ஆவர். அருணாசலக் கவிராயர் 'தியாகேசர் வண்ணத்தை' உரை செய்தபோது தேப்பெருமாள் அவருக்கு வெகுமதியளித்துப் போற்றினார். அவருடைய இராம நாடகக் கீர்த்தனை அரங்கேறுவதற்கோ மூன்று செல்வந்தர்களுமே சேர்ந்து உதவி செய்திருக்கிறார்கள்.

இராம நாடகக் கீர்த்தனைகளை எழுதிக் கொண்டு அவர் ஒவ்வொருவராகப் பார்த்து அதன் பெருமைகளைச் சொல்லிக் காட்டினார். இன்னும் சிலருக்குத் தாம் இராம நாடகத்தை இயற்றி எடுத்துக் கொண்டு வரப் போவதை முன்கூட்டியே சீட்டுக் கவிகள் மூலம் தெரிவித்திருந்தார். அந்தக் காலத்துப் புலவர் வாழ்வே அப்படித்தான். ஏதாவதொரு பிரபந்தத்தை இயற்றிக் கொண்டு ஊரூராக அலைந்து, பணமும், மனத்தில் கலை உணர்ச்சியும் உள்ள வள்ளல்களைச் சந்தித்து அதை அரங்கேற்றுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

இராம நாடகக் கீர்த்தனைகளை எழுதிக் கொண்டு சீர்காழி அருணாசலக் கவிராயரும் அப்படியெல்லாம் அலைந்தார். இல்லாவிட்டால் தமிழர்களுக்கு இன்று அந்த அருமையான காவியமே கிடைத்திருக்காது. அட்சர லட்சம் பெறுமான காவியத்தைக் கீர்த்தனமாகப் பாடித் தமிழுக்கு அளித்து விட்டுச் சென்றிருக்கும் அந்த மகா கவிக்கு ஒரு சமயம் பத்து ரூபாய்களுக்கு அல்லாட வேண்டிய நிலை ஏற்பட்டது.

கேவலம் பத்து ரூபாய்க்காக ஊரூராய் அலைந்து திரிந்தார், பத்துக் கோடி ரூபாய்களை அளித்தாலும் நிகராகாத அழகுக் கீர்த்தனங்களை எழுதிய கவி.

அலைந்து திரிந்து எங்கும் பத்து ரூபாய் கிடைக்காத ஏக்கத்தோடு 'பாப்பையவேள்' என்ற சீமானிடம் போய்க் கடைசி முயற்சியாகக் கேட்டுப் பார்க்கக் கிளம்பினார்.

போனார். பாப்பைய வேளைச் சந்திக்கவும் சந்தித்தார். "எனக்குக் கொஞ்சம் கையில் முடை. அவசரமாக ஒரு பத்து ரூபாய் பணம் வேண்டும். இந்தச் சமயத்தில் நீங்கள்தான் உதவி செய்து காப்பாற்ற வேண்டும்" என்று வாய்விட்டுக் கேட்டார்.

பாப்பையவேள் சிறிது சிந்தித்தார். இவ்வளவு பெரிய கவி எண்ணிப் பத்தே பத்து ரூபாய் கேட்கிறாரே என்று யோசித்தாரோ, என்னவோ? ஆனால் அருணாசலக் கவியோ, பாப்பைய வேளின் தயக்கத்தைக் கண்டு அவரும் இல்லை யென்று கையை விரித்து விடுவாரோ என்று எண்ணி அஞ்சினார். அந்த அச்சம் அவருடைய கவி உள்ளத்தை ஒரு அழகான கவிதையைப் படைக்கச் செய்து விட்டது. அந்தப் பாட்டில்தான் எவ்வளவு குழைவு! என்ன நைச்சியம்! எத்தனை வினயம்!

"பத்துரு பாயினைக்கேள் பாப்பையவே
ளேயுனக்குப்
பத்துரு பாயென்ன பஞ்சமோ —
முத்தநகை
வீழிவாய்ப் பாலுண்ட வேந்தன்
பிறந்தசீ
காழியரு ணாசலன் யான் காண்"

(பெருந்தொகை 1766)

[பத்துருப ஆயன்-தசாவதாரம் எடுத்த திருமால்; வீழிவாய் - கொவ்வைக் கனி போன்ற வாய்; முத்த நகை - உமை; வேந்தன் - ஞானசம்பந்தன்]

பத்து ரூபாய் எத்தனையோ பேருக்குத் தேவைப்படுகிறது! ஆனால் அதை இப்படி உள்ளமும், சொல்லும், தொனியும், குழையக் குழைய ஒரு பாட்டாக்கிக் கேட்க அருணாசலக் கவியால்தானே முடிகிறது?—வளவன்





நிச்சயமான
# குணம்
ஆபத்தில்லாதது

வயிற்றுக் கோளாறுகளுக்கு
நம்பகமான நிவாரணம்

# HEWLETT'S
## MIXTURE



அபின் கலந்ததும் கல
வாததும் 4 அவுன்ஸ்
10 அவுன்ஸ் பாட்டில்
களில் கிடைக்கும்.

உடனே குணம் தெரியும்—எல்லா வலிகளையும் போக்குகிறது. ஜீரண சக்தியை ஊக்குகிறது. அதிகப்படியான புளிப்பை நீக்கி வயிற்றுப் பொருமலையும் போக்குகிறது. குடல் சம்பந்தமான கோளாறுகளுக்குக் கைகண்ட ஔடதம். வைத்தியர்களால் சிபாரிசு செய்யப்பட்டது.





வி. ஜே. ஹியூலெட் & சன் (இந்தியா) பிரைவேட் லிட்.
சென்னை. 3.



# நரஸூ
காபி
அருந்தி அதன்
பிரத்யேகமான
ருசியை
அனுபவியுங்கள்

நரஸூஸ் மான்யுபாக்சரிங்
கோ. பிரைவேட் லிட்.,
சேலம் & சென்னை



இக்கட்டுரை ஆசிரியர் டாக்டர் எம். எஸ். கிருஷ்ணன் சமீபகாலம் வரை இந்திய பூகர்ப்ப ஆராய்ச்சி இலாக்காவில் நிர்வாகஸ்தராகப் பணியாற்றியவர். 1951ல் மத்திய அரசாங்கம் நியமித்த உலோக உலைக்கரி (Metullurgical Calcoal) கமிட்டிக்குத் தலைவராகப் பணியாற்றியுள்ளார். இந்தியாவில் இம்மாதிரி கரி கிடைக்கும் வாய்ப்புக்களைப் பற்றி விரிவான ஆராய்ச்சிகள் நடத்தியிருக்கிறார். இக்கரி நமது எஃகு உருக்குச் சாலைகளுக்கு இன்றியமையாத மூலப் பொருளாகையால், இதைக் கவனத்துடன் உபயோகிக்க வேண்டுமென்றும், மனம் போனபடி வீணாக விரயம் செய்யக் கூடாது என்றும் இக்கட்டுரை மூலம் எச்சரிக்கை செய்கிறார். — ஆசிரியர்

# இந்தியாவின் கல்கரிச் செல்வம்

டாக்டர் எம். எஸ். கிருஷ்ணன்

பூமிக்குள் வெகு காலத்துக்கு முன்பு புதைந்து அழுகிப் போய்ப் பூகர்ப்ப மாறுதல்களினால் இறுகி நீரும் கரியும் இணைந்து கருமை வடிவமாகிவிட்ட தாவர வர்க்கங்கள்தான் நமக்கு இப்போது கிடைத்துக் கொண்டிருக்கும் நிலக்கரி என்னும் பொருள். இது பல தாதுப் பொருள்களாலும் உண்டான ஒரு கூட்டுப் பொருள். ஆனால் முக்கியமாகக் காணப்படும் அம்சங்கள் கரியும், ஹைட்ரஜனும், சிறு சிறு பாகம் ஆக்ஸிஜன் என்ற பிராண வாயுவும் நைட்ரஜனும்தான். இதைத் தவிர, பல இதர கழிவுப் பொருள்களும் இதில் கலந்துள்ளன. இவை பெரும்பாலும் கந்தகம், பாஸ்பரஸ், ஸிலிகன், இரும்பு, மாங்கனீ மற்றும் இவை போன்ற பல கலப்புப் பொருள்கள்.

நிலக்கரிக்கட்டி ஒன்றைக் கவனித்தால் அது சாதாரணமாகப் படிவம் படிவமாக இருப்பதைக் காணலாம். இப்படிவங்கள் பளிச்சென்றும் இருக்கலாம். சில சமயம் மங்கலாகவும் இருக்கும். பளிச்சென்றிருப்பது சுத்தமான கரி, எரிபொருள் அதிகமுள்ளது என்று அறிய வேண்டும். மங்கலாக உள்ள பாகம் பெரும்பாலும் உலோகப் பொருள் அல்லது கழிவடைப் பொருள்கள் உள்ள பாகம்.

நிலக்கரித் துண்டைக் கொளுத்தினால் சாதாரண வெட்டவெளியில் சுவாலையுடன் கொழுந்து விட்டுப் 'பளிச்'சென்று எரியும். சுவாலையின் நீளமும், உஷ்ணத்தின் அளவும், இதர தன்மைகளும் நிலக்கரியின் தன்மையையும் தரத்தையும் பொறுத்திருக்கும். எக்கெந்த நிலக்கரிகள் கார்பன் என்ற கரிபொருள் அதிகமாக உள்ளவையோ, அதாவது பூமிக்கடியில் அதிகமான அளவுக்குப் பூகர்ப்ப மாறுதல்களுக்கு உட்பட்டவையோ, அவை ஆன்த்ரஸைட் கரிகள் எனப்படும். அவைகளில் சுத்தக் கரிப்பொருள் அதிகமாக இருப்பதால் அவை எரிவதற்குப் பிராணவாயு அதிகமாக உள்ள பெருங் காற்று தேவைப்படும். கரிப்பொருள் குறைந்து திரவ பாகங்கள் அதிகமாக உள்ள நிலக்கரிகள் பிடுமின் கரி என்ற வகையைச் சேர்ந்தவை. இவை சாதாரணமாகவே நன்றாக எரியும் தன்மையுடையவை. அதிகக் காற்று வீசப் பிரத்தியேக ஏற்பாடுகள் தேவைப்படாது.

இப்படி அதிக வேகமான காற்றுடனோ, குறை வேகமுள்ள காற்றுடனோ நிலக்கரியை 800 டிகிரி சென்டிகிரேட் உஷ்ணத்துக்குச் சூடேற்றினால் அது உருகித் தள-தளவென்று நெகிழ்ந்து திரவம் போன்ற நிலையை அடையும். பார்வைக்கு அதிகமாக வெந்துபோன செங்கல்லைத் தண்ணீரில் மூக்கினால் எப்படிக் கறுப்பாக இருக்குமோ, அப்படித் தோன்றும். இதைத்தான் கல்கரி (Coke) என்று சொல்லுவார்கள். இது நிலக்கரியைக் காட்டிலும் இலேசானது. காற்று புகுவதற்கு மெல்லிய துவாரங்கள் நிறைந்துள்ளன. அதனாலேயே அது அவ்வளவு இலேசாக இருக்கிறது. எனினும் சாதாரண நிலக்கரியைக் காட்டிலும் மிகவும் கடினமானது. கரிப் பொருளும் அதிகமாக உடையது. ஏனெனில் முதல் முறை எரிக்கப்பட்டபோது நிலக்கரியிலுள்ள திரவ அம்சங்களெல்லாம் வெளியேற்றப்பட்டு, கரிப் பொருள் அம்சமும் சில உலோகப் பொருள்களும் கழிவுப் பண்டங்களுமே அதில் தங்கி யிருக்கும். இப்படியிருப்பினும், எல்லா நிலக்கரிகளுமே உபயோகமுள்ள கற்கரிகளாக ஆகாது. சில வகை நிலக்கரிகள்தான் இதற்கு உதவும். வெவ்வேறு தரமுள்ள நிலக்கரியிலிருந்து கிடைக்கும் கல்கரிகள் அவற்றின் கடினத் தன்மையிலும் உட்பொருள் சேர்க்கையிலும் பல்வேறு தன்மையுள்ளனவாக இருக்கும். உலோக உலைகளில், அதிலும் முக்கியமாக இரும்பு, எஃகு முதலியன தயாரிக்கப்படும் பிரும்மாண்டமான நமது உலைகளில் எந்தக் கல்கரிகள் அதிக கடினமுள்ளவையோ அவை மட்டுமே பயன்படும். அதாவது சுலபமாக உடைபட்டுத் தூளாகக் கூடாத கல்கரிதான் அங்கே பயன்படும். ஏனெனில் 150 அடி, 200 அடி என்று உயரமுள்ள நமது உலைகளில் இக்கல்கரிகளைக் கொட்டும்போது அவை தூளாகாமல் இருக்க வேண்டும். உலையிலுள்ள மூலப் பொருள்களை உருக்குவதற்கும், கனிப் பொருள்களிலுள்ள பிராண வாயுவுடன் கலக்கத் தேவையான கார்பனை அளித்து அவற்றை உலோகமாக மாற்றவும் இக் கல்கரி உபயோகமாகிறது. இதுதான் அதனுடைய வேலை.

நம் நாட்டில் உலோக உலைக்கு உபயோகப்படும் கல்கரியாக மாற்றுவதற்கு ஏற்ற நிலக்கரிச் செல்வம் பூமிக்கு அடியில் எவ்

அளவு இருக்கிறது என்பது பல ஆண்டுகளாகவே நிபுணர்களிடையே விவாதிக்கப்பட்டு வந்திருக்கிறது. 'பிடுமென்' வகை நிலக்கரிச் செல்வம் இந்தியாவில் கணிசமான அளவுக்கு இருக்கின்றது. நமது தேவைக்குப் போதுமான அளவுக்கு இது இருக்கிறதென்பதே ஒருமுகமான அபிப்பிராயம். இந்தியாவிலுள்ள மொத்த நிலக்கரிச் செல்வம் 7500 அல்லது 8000 கோடி டன்கள் என்று மதிப்பீடு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் சுலபமாக வெட்டி எடுப்பதற்குச் சாத்தியமான ஆழத்திலும் அளவிலும் இருப்பது இதில் மூன்றில் ஒரு பாகம் என்றே கொள்ளலாம். அதாவது 2500!3000 கோடி டன்கள்.

இந்திய நிலக்கரியில் சாதாரணமாகச் சாம்பல் அம்சம் அதிகம். மொத்த எடையில் 25 சதம் அல்லது நான்கில் ஒரு பாகம் சாம்பல் 12லிருந்து 18 சதவிகிதம் வரை சாம்பல் அம்சமுள்ள நிலக்கரியும் ஆங்காங்கே கிடைக்கின்றன. ஆனால் அவற்றின் அளவு மிகவும் குறைவுதான். சுமார் 600 அல்லது 700 கோடி டன்கள் இருக்கலாம். இதிலும் கல்கரியாக்குவதற்கு ஏற்ற நிலக்கரி இன்னும் குறைவு. மேற்கு வங்காளம், பீஹார் ராஜ்யங்களில் ஜரியா, ராணிகஞ்சு, போகாரோ, காரன்பூரா என்ற பிரதேசங்களிலுள்ள நிலக்கரிச் சுரங்கங்களில்தான் கிடைக்கின்றன. இந்தியாவில் நிலக்கரி கிடைக்கும் பிரதேசங்களில் கிழக்குப் பிராந்தியங்களில் மட்டுமே கல்கரிக்கு ஏற்ற நிலக்கரி கிடைக்கிறது. இதனால் நாட்டில் இரும்பு உருக்குச் சாலைகளும் உலைகளும் அந்த இடத்தில்தான் அமைக்கப்பட வேண்டும் என்பது தெளிவாகிறது. ஊது உலைகள் மூலம்தான் இரும்புக் கனிசத்தை உருக்குவது என்ற சம்பிரதாயமான முறை நடைமுறையில் கையாளப்படும் வரை, ஊது உலைகளும் நிலக்கரி கிடைக்கும் பிரதேசத்திலோ அல்லது அதற்கு அருகாமையிலோ தான் அமைக்கப்பட வேண்டியது மிகவும் அவசியமாகிறது.

இந்தியாவில் இரும்புக் கனிப்பொருள் ஏராளமாக இருக்கிறதென்பது தெரிந்ததே. இது சுமார் 2000 கோடி டன்கள் அளவில் இருக்கலாம் என்று மதிப்பீடு செய்யப்பட்டிருக்கிறது. எனவே, இந்த ஏராளமான கனிப்பொருளை ஊது உலை உருக்கு முறையில் கல்கரியை உபயோகித்து எந்த அளவுக்கு இரும்பாக மாற்ற முடியும் என்பதை ஆராய்ச்சி செய்வது அவசியமாகிறது. இந்த ஊது உலை முறைதான் இப்போது இரும்பு தயார் செய்வதற்கு மிகவும் சிக்கனமான வழி.

வரும் காலத்திலும் இன்னும் பல ஆண்டுகளுக்கு இந்த முறைதான் இரும்பு எஃகுத் தயாரிப்பதில் சிறந்த முறையாகவே இருக்கும் என்று எதிர்பார்க்கலாம். மின்சாரத்தையும், எண்ணெயையும் கனிசத்தை உருக்க உபயோகிக்கலாம் என்பது உண்மையே. எதிர்காலத்தில் அணுசக்தி கூட இந்தக் காரியத்துக்குப் பயன்படக்கூடும். எரிபொருள் சக்திக்காக இம்மாதிரி இதர பொருள்கள் இருப்பினும், உருக்குவதற்குக் கனிசத்துடன் கார்பனை ஓரளவுக்குச் சேர்த்தேயாக வேண்டும்; இதற்காகவேனும் மரக்கரியோ, கல்கரியோ அவசியம் தேவைப்படும் ஒரு முக்கியமான பொருள். ஏனெனில் உருக்கும் கிரியையில் கரியிலுள்ள கார்பன் கனிசத்திலுள்ள பிராண வாயுவுடன் கலந்து விடுவதால் உலோகம் மட்டும் தனித்து நின்று விடுகிறது.

இந்தியாவில் கிடைக்கும் நிலக்கரி சாதாரணமாக அதிகச் சாம்பல் அம்சத்துடன் கூடியதாகையால் இப்போதிலிருந்தாவது, நிலக்கரி உபயோகத்துக்கு முன் சுத்தப்படுத்தும் பழக்கத்தைக் கைக்கொள்ள




1. கிழக்கு இமயமலைப் பகுதி: அஸ்ஸாம், வங்காளம்; 2. ராஜ்மஹால் குன்றுகள், பீஹார்; 3. கிரிடிஹ், பீஹார்; 4. ஹஜாரிபாக், பீஹார்; 5. தாமோதர் நதிப் பள்ளத்தாக்கு, மேற்கு வங்காளம்; 6. தாமோதர் நதிப் பள்ளத்தாக்கு, பீஹார்; 7. பலமோ, பீஹார்; 8. மஹாநதி பள்ளத்தாக்கு, ஒரிஸ்ஸா; 9. சோண நதி, மத்திய இந்தியா, 10. வடக்கு சத்தீஸ்கர், மத்தியப் பிரதேசம்; 11. தெற்கு சத்தீஸ்கர், மத்தியப் பிரதேசம்; 12. சாத்பூரா சமவெளி, மத்தியப் பிரதேசம்; 13. வார்தா பள்ளத்தாக்கு, மத்தியப் பிரதேசம்; 14. கோதாவரிப் பள்ளத்தாக்கு, ஆந்திரப் பிரதேசம், சென்னை ராஜ்யம்.

வேண்டுவது அவசியமாகிறது. அதன்மூலம் தான் நிலக் கரியுடன் பெருவாரியாகக் காணப்படும் 'ஷேல்' என்னும் கழிவுப் பொருள்களுடன் உபயோகமற்ற கல் துண்டுகளும் நீக்கப்படுகிறது. இப்படிச் செய்வதைத்தான் "நிலக்கரி அலம்புதல்" (Coal Washing) என்று சொல்லப் படுகிறது. இதற்காக யந்திர சாதனங்களைக் கொண்டு விரிவான முறையில் இரண்டு அல்லது மூன்று நிலக்கரி அலசும் நிலையங்கள் நிறுவப் பட்டிருக்கின்றன. (இரண்டாவது ஐந்தாண்டுதிட்டத்தில் உருக்குச் சாலைகள் அமைக்கும் வேலையில் நிலக்கரி கழுவும் நிறுவனங்களும் அடங்கியுள்ளன.) இப்படி அலசுவதன் மூலம் ஒரு டன் நிலக்கரியிலிருந்து ¾ டன் அல்லது ⅔ டன் நல்ல நிலக்கரி, அதாவது உயர்ந்த எரிபொருளாக உபயோகிப்பதற்கும், கல் கரியாக மாற்றுவதற்கு ஏற்றதாகவும் உள்ள நிலக்கரி கிடைக்கும். இப்படிக் கிடைக்கும் ஒரு டன் நல்ல நிலக்கரியை அதிலுள்ள ஜல பாகத்தையும் இதர திரவ பாகத்தையும் அப்புறப்படுத்துவதற்காகச் சுட்டெரித்தால், 7/10 டன் கல் கரி கிடைக்கும். எனவே, உருக்கு உலைகளில் உபயோகப் படுவதற்கு ஏற்ற ஒரு டன் உயர்ந்த கல் கரி நிகரமாகத் தயாரிப்பதற்கு 1.6 டன் சாதாரண நிலக்கரியை முதலில் அலசிக் கழுவி, பிறகு சுட்டெரிக்க வேண்டும்.



ஊது உலையின் வெளிப்புறத் தோற்றம்

இரும்பும் எஃகும் தயாரிக்கும் உற்பத்திக் கிரமங்களில் இரண்டு நிலைகள் இருக்கின்றன. முதலாவது பூமியிலிருந்து கிடைக்கும் கனிப்பொருளை இரும்பாக மாற்ற வேண்டும். இரண்டாவது இரும்பை எஃகாக மாற்ற வேண்டும். கனிசத்தை இரும்பாக மாற்றுவது ஊது உலைகள்* எனப்படும் "பிளாஸ்ட் பர்னஸ்" (Blast furnace) களில் செய்யப்படுகிறது. ஊது உலைகள் என்பது கோபுரம் போல் மிகவும் உயர்ந்து வட்டமாகக் கட்டப்பட்ட கட்டுமானங்கள். இதற்குள் உச்சியிலிருந்து கனிப் பொருள்களும், கல் கரியும், எரிபொருளும், சுண்ணாம்புக்கற்களும் கொட்டப்படும். உலைக்குள் இவையெல்லாம் கலந்து கிடக்கும். அதைக் கொளுத்திவிட்டு அடிப்புறத்திலிருந்து காற்றை யந்திரங்கள் மூலம் ஒரே நிதானமாக உட்செலுத்தி, எரிய விடுவார்கள். உள்ளேயிருக்கும் பொருள்களெல்லாம் உருகிக் கலந்து கார்பன் என்ற கரி எரிய எரிய கனிசப் பொருள் இரும்பாக உருக்கப்பட்டுப் போகிறது. இப்போது நவீன முறைகளில் உட்புகுத்தப்பட்ட காற்றுடன் ஓரளவுக்குப் பிராணவாயுவும் கலந்து உட்செலுத்தப்படுகிறது. வருங்காலத்தில் இம்முறை அதிகமாகக் கையாளக்கூடும். இதன் மூலம் ஊது உலைகளின் உயரம், அளவு, பருமன் எல்லாம் குறைந்து, உருக்குவதற்கு வேண்டிய அவகாசமும் குறையலாம். அதிக உயரமில்லாத சிறிய அமைப்புள்ள ஊது உலைகள் மூலம் இரும்பு உருக்கப்படுவதற்குள்ள சாத்தியக் கூறுகள் பரீட்சை செய்யப்பட்டு வருகின்றன. இவ்வாறு ஊது உலைகளிலோ, அல்லது இதர முறைகளிலோ தயாரிக்கப்பட்ட இரும்பு மேலும் மேலும் சுத்திகரிக்கப்பட்டு எஃகாகப் படிப்படியாக மாற்றப்படுகிறது. பொதுவாக ஒரு டன் சாதா எஃகு கிடைப்பதற்கு உத்தேசமாக ஒரு டன் அல்லது சற்று அதிகமான கல் கரி அத்தியாவசியமாகத் தேவைப்படும்.

தனியார்த் தொகுதியில் செயல் புரியும் மூன்று இரும்பு எஃகுக் கம்பெனிகள், அதாவது டாடா இரும்பு எஃகு கம்பெனி, இந்தியா இரும்பு எஃகுக்கம்பெனி, மைசூர் இரும்பு எஃகுக் கம்பெனிகள் மூன்றுமாக, இப்போது 17 லக்ஷம் டன் எஃகு வருஷவாரி உற்பத்தி செய்கிறார்கள். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் 1960 ஆம் ஆண்டு முடிவுக்குள் இந்தியாவின் மொத்த எஃகு உற்பத்தியை 60 லக்ஷம் டன்னுக்கு உயர்த்தி விட வேண்டுமென்று திட்டமிடப்பட்டிருக்கிறது. இந்த லட்சியம் நிறைவேறி விடுமா என்பதும் போகப் போகத்தான் தெரியும். ஏனெனில் எதிர்பாராவிதமான யந்திர வசதிக் குறைவு, தொழில்நுட்பம் தெரிந்த நிபுணர்களின்மை அந்நியச் செலாவணித்தேவை,-இப்படிப்பல இடையூறுகள் தோன்றியுள்ளன. (இவைக

* தற்போதைய ஊது உலைகள் முனையற்ற இரு கூம்புகளை ஒன்று சேர்த்து வைத்தது போல் காணப்படும். இவற்றின் வெளிப்புறம் கனத்த எஃகுத் தகடுகளாலானது. உட்புறம் சூடு தாங்கும் கற்களால் கட்டப்பட்டிருக்கும். இவ் வுலைகள் 2000 டன் உயர்ந்தரகக் கனிமம், 800 டன் கல்கரி, 500 டன் சுண்ணாம்புக்கல், 3500 டன் காற்று உட்செலுத்தும்படி அவ்வளவு பெரியவை. தினம் ஒன்றுக்கு 1000 டன் இரும்பை உருக்கும் அளவுள்ளவை. இவற்றிலிருந்து வெளிவரும் இரும்புக் குழம்பை முதன் முதலில் மணல் அச்சுகளில் வார்த்துக் கட்டியாக்கிக் கொள்ளப்படுகிறது. இதற்குத்தான் (Pig Iron) அல்லது பன்றி இரும்பு என்று பெயர். இதுதான் எஃகு உற்பத்திக்கு மூலப் பொருள் எனலாம்.

ளெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாகச் சமாளிக்கப்பட்டுத்தான் வருகின்றன என்பதை இங்கே குறிப்பிடுதல் அவசியம்) ஆக, 1960-ஆம் ஆண்டில் இல்லாவிட்டாலும் 1961 அல்லது 1962-ஆம் ஆண்டில் இந்த லட்சியமாகிய 60 லக்ஷம் டன் உற்பத்தியை இந்தியா எட்டி விடலாம்.* உற்பத்தியிலுள்ள இடையூறுகள் ஒரு புறமிருந்தாலும், வேகமாக எஃகு உற்பத்தியினால் இதர துறைகளில் கூட நெருக்கடிகள் உண்டாகும். போக்குவரத்து சாதனங்களின் வசதிக்குறைவு, மூலப் பொருள்களை வெட்டியெடுத்து அவற்றை உருக்குச் சாலைகளுக்குக் கொண்டு சேர்த்தல் முதலியவற்றிலும் நிலைமை கவலை தரும்படி ஆகலாம். மூலப் பொருள்களை ஸ்தலத்துக்குக் கொண்டு சேர்க்கவும், உற்பத்தி செய்த பொருளை நாட்டின் பல பாகங்களுக்கு வினியோகிப்பதுமே பிரும்மாண்டமான வேலை. இதைச் சரிவரச் செயல்படுத்தத் திட்டமிடுவதே பெரிய பிரச்னை. ஆனால் அதை அரசாங்கம் உணராமலில்லை. புள்ளி விவரங்களில் மிகுந்த கவனம் செலுத்தும் நிபுணர்கள் ஒவ்வொரு நாட்டின் முன்னேற்றத்தை மதிப்பிடுவதற்கு அந்தந்த நாட்டினர் தொழிற்சாலை பொருள்கள் தலைக்கு எவ்வளவு விகிதத்தில் உபயோகிக்கப்படுகிற தென்பதைக் கொண்டு ஒப்பிடுவது வழக்கம். ஒப்பு நோக்குவதற்கும் முன்னேற்றத்தை மதிப்பிடுவதற்கும் இது நல்ல முறைதான் என்றாலும், இதர விவரங்கள் இல்லாமல் இவற்றைக் கொண்டு மட்டும் பார்ப்பது அர்த்தமற்றதாகி விடும். நிலைமையை முற்றிலும் இது விளக்கி வைக்காது. ஆனாலும் பொதுவாக, முன்னேற்றமடைந்துள்ள மற்ற நாடுகளைப் பார்க்கும்போது நமது நாட்டில் எஃகுச் சாமான்கள் தலைக்கு உபயோகப்படுத்தும் விகிதம் மிகவும் குறைவுதான் என்பதில் சந்தேகமில்லை. கீழ்வரும் புள்ளி விவரங்கள் இதை எடுத்துக் காட்டுகின்றன.

**எஃகுப் பொருள்கள் உற்பத்தி**
**(1955-ம் வருஷத்து விவரம்)**

| | மொத்த உற்பத்தி லக்ஷம் டன்கள் | ஒருவர் உபயோகிக்கும் விகிதம் (டன் கணக்கில்) |
|---|---|---|
| அமெரிக்க ஐக்கிய நாடு | 1040 | 0·62 |
| இங்கிலாந்து | 200 | 0·82 |
| ஸோவியத் ருஷ்யா | 450 | 0·20 |
| மேற்கு ஜெர்மனி | 210 | 0·25 |
| இந்தியா | 17 | 0·006 |

நாட்டின் எஃகு உற்பத்தியை வெகு வேகமாகப் பெருக்குவதிலுள்ள கஷ்டங்களைக் கவனிக்குமிடத்து, 1970 ஆம் ஆண்டுக்குள் நாம் 250 லட்சம் டன்கள் எப்படியும் உற்பத்தி செய்துவிட வேண்டும் என்று லட்சியம் ஏற்படுத்திக் கொண்டு அதைப் பற்றி அடிக்கடி பிரசாரம் செய்வது, ஒருகால் நிறைவேறக் கூடாத லட்சியமோ என்று ஐயமேற்படுகிறது. சிலர் முடியாமல் போய்விடும் என்றும் கருதுகின்றனர். ஆனால் நிறைவேறக்கூடியது எதுவென்று ஆலோசித்துப் பார்க்கும்போது ஆறு அல்லது ஏழு வருஷகாலத்தில் உற்பத்தி இருமடங்காகப் பெருகலாம் என்றே தோன்றுகிறது. அதற்குக் கூடத் திட்டமிட்டுச் செயல்புரிய வேண்டும். இம்மாதிரித் திட்டமிட்டுக் கொண்டால், 1961 ஆம் ஆண்டில் 50 லட்சம் டன்னும், 1966 ஆம் ஆண்டில் 100 லட்சம் டன்னும், 1973-75 ஆம் ஆண்டுகளில் 200 லட்சம் டன்னும், 1980-82 வாக்கில் 400 லட்சம் டன்களும் உற்பத்தி செய்யக்கூடும். இது கூட நம்முடைய பொருட்சக்தி சாமர்த்தியங்களை வெகுவாய்ச் சோதிக்கும். ஏனெனில் தேசிய முன்னேற்றம் இதரத் துறைகளிலும் கூட அதே காலத்தில் ஏறக்குறைய அதே அளவில் நடைபெற வேண்டியிருக்கும். 400 லட்சம் டன் எஃகுப் பொருள்கள் நாம் உற்பத்தி செய்யத் தொடங்கும்போது, நமது உள் நாட்டுத் தேவைக்கு அதிகமாக எஃகுப் பொருள்கள் தங்கி விடக்கூடும். இவ்வளவு பெரிய அளவுக்கு நாம் எஃகுப் பொருள்கள் உபயோகிப்பதற்கு நமது தொழில் அபிவிருத்தி பிரமிக்கத்தக்கவாறு வளர்ச்சியடைந்திருக்க வேண்டும்.

எப்படியும் கணிசமான அளவுக்கு வெளிநாடுகளுக்கு நாம் ஏற்றுமதி செய்யும் நிலையில் இருப்போம். அயல் நாட்டு மார்க்கெட்டுகளில் நமது உபரி எஃகுப் பொருள்களை விற்பனை செய்ய வேண்டுமானால் நமது கிழக்கத்திய நாடான செஞ்சீனா அடுத்த பத்தாண்டுகளில் இத் துறையில் நம்மை மிஞ்சிவிடும் என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். ஏற்கனவே தூரக்கிழக்கு மார்க்கெட்டுகளில் நமது ஜவுளிப் பொருள்களுக்குப் போட்டியாகச் சீன ஜவுளிகள் தீவிரமாகக் கிளம்பியிருக்கின்றன. இது ஒரு எச்சரிக்கை. இதை ஒரு எச்சரிக்கையாகவே நமது வருங்காலத் தொழில்வளர்ச்சிக்குத் திட்ட

* சர்க்கார் தொகுதியிலுள்ள ரூர்கேலா, பிலாய், துர்க்காப்பூர் உருக்குச் சாலைகளும் தனியார்த் தொகுதியிலுள்ள டாடா, இந்தியா, மைசூர் ஆகிய மூன்று உருக்குச் சாலைகளும் திட்டப்படி விரைவாகவே உற்பத்தி செய்து வருகின்றன. எனவே லட்சியம் 1960-61ல் பூர்த்தியாகலாம் என்ற எண்ணம் இப்போது வலுப்பெற்று வருகிறது.

யிடும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும். நாம் இப்போது நமது கல் கரிக்கு உண்டான வாய்ப்புக்களைப் பற்றிக் கவனிக்கலாம். சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாகவும் அதற்கு மேலாகவும் இதைப் பற்றி அதிகமாகப் பேசப்பட்டு வந்திருக்கின்றன. 1951 ஆம் ஆண்டில் தனது யாதாஸ்தைச் சமர்ப்பித்த உலோகக் கரிக் கமிட்டி நமது நாட்டில் கல் கரிகள் எந்த அளவில் கிடைக்கின்றன என்பது பற்றி ஆராய்ந்தது. (அதன் தலைவராக இக்கட்டுரை ஆசிரியர் பணியாற்றி யிருக்கிறார்.) இக்கமிட்டி இது பற்றிக் கொடுத்துள்ள புள்ளி விவரங்கள் பின்வருமாறு :

| கல்கரிக்கு ஏற்ற உயர்தர நிலக்கரி | லக்ஷம் டன்கள் |
|---|---|
| இதுவரையில் வெட்டி எடுக்கப் படாத இடங்களில் கிடைக்கக் கூடியது | 3300 |
| தற்போது எடுக்கப்பட்டு வரும் சுரங்கங்களில் கிடைத்துக் கொண்டிருப்பது | 9810 |
| மொத்தம் | 13,110 |
| அடுத்தபடியுள்ள நிலக்கரிகள் கல்கரிக்கு ஏற்றவை | |
| இதுவரையில் வெட்டி எடுக்காமலுள்ள இடங்கள் | 4,450 |
| தற்போது வெட்டி எடுக்கப்பட்டு வரும் சுரங்கங்களிலிருந்து கிடைப்பது | 10,170 |
| | 14620 |
| ஆகமொத்தம் | 27,730 |

மட்டரக நிலக்கரியைச் சுத்தம் செய்வதன் மூலம் சுமார் 60 சதவிகிதம் நல்ல உயர்தர நிலக்கரி கிடைக்கலாம் என்று வைத்துக் கொண்டால், நம் நாட்டில் கல் கரியாக மாற்றுவதற்கு உதவும் உயர்ந்த ரக நிலக்கரி 210 கோடி டன் அளவுக்கு இருக்கும் என்று மதிப்பிடலாம். இவ்வளவுதான் நமக்குள்ள மொத்த வாய்ப்பு. அதுவும் பூமிக்கு அடியிலுள்ளது. இதை மேல்மட்டத்துக்குக் கொண்டுவரச் செயல்படும்போதும் நிலக்கரி மட்டங்களை வெட்டி எடுக்கும்போதும் சிறிது சேதங்கள் ஏற்படுவது சகஜம். இந்த மாதிரி சேதங்களையும் கணக்கில் எடுத்துக்கொண்டால், சுத்த நிலக்கரியாக 75 சதவிதமே கிடைக்கலாம். இதுவே உயர்ந்தவிகிதமென்று கருத வேண்டும். இதன்படிப் பார்த்தால் 160 கோடி டன் உயர்ந்த ரக நிலக்கரி மட்டுமே கிடைக்கக் கூடும். மீதியெல்லாம் வெட்டி எடுக்கும்போது சேதமாகிவிடும். கல்கரிக்கு உதவாத மட்டரக நிலக்கரியில் சிறிது பாகம் உயர்ந்த ரகக் கரியுடன் கலந்து கல் கரியாகச் செய்வதும் சாதாரணமாகக் கையாளப்படும் முறையே. இதற்காக உபயோகிக்கும் மட்டரக நிலக்கரியையும் கணக்கில் எடுத்துக் கொண்டு கவனித்தால், கல் கரி தயாரிப்பதற்கு ஏற்ற நிலக்கரி சுமார் 200 கோடி டன் கிடைப்பதாகக் கொள்ளலாம். இது சுத்திகரிக்கப்படாத சாதாரண நிலக்கரியில் 280 அல்லது 290 கோடி டன் அளவுக்குச் சமானம்.

கடந்த பத்தாண்டுகளில் சில நிலக்கரிப் பிரதேசங்களை இந்திய பூகர்ப்ப ஆராய்ச்சி இலாக்கா புனர்ப் பரிசீலனை செய்திருக்கிறது. தானுபாத் அஸன்ஸோல் என்ற மாவட்டத்திலுள்ள ஜரியா, ராணிகஞ்சு என்ற பிரசித்தி பெற்ற பிரதேசங்களில் மட்டும் சுமார் 2000 அடி பூமிக்குக் கீழ் மட்டத்தில் 820 கோடி டன் அளவுக்குக் கல் கரிக்கு ஏற்ற நிலக்கரி இருப்பதாக மதிப்பீடு செய்யப்பட்டிருக்கிறது. இதைத் தவிர, மேலே சொல்லியபடி, மேலும் இரண்டு பிரதேசங்களில் நிலக்கரி கிடைக்கிறது. அவை பொகாரோவும், காரன்பூராவும். இங்கே கல் கரிக்கு ஏற்ற நிலக்கரியும், அதற்குச் சிறிது மட்டரகக் கரியும் கிடைக்கின்றன. இன்னும் ஆழமாகத் தோண்டினால் சுமார் 4000 அடிக்குக் கீழே மேலும் உபயோகமுள்ள நிலக்கரி கிடைக்கக்கூடும் என்று எண்ண இடமிருக்கிறது. இப்போதுள்ள நமது நிலைமையில் 4000 அடி வரையில் நிலக்கரிக்காகத் தோண்டிப் பார்க்கலாம். அதற்குக் கீழும் தோண்ட வேண்டியிருந்தால் லாபகரமாக இராமல் போகக் கூடும். இவற்றையும் கரியை வெட்டி எடுப்பதில் ஏற்படும் சேதங்களையும் மனத்தில் கொண்டு கவனித்தால் நம் நாட்டின் வருங்கால உபயோகத்துக்குச் சுமார் 700 கோடி டன் நிலக்கரிதான் கல் கரியாக மாற்றத் தகுதி வாய்ந்தது என்று சொல்லலாம். இதை ஒரு உச்சவரம்பாகவே கொள்ள வேண்டும். இந்தக் கணக்குப் படிக்கும் எதிர்பார்க்கும் அளவு பூமிக்கு அடியில் நிலக்கரி உண்மையாகவே இருக்கின்றனவா என்பதையும் நிச்சயமாக நிர்ணயித்தாக வேண்டும். நிர்ணயம் செய்த பின் இந்தக் கணக்குகள் சரிதான் என்று தெரிய வந்தால் அடுத்த 50 அல்லது 60 வருஷங்களுக்கு நமக்குத் தேவைப்படும் கல் கரி, உலோகக் கரிக்கு நம்மிடம் வாய்ப்புகள் இருக்கின்றன என்று நிச்சயமாகச் சொல்லலாம். இதற்கிடையில், கனியப் பொருள்களை இரும்பாக மாற்ற நிலக்கரியை அவசியமாகக் கொண்ட முறைகளில் அடிப்படையான மாறுதல்கள் ஒன்றுமில்லையென்றாலும், விஞ்ஞான நுணுக்கங்களின் முன்னேற்றத்தினால் நம்மிடமுள்ள நிலக்கரியின் உபயோகத்தையும் ஆயுளையும் நீடித்துக் கொள்ள வகையும் ஏற்படலாம். மின்சாரத்தையும், அணுசக்தியையும் பயன்படுத்தி இரும்பு உற்பத்தி செய்வதில் கணிசமான முன்னேற்றங்கள் ஏற்படக் கூடும். அப்படி ஏற்பட்டால் உஷ்ணம் அல்லது சக்திக்கு மட்டும் இவற்றை உபயோகித்துக் கொண்டு நிலக்கரியோ கல்கரியோ 'கார்பன்' பொருளை அளிப்பதற்கு மட்டும் உபயோக

மாகலாம். அம்மாதிரி நிலை ஏற்படும் போது கல் கரிக்கு ஏற்ற நிலக்கரிக்குத் தேவையே இருக்காது. ஏனெனில் 'கார்பன்' என்ற கரியை மட்டும் வழங்குவதே போதும் என்ற நிலையில் எந்தவித நிலக்கரியும் இந்தக் காரியத்துக்கு உதவும். உயர்ந்த ரக நிலக்கரிதான் வேண்டும் என்ற அவசியம் இல்லை.

தற்போது நமது நாட்டில் இம்மாதிரி உலோகக் கரி தேவைக்கு அதிகமாகவே தயாரிக்கப்படுகிறது. சற்றேறக்குறைய ஒன்றரைக் கோடி டன்கள் தயாராகிறது என்று கணக்கிடப்பட்டிருக்கிறது.

இந்த ஒன்றரைக் கோடி டன் உற்பத்தியில் உலோக உருக்குச் சாலைகளில் உபயோகமாவது சுமார் 50 லட்சம் அல்லது அரைக் கோடி டன்கள்தான். மற்ற ஒரு கோடி டன் கல் கரி ரயில்வே என்ஜின்களிலும் 'பாய்லர்' அடுப்புகளிலும் நீராவி உற்பத்திக்காக உபயோகிக்கப்படுகிறது. ஆனால் இந்த நிலை இனி நீடித்திருக்காது. அடுத்த 5 அல்லது 6 வருஷங்களில் நம்முடைய எஃகு உற்பத்தி திட்டமிட்டுள்ளபடி 60 லட்சம் டன் அளவுக்குப் பெருகி வரும்போது உலோக உருக்கு உபயோகத்துக்குத் தற்போது தேவைப்படும் 50 லட்சம் டன்னுக்கு அதிகமாய்க் கல்கரி செலவாகும். அந்த நிலையில் நமது கல்கரி உற்பத்தியைக் கூடப் பெருக்கிக்கொள்ள வேண்டியிருக்கும். அத்துடன் கல் கரியை உலோக உருக்கு வேலைகளுக்கு மட்டுமே உபயோகப்படுத்த வேண்டும் என்று கட்டுப்படுத்திக் கொள்ளவும் வேண்டியிருக்கும். மேலும் இப்போதெல்லாம் கல்கரி ஏற்றுமதி செய்யப்படுவதையும் அனுமதிக்கிறார்கள். அண்டை நாடுகளான இலங்கை, மலாயா, இந்தோனேசியா போன்ற பிரதேசங்களுக்கு அனுபபப்படுகின்றன. அப்படி அனுப்பப்படும் கல் கரி பெரும்பாலும் உலோக உருக்கு வேலைக்கு உபயோகமாகும் கல் கரியே. இவ்வாறு செய்வது பிற்போக்கான நடவடிக்கை. இதைத் தடை செய்வது அவசியம். ஏற்றுமதியை அனுமதித்தே யாகவேண்டுமானால் இதைத் தற்காலிகமாக வேண்டுமானால் அனுமதிக்கலாம். ஏனெனில் எல்லாவற்றையும் கூட்டி ஆராய்ந்து பார்க்கும்போது கல் கரிக்கு ஏற்ற நிலக்கரியின் நிலை முற்றிலும் திருப்திகரமாக இல்லை என்பதையும், அதைக் கூடிய வரையில் பாதுகாத்துச் சிக்கனமாக உபயோகப்படுத்த வேண்டுமென்பதையும் சொல்ல வேண்டும். இந்த நிலையை நமது மத்திய அரசாங்கம் உணர்ந்து கொள்ள வேண்டும்.







தருமபுரம் ஆதீனம் பேரளம் ஸ்ரீ சுயம்புநாத சுவாமி ஆலயத்துக்குத் திருப்பணி செய்யப் பெற்று மகா கும்பாபிஷேகம் சமீபத்தில் வெகு விமரிசையாக நடைபெற்றது. இத் திருப்பணிக்குப் பெருதவி புரிந்த தருமபுரம் ஆதீனகர்த்தருக்கு ஸ்ரீலஸ்ரீ அருளனந்தித் தம்பிரான் தலைமையில் மக்கள் வரவேற்பளித்து உபசரித்தனர்.

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 93 பெரி...ச...சய...கால்!

"துரையோடு சொக்கட்டான் ஆடலாவது! நமக்கு ஏன் அப்பா அவர்களோடு பிணக்கு?"

"நாம் என்ன அநியாயத்துக்கா போகிறோம்? நமக்கு என்னடா பயம்? துரையாம்! அவனோடு பிணக்கு கூடாதாம்! அப்படி என்ன அவன் ரிச்யசிருங்கரா? தலையில் கொம்பு முளைத்திருக்கா?"

"உச்...ச்...சு. ஏண்டா கத்துகிறாய்? மேற்குத் தெருவுக்காரர்கள் பெருத்த கை. ரொம்பச் சாய்கால் உள்ளவர்கள்."

"கை பருத்ததோ சிறுத்ததோ எனக்குத் தெரியாது. கால் என்னவோ பருத்ததுதான். சரய்வு என்று சொன்னாயே, அது காலில் இல்லாவிட்டாலும் நடையில் இருக்கிறது."

"அம்பீ! சத்தம் போடாமல் இப்போது நீ உள்ளே போக மாட்டாயா?"

"சரி, அப்பா! உங்களுக்கு ஏன் இந்த மனஸ்தாபம்?"

தகப்பனுக்கும் மகனுக்கும் இப்படி ஒரு சம்பாஷணை, மேற்குத் தெருக்காரர் ஒருவரைப் பற்றி.

மகன் "கால் என்னவோ பருத்தது தான்" என்றது மேற்குத் தெருக்காரரின் யானைக் காலைக் குறித்துச் சொன்னதாகும். அவர் நடக்கும்போது படும் கஷ்டத்தைச் சொல்லி முடியாது. இடது கால் ஒரு உரல்போல் பருத்தும் கனத்தும் இருக்கும். இந்தப் பளுவைத் தூக்கி வைத்து நடப்பது எப்படி? வலது பக்கம் உடலைச் சாய்த்து 'உம்' என்று ஒரு முக்கலோடு இடது காலை எடுத்து முன் வைத்துப் பிறகு உடலை நேர்நிலைக்குக் கொண்டு வர வேண்டும். இதற்காகக் கையை வீசும் வீச்சு....மற்றொரு காட்சி தான். இப்படிச் சாய்ந்து சாய்ந்து நடப்பதைத் தான் "நடையில் ஒரு சாய்வு உண்டு" என்று மகன் குறிப்பிட்டான்.

இப்படிப்பட்ட காலைப் பெரியகால், பெருங்கால் என்று வழக்கத்தில் சொல்ல நேரிட்டது. இதை யானைக்கால் என்றுசொன்னால் பெரும்பாலோரும் அறிவர்.



"...கொம்பு முளைத்திருக்கிறதோ?"

கால், கை போன்ற அங்கங்கள் முடிவு பெறும் இடங்களில்தான் இவ்விதமான வீக்கமுள்ள வியாதி பெரும்பாலோருக்கு உண்டாவது வழக்கம். சில பேருக்குப் பீஜ கோசங்களில் இவ்வீக்கம் ஏற்படுவதுண்டு. ஒரு சிலருக்கு, ஸ்திரீகளுக்கு, ஸ்தனங்களிலும் இவ்வித வீக்கம் ஏற்படுவதுண்டு.

உடம்பெல்லாம் ஒரு கடுப்பும் வலியும் ஏற்படும். இத்துடன் நிரந்தரமாயுள்ள மலபந்தம் சிறிது கடுமையான நிலையையடையும். இதைத் தொடர்ந்து ஒரு குளிரும்—அதைத் தொடர்ந்து ஜுரமும், நளிர் ஜுரத்தைப் போல் ஏற்படும். கவட்டியில் சிறிது வீக்கமும் நோவும் முதலில் ஏற்படும். அதைத் தொடர்ந்து கவட்டியிலிருந்து தொடைகள் வழியாக ஒரு நரம்பு தடித்தது போலாகி வீக்கம் சிறிது சிறிதாக இறங்கிப் பாதம் வரையில் வந்து கணுக்காலைச் சுற்றி ஓரளவு நிற்கும். இப்படியாக இந்த நோய் ஆரம்பமாவது வழக்கம். ஒரு சிலருக்கு ஜுரம் முதலியவை வராது. ஆனால் வீக்கம், வலி முதலியவை மட்டும் மேற்சொன்னவிதத்தில் உண்டாகும். [illegible] என்னும் லிம்ஃப் ஓடும் நாளங்களிலோ—வலிகாலில் மட்டுமோ அழற்சி ஏற்படுவதால் இந்த நிலை உண்டாகிறது. இது யானைக் காலும் அல்ல—அந்த இனத்தைச் சேர்ந்த ஃபைலேரியாஸிஸ் (Filariasis) என்னும் ரோகமும் அல்ல என்றுதான் இதை இந்நிலையில் சொல்வார்கள். இந்த நிலையிலேயே தகுந்த சிகிச்சை பெற வேண்டும். அலட்சியமாக இருந்து விட்டால் நோயை அறவே நீக்கக் கூடிய நிலையில் தக்க சிகிச்சையைச் செய்யும் சந்தர்ப்பத்தை இழப்பதாக முடியும். இவ்விஷயத்தில் இவ்வித ஜாக்கிரதை மிகவும் அவசியம்.

இந்நோய்க்குக் காரணமான கிருமி ஒன்று இருப்பதாக மேல்நாட்டு வைத்திய சாஸ்திரம் கூறுகிறது. இது முக்கியமாக இரவு பன்னிரண்டுமணிக்குத்தான் இரத்தத்தில்

சஞ்சரிக்குமாம். அந்தச் சமயம் பார்த்து இரத்தத்தை எடுத்துப் பூதக்கண்ணாடி யில் பார்த்தால் இக் கிருமியைக் காண லாமாம். மற்றுள்ள நேரங்களில் இது லஸிகாவில் பதுங்கி நிற்கும் இயல்பை அதிகம் பெற்றிருக்கிறது. இது லஸிகா ஓடும் நாளங்களின் உட் சென்று அந் நாளங்களில் அழற்சியை யுண்டாக்கும். அதனால் லஸிகா கிரந்திகளும் அழற்சியுறும். லஸிகா நாளங் கள் அடைபடுவதாலும் அவற் றில் அழற்சி ஏற்படுவதாலும் குறிப்பிட்ட இடங்களில் வீக்க மும் தொட்டால் சூடும் செக் கச் செவேல் என்ற வீக்கமும் எரிச்சலும், கிரந்திகள் வீங்கிப் புடைத் துக் கொண்டும் உடம்பு தெரியாத தாப ஜுரமும் ஏற்படும். நினைவு தப்பிய நிலை யிலும் ஓயாத வாந்தியும், (பச்சைப் பச் சையாய்க் குடம் குடமாய் வாந்தி எடுப் பது ஒரு புறம் இருக்க) "ஊ...வே... ஊ...வே..." என்று போடும் சத்தம் ஊரே அதிரும்படியாகவும் இருக்கும். துணிதுப்பு நிலை தவறி மானம் போவதும் தெரியாத நிலையில் மூன்று நாட்கள் கழிந்து விடும்.


இரவு சரியாகப் பன்னிரண்டு ......

பிறகு படிப்படியாக ஜுரம் குறையும். வலியும் எரிச்சலும் குறையும். சிவப்பு நிறமும் மாறும்; வீக்கமும் குறையும். மற்றும் இரண்டு மூன்று நாட்களில் மெல்ல மெல்ல எழுந்து நடமாடவும் சாத்தியமாகும். ஆனால் சுமார் ஒரு மாதம் ஆனதும் இவ்விதமே மறுபடியும் ஒரு முறை ஜுரம் வரும்.

இப்படி, மாதம் ஒரு முறை சிலரிடம் இரண்டு மூன்று மாதங்களுக்கு ஒரு முறை என்று வேறு சிலருக்கும் ஆறு மாதங்கள் கழித்தும் ஒரு சிலருக்கும் ஜுரம் வீக்கம் முதலிய சகல உபாதை களும் ஏற்படும். இவை மாறியதும் வீக்கம் குறையும். ஆனால் பூரணமாகக் குறையாது. சிறிதளவு வீக்கம் தங்கித் தங்கி நின்று வரும். ஆகவே ஒவ்வொரு தரம் ஜுரம் வந்து இறங்கிய பிறகும் வீக்கம் மட்டும் முன்னிருந்ததை விட அதிகமாகிக் கொண்டே வரும். வீக்க முள்ள இடம் முதலில் அமுக்கினால் சிறிது பள்ளம் விழும். காலையில் அதுவும் இராது. மாலைக்குள் நிற்பது நடப்பது காரணமாகச் சிறிது வீக்கம் ஏற்படும். அப்போதுதான் மேற்சொன்னவிதம் சிறிது அமுங்கும். ஆனால் காலக் கிர மத்தில் படிப்படியாக மேலே விவரித்த விதம் நிரந்தரமான வீக்கம் ஏற்பட்டு, வீக்கத்தில் சிறிதளவு மட்டுமே அமுக் கினால் அமுங்குவதாயும், அதற்குக் கீழே கல்போல் அமுங்காத கெட்டியான வீக் கம் நிலை பெற்றதாகவும் இருந்து விடும்.

சிலருக்கு இவ்வித வீக்கம் ஏற்பட்டு, வீக்கத்தின் மேல்தோல் கனத்துத் தடித் தும், ஒரு நிற பேதத்துடன் அரிப்பும் சொறிதலும் ஏற்படுவதும், கருணைக் கிழங்கு போன்ற கரடுமுரடான தோற்றமும், முளைகள் தோன்றுவதும், சருமம் வெடித்து ஒருவித துர்க்கந்தத்துடன் நீர் கசிவ தும் உண்டு. இதைத்தான் யானைக்கால் என்று அழைக்க வேண்டும் என்று கூறுகிறார் ஒரு சிலர்.

சிகிச்சையைப் பற்றிய வரையில் அடிப் படையான வித்தியாசம் ஏதும் நாட்டு வைத்திய முறையில் இல்லையானதால், Lymphangitis, Filariasis Elephan-tiasis ஆகிய அவாந்தர பேதங்களை மிகைப்படுத்த வேண்டியதில்லை.

இந்நோய் உள்ளவரைக் 'கொசு' கடிக்க நேரிடுகிறது. நோயாளியின் ரத்தத்தி லுள்ள கிருமி-விஷப்பொருள்கள், கிருமி களின் முட்டைகள் ஆகியவை கொசு வினிடம் குடியேறுகின்றன. பிறகு இந்தக் கொசு இந்நோயே இல்லாத ஒருவனைக் கடிக்க நேரிடுகிறது. அப் போது இக் கொசுவினிடமுள்ள வியாதிக் குக் காரணமான அம்சங்கள் கடிக்கப் படுபவனின் சரீரத்தில் புகுத்தப்படு கின்றன. காலக்கிரமத்தில் இவ்வித விஷாம்சம் இம் மனிதனின் சரீரத்தில் விருத்தியடைகிறது.

விஷக்கிருமியின் முட்டைகள் கிருமிக ளாகப் பெருகும். பிறகு இக் கிரு மிகள் பெண்டு பிள்ளைகளென்றாகி, புத்ர பௌத்திராதிகளாகிப் பட்டா ளம் பட்டாளமாகப் பெருகும். இன்னும் சொல்லிக் கொண்டே போக வேணுமா? இவனுக்கும் மேற்சொன்ன விதமே யானைக்கால் வியாதி சம்பவிக்க வேண்டி யதுதானே! கொசுக்களின் மூலமாகத் தானே நளிர் ஜுரம் பரவுகிறது! அவ் விதமேதான் கொசுக்களின் மூலம் யானைக்காலும் பரவ நேரிடுகிறது.

ஆகவே மலேரியா ஒழிப்புத் திட்டம்—பைலேரியா ஒழிப்புத் திட்டம்—மலேரி யாவை எதிர்த்துக் கடும்போர்-பைலேரி யாவை எதிர்த்துக் கடும்போர் - என் பவை உலக சுகாதார [அனுமய] நிர்வாக ஸ்தாபனத்தின் ஆதரவில் நடத்தப்படுகிறது.

இதெல்லாம் இருவாளர் 'கொசு சுரு' வுடன் எதிர்த்துப் புரியக்கூடிய பெரும் போரேயாகும். **(தொடரும்)**

பாங்கானதும் ஆரோக்ய
முமான கூந்தலுக்கு
பிரிலியன்டைன்
அது வசீகர
ப்ரெஞ்ச் லாவண்டர்
வாசனையை உடையது



# பியர்லைன்
## லாவண்டர்
## பிரிலியன்டைன்

TAMIL
BR.7.

"ஐஸ்—கூல்"

க்ஷவரத்திற்குப் பின் உபயோகிக்கும் லோஷன் குளிர்ச்சியை அளிக்கிறது—உங்கள் முகத்திற்கு புதிய மலர்ச்சியை அளிக்கிறது. மேலும் வெட்டுக் காயங்களைக் குணப்படுத்த உதவுகிறது.

**ஒவ்வொரு ஜாடியிலும் ஒரு பரிசுக் கூப்பன் உண்டு**

PEARLINE-PARIS PRIVATE LTD. P. O. Box 493 BOMBAY 1.

"ஓம் முருகா!" என்னும் எழுத்துக்கள் பளிச்சிட்டு மின்னின: வெள்ளி நிலவிலே அந்த வெள்ளைக் கட்டடம் மிதந்து கொண்டிருந்தது. பங்களாவின் வெளிப்புற வாசற்கதவில் பிணைக்கப்பட்டிருந்த இரும்புச் சங்கிலியில் ஓசையை உண்டாக்கியவாறு இருந்தது ஒரு நாய். ஒருகணம் அது தரையில் முகம் பதித்து மோப்பம் பிடித்தது. மறுகணம், கால்களை உதறிய வண்ணம் தலையை உலுக்கிக் குரைக்க எத்தனித்தது.

தாணு நிலயத்தில் 'டாண், டாண்' என்று மணி ஒலி பரவி எழுந்தது. அப்போது மணி பன்னிரண்டு. நட்ட நடுநிசி!

மண்ணில் பதிந்தெழுந்த பாதங்களின் மெல்லிய ஓசை இலேசாகக் கேட்டது. அதற்குநேர் எதிரிடையாக நாயின் சத்தம் புறப்படத் தொடங்கியது. 'ளொள்!...ளொள்!'

வந்த உருவம் பங்களாவை அண்டியது; பிணைக்கப்பட்டிருந்த பிராணியினைப் பற்றி லவலேசமும் கவலை கொள்ளாமல், அந்த உருவம் கதவைத் திறந்துகொண்டு உள்ளே

# ஒடுங்கக் காண்பது யோகியர் உள்ளம்



பூவை

நுழைந்தது. திறந்த கதவை மூட ஓடியது இடது கை. வலது கையில் ஒரு பழுப்பு பை ஊசலாடியது. காருக்கு ஒதுக்கிக் கொடுத்திருந்த 'போர்டிகோ'வையும் முகப்பு மண்டபத்தையும் தோட்டம் விட்ட அந்த உருவம் சுவரில் பதித்திருந்த பொத்தானை அழுத்தி விட்டது.

தாழ்ப்பாள்களைத் திறந்து கொண்டு, 'யாரது?' என்ற அதிகாரக் குரல் கேட்டது. கேட்டவன் அந்தப் பங்களாவின் சமையற்காரன். வெளித் தாழ்வாரத்தின் மின்சார விளக்கைப் பொருத்தினான்.

அந்த உருவத்தின் முழுச் சித்திரத்தை எடுத்துக் காட்டியது, மின்சார விளக்கின் ஒளி. வாரிக் கலைக்கப் பெற்ற கிராப்பு முடி; சலவை செய்து கசங்கிப் போன உடைகள்; வேலை

கெட்ட வேளையின் தூக்கக் கலக்கம் கொண்டிருந்த விலாசம்.

"யாரு நீங்க?"

"என் பெயர் கந்தப்பன். ஒரு அவசரக் காரியமாகச் செட்டியார் ஐயாவைப் பார்க்க வேண்டும்!" என்றான் இளைஞன்.

அவன் பேசி நிறுத்துவதற்கும் மாடியிலிருந்த செட்டியார் தட்டுத் தடுமாறிய வண்ணம் இறங்கி வருவதற்கும் சரியாக இருந்தது. செட்டியார் கண்களைத் துடைத்து விட்டுக் கந்தப்பனை ஏறிட்டு நோக்கினார்.

கந்தப்பன் கைகூப்பி வணங்கினான்; கை கால்களில் நடுக்கம் ஏற்பட்டது. "எசமான்!" என்றான் அவன்.

"திருட்டுப் பயலே!...நீ ஏன் இங்கே வந்தாய்?...திரும்பவும் அகப்பட்டதைச் சுருட்டிக் கொண்டு போகவா இப்படி நேரங் கெட்ட நேரத்திலே வந்திருக்கிறாய்? நம்பிக்கைத் துரோகி!...என் கண்முன்னால் நிற்காதே. இங்கிருந்து ஓடிப்போய் விடு!..." என்று இரைந்தார்.

கந்தப்பனின் விழிகள் கண்ணீரைச் சிந்திக் கொண்டேயிருந்தன.

"எசமான்!"

அடுத்த விநாடி செட்டியாரின் விரல்கள் கந்தப்பனின் கன்னங்களில் ஆழப் பதிந்தன. அவனை வெளியே தள்ளிக் கதவை மூடித் தாளிட்ட 'பெருமை' சமையலறை அதிகாரியையே சாரும்!

*   *   *

கந்தப்பனின் உருவம் ராமலிங்கம் செட்டியாரின் மனக் கண்ணை விட்டு விலகவே இல்லை. அதுபோலவே, அந்தச் சம்பவமும் அவர் நெஞ்சத்தை விட்டு அகலாமல், நினைவில் நிலைத்துப் புனர்ஜன்மம் எடுத்தது.

ஏறத்தாழப் பத்து மாதங்களுக்கு முன் நடந்த நிகழ்ச்சி அது.

அறந்தாங்கியில் சந்தைப்பேட்டை என்பது பரபரப்பு மிகுந்த பகுதி. அங்கேதான் ராமலிங்கம் செட்டியாரின் ஜவுளிக்கடை இருந்தது. ஐம்பதாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள ஜவுளிகள் அங்கே அடைக்கலம் புகுந்திருந்தன. ஆயிரக் கணக்கில் பணம் புரண்டது; 'திருமுருகன் முன் நிற்க!' என்கிற வாசகத்தை எழுதாமல் எந்த ரசீதும் அவர் பேனா ஓடமாட்டாது. 'ஓம் முருகா!' என்ற உச்சரிப்பு அவரது இதழ்களில் சதா மணம் பரப்பி நிற்கும். வேலை கூடி வரும்போது தானே தனலட்சுமியின் கருணையும் கிடைக்கிறது! வெறும் இரண்டாயிரம் ரூபாய் மூலதனத்தைக் கொண்டு ஆரம்பித்த 'ரெடிமேட்' கடை இன்று இவ்வளவு பெரிய அளவுக்கு வளர்ந்திருந்தது. இடையில் வந்து போன ஆண்டுகள் ஆறே ஆறுதான்.

இப்படிப்பட்ட நிலையிலே ஒரு நாள், செட்டியார் கடையைப் பூட்டிப் பூட்டை ஆறு தரம் நன்றாக இழுத்துப் பார்த்து விட்டுச் சாவிக் கொத்தை இடுப்பில் செருகிக்கொண்டு வீட்டுக்குப் புறப்பட்ட தருணத்திலே, "ஐயா!" என்று குரல் தந்து முன் வந்து வணங்கி நின்றான் ஓர் இளைஞன். அவன் தான் இந்தக் கந்தப்பன். தான் யாருமற்ற அநாதை என்றும், ஏதாவது வேலை கொடுத்தால் நாணயமாகச் செய்வதாகவும், கொடுக்கும் சம்பளத்தை வாங்கிக் கொள்வதாகவும் சொல்லிக் கண்ணீரும் கம்பலையுமாக நின்று வேண்டினான் அவன்.

"கடையிலே ஆறேழு பேர்கள் வேலைக்கு இருக்காங்க. வீட்டிலே என் பெண்சாதிக்கு உடம்பு சரியில்லே. அதனாலே எனக்கு இப்போதைக்குத் தேவையானது சமையல் ஆள் மட்டுந்தான்!" என்றார் செட்டியார், இரண்டு நிமிஷச் சிந்தனைக்குப் பிறகு.

"எசமான்! உங்களுக்குக் கோடிப் புண்ணியம் கிடைக்கும். நான் இதற்கு முன்னால் சமையல் வேலை செய்திருக்கிறேன். செட்டி நாட்டில் பள்ளத்தூரில் உ. அ. மூ. வீட்டிலே வேலை பார்த்திருக்கேனுங்க. ஒரு வாரம் பாருங்க. பிடித்தால் வைக்கக்கிடுங்க; இல்லையானால் என்னைத் துரத்திப்பிடுங்க!" என்று மன்றாடினான் கந்தப்பன்.

"சரி, உன் ஊர் எது?"

"எனக்குச் சிவகங்கைச் சீமைங்க!"

"சரி. ஒரே பேச்சாகச் சொல்லுகிறேன். மூன்று வேளையும் இங்கேயே சாப்பிட்டுக் கொள். சம்பளம் பதினைஞ்சு ரூபாய் தாரேன்!"

"ரொம்ப நல்லதுங்க, முதலாளி!"

முதலாளியின் நாணயமான ஏவலாளாகக் கந்தப்பன் இயங்கத் தொடங்கிச் சுவர்க் காலண்டரின் இதழ்களில் முந்நூற்றிருபத்தைந்தைக் கிழித்தெறிந்தான். இரண்டு முறை மாத்திரம் ஒவ்வொரு நாள் லீவு எடுத்துக் கொண்டு போய்த் தெரிந்தவர்கள் ஊருக்குச் சென்று வந்தான். மற்றப்படி, கந்தப்பன் அந்தப் பங்களாவின் ஒரு நபராகவே மாறி விட்டான்.

ஒருநாள். மதுரைக்குச் சரக்குப் போட்டு வரத் திட்டமிட்டு விடியற்காலை வண்டிக்குப் புறப்பட எண்ணித் துணிமணிகளுடன் நூறு ரூபாய் மட்டும் பிரயாணப் பையில் எடுத்து வைத்துக் கொண்டு படுத்துக் கொண்டார் ராமலிங்கம். ஆபத்துச் சம்பத்துக்களைக் கைச் செலவுக்கு எடுத்துச் செல்லும் வழக்கமான தொகை அது. சரக்குக் கொள்முதல் ஆயிரக்கணக்கில் நடைபெறும். அது கடன். சரக்கு இவருடைய கடைக்கு வந்த கையோடு உரிய பணம் உரிமைக்காரருக்குச் சேர்ந்து விடும். வியாபார ஒப்பந்தத்தின் மாமூல் நடப்பு இது!

கந்தப்பன் கொடுத்த சூடான பாலைக் குடித்து விட்டுப் படுத்தவர் மீண்டும் அலாரத்தின் ஒலி கேட்டு விழித்தார். காருக்குப் புறப்பட்ட நேரத்தில், பையைப் பிரித்துப் பணத்தை எண்ணியபோது, அவரது இரத்தம் கொதித்தது. உடனே "கந்தப்பா! டேய், கந்தப்பா!" என்று கூச்சல் போட்டார் செட்டியார். கந்தப்பனைத் தேடிப் பார்த்தார். அவன் அங்கு காணப்படவில்லை. "கடவுளே! இந்தப் பயல் கந்தப்பன் நூறு ரூபாயைச் சுருட்டிக் கொண்டு ஓடிவிட்டானே!" என்று முணுமுணுத்தார். கடைசியில் அவரது படுக்கைத் தலையணைக்கு அடியில் ஒரு கடிதம் இருக்கக் கண்டார்.

"முதலாளி அவர்களுக்கு,

உங்களுடைய பணத்தில் நூறு ரூபாயை மட்டுமே எடுத்துப் போகிறேன் நான். இந்தப்

பணத்தை உங்களிடம் மறுபடியும் திருப்பிக் கொடுத்து விடுவேன். இது நிச்சயம்.

இப்படிக்கு,
கந்தப்பன்

இந்தக் கடிதத்தைப் படிக்கப் படிக்க அவருடைய ஆத்திரம் வேகமாக வளர்ந்தது. பற்களைக் கடித்துக் கொள்வதைத் தவிர அப்போதைக்கு வேறு வழியில்லை.

• • •

அன்று சென்றவன் இன்று நடுராத்திரியில் திரும்பி விருக்கிறான். அவன் திரும்பி வருவான் என்று அவர் கனவிலும் எண்ணியவரல்லர். அவருக்கு மட்டும் உடல் நலம் செம்மையாக இருந்திருந்தால், இந்நேரம் அவனை அடித்து நொறுக்கியிருப்பார். புதிய சமையற்காரனைக் கொண்டு பழைய சமையல் ஆளை வெளியேற்றி விட்டு மாடிக்கு வந்து படுக்கையில் சாய்ந்தார் ராமலிங்கம். 'ஆ! என்ன தப்புச் செய்து விட்டேன்!....அவனைக் கையும் மெய்யுமாகப் பிடித்துப் போலீஸிலே ஒப்படைத்திருக்கலாமே....!' என்று ஒரு கணம் நினைத்தார். மறு விநாடிதான் அவன் முன்பு எழுதி வைத்துப் போன கடிதத்தின் வாசகம் நினைவில் ஓடியது. உடனேயே அது வந்த வழியே திரும்பியது. 'ம்....இந்தப் பயலாவது பணத்தைத் திருப்பிக் கொண்டு வந்து தருவதாவது....!' அடுத்த விநாடி என்ன தோன்றியதோ, படுக்கையிலிருந்து எழுந்தார் செட்டியார். கந்தப்பனைத் தேடிப் பிடித்துத் தானுவில் ஒப்படைக்க வேண்டுமென்ற புதிய துடிப்பு அவரை உலுக்கியது. எழுந்து கதவைத் திறந்தபோது, அவருடைய காலில் பட்டு விலகிய ஒரு புகைப் படத்தைக் கண்ணெடுத்துப் பார்த்தார். அவ்வளவுதான்; அவர் அந்தக்கணமே மயங்கித் தரையில் சாய்ந்து விட்டார். அப்போது "திருப்பதி!" என்று அவர் வாய் உச்சரித்தது!

"திருட்டுப் பயலே......! நம்பிக்கைத் துரோகி!"

ராமலிங்கத்தின் உள்ளம் அவரையும் மீறிய வண்ணம் இவ்வாறு கொக்கரித்தது. சில நாழிகைப் பொழுதுக்கு முந்தி அவர் கந்தப்பனை இகழ்ந்த சொற்களல்லவா இவை? மீண்டும், மீண்டும் இவை ஏன் செவிகளிடையே ரீங்காரம் செய்கின்றன....? அவரது முகம் ஏன் இப்படி விகாரமடைந்து வருகிறது? தலையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு ஏன் அவர் வேதனையின் எல்லை வரம்பில் நின்று தவியாய்த் தவிக்க வேண்டும்?

பட்டு மெத்தையில் அலுங்காமல், குலுங்காமல் கிடந்த அந்த நிழற் படம் செட்டியாரின் மனத்தில் நிழலாக அப்பிக் கொண்டிருந்தது. உள்ளம் சிலிர்த்தது போலவே, உடலும் சிலிர்த்தது. ஊனக் கண்கள் இறந்திருந்த மாதிரியே மனத்தின் கண்களும் விழித்திருக்கத் துடித்தன. மனம் துடித்தது; மனச் சாட்சி துடிக்கச் செய்தது; 'உன்னுடைய நூறு ரூபாய்ப் பணத்தைத் திருடிய கந்தப்பனை நீ திருடன் என்றாய்; நம்பிக்கைத் துரோகி என்று ஏசினாய்; பேசினாய்; அடித்து விரட்டச் செய்தாய்! ஆனால், நீ செய்த நம்பிக்கைத் துரோகத்தை மறந்து விட்டாயா....?'



ஜெயில் காக்கிடேபின்: நீ சொல்வது எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை

கைதி: அப்போ தயவு தாட்சிண்யம் பார்க்காதீங்க. பிடிக்காத ஆளை ஜெயிலை விட்டு வெளியில் அனுப்பி விட்டு மறு காரியம் பாருங்க!

கடந்த ஆறு ஆண்டுகளாக எந்த மனச் சாட்சியை ஆழக் குழி தோண்டிப் புதைத்து விட்டு அதன் மேல் தளத்தில் அவர் தம் இன்ப வாழ்வை நிர்மாணித்துக் கொண்டிருந்தாரோ, அந்த வாழ்வு, வளம், வனப்பு அனைத்தும் இப்பொழுது ஆட்டம் காணத் தொடங்கின. எந்த ஒரு புகைப்படத்தைப் பார்க்கவும் மனத் துணிவை இழந்து அதை எங்கோ ஓரிடத்தில் போட்டுப் பூட்டி வைத்திருந்தாரோ, அதே படத்தை அவர் ஏன் தேடிப் பிடித்து எடுத்தார்....? பாதத்தில் சிக்கிய அந்தப்படம் அவர் மனத்தின்மனத்தையும் மிதித்து விட்டதோ....? தெய்வத்தின் திருவிளையாடலா இது....?

மறைத்து மூடப்பட்ட அந்தரங்க இரகசியம்:

காரைக்குடியில் 'திருப்பதி மளிகைக் கடை'யின் முதலாளி திருப்பதியேதான். கல்லுக் கட்டி வட்டாரத்தில் நாலு பேருக்குப் பழக்கமான மண்டி அது. பிறந்த மண்ணில் வளர்ந்த மனைவியைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு ராமலிங்கத்தைப் பிறிதோரிடத்தில் கைகட்டிச் சேவகம் புரிய வைத்தது. திருப்பதியைக் கண்டார்; கணக்கு வழக்குகளிலிருந்த திறமையைச் சாங்கோபாங்கமாக எடுத்து விளம்பினார். கல்லாப் பெட்டியடியில் இருந்த திருப்பதி மனம் இரங்கி ராமலிங்கத்திடம் கணக்குப் பொறுப்புக்களை யெல்லாம் ஒப்புவித்தார்.

திருப்பதியின் வியாபாரம் கூடி வந்தது. நாட்கள் கூடி வந்தன. தீபாவளி வந்து போயிற்று. பக்கத்து ஊர்களில் அங்கங்கே 'திறவை' தங்கியது. வசூல் பண்ணி வருமாறு ராமலிங்கம் அனுப்பப்பட்டார். கானாடு காத்தானில் அ. முத்தையா அம்பலம் என்ற புள்ளியின் பேரில் இரண்டாயிரம் ரூபாய் 'பற்று' நின்றது. உடல் நலம் பாதிக்கப்பட்டிருந்த நிலையிலும் கூட அந்த மனிதர் கையில் இருந்த பணத்துடன் கடன் உடன் வாங்கி இரண்டாயிரத்தை 'மால்' பண்ணி ராமலிங்கத்திடம் கொடுத்தார். முதலாளி கைப்படவே ரசீது போட்டு அனுப்புவதாகச் சொல்லி விட்டு பஸ் ஸ்டாண்டுக்குப் புறப்பட்டுப் போய்ச் சேர்ந்தார் ராமலிங்கம். காரில் ஏறப்போன போது, முத்தையா அம்ப

வந்தின் வாழ்வு இறுதிப்பெற்று முடிந்த கதையைக் கேள்விப்பட்டார். மனித மனத்தில் பிருகத்தன்மை ஓடியது. காரைக் குடியை மிதித்தார் ராமலிங்கம். முத்தையா அம்பலத்தின் அநியாய முடிவைச் சொன்னார். "அந்தப் பணம் இனி வராதுங்க!" என்றார். திருப்பதி நம்பினார். மறுதினம் ராமலிங்கம் மனைவிக்கு உடல்நிலை அபாயமாயிருக்கிறதாகத் தகவல் கிடைத்திருப்பதாகவும், புறப்பட அனுமதி வேண்டுமென்றும் வேண்டினார். புறப்பட்டார் அவர். அவருடன் புறப்பட்டது இரண்டாயிரம் ரூபாய். அது 'ரெடிமேட்' கடைத் திறப்புவிழாவை நடத்தியது; இன்று ஐம்பதினாயிரம் ரூபாய்க்கு மேல் துணி மணிகள் குவிந்திருக்கின்றன! சில மாதங்களுக்கு முன்னதாகத் திருச்சி இரயில் நிலையத்தில் எலும்பும் தோலுமாக வறுமைக் கோலத்தில் காட்சி தந்த 'பழைய தெய்வத்'தின் பார்வையில் படக்கூடப் பயந்து மறைந்த சம்பவம் அவர் வரை என்றென்றும் பசுமை கொண்டதாகும். நம்பிக்கைத் துரோகம் எனும் மூலதனத்தைக் கொண்டு ஆரம்பமான தம் வியாபாரத்தைப் பற்றியோ, இரண்டாயிரம் ரூபாய்க்கு உடைமையாயிருந்தவர் குறித்தோ ராமலிங்கம் மறந்து போனார்! ஆனால் அதே மறதிதான் இன்று அவரைச் சித்திரவதை செய்து கொண்டிருக்கிறது!

வள்ளி மணவாளனை ஏறிட்டுப் பார்த்தார் செட்டியார். ஒலியும் உயிர்பெற்றுப் பேசியது: 'ராமலிங்கம், நீ இப்போது உன்னையே எண்ணிப் பார்....!' என்ற குரல் எதிரொலித்துக் கிளம்பியது.

ராமலிங்கம் எண்ணினார். பங்களாவும், கடையும் நினைவில் ஓடின. இரும்புப் பெட்டியிலிருந்த 'நிதி' முன் வந்தது. ஆனால் அவரது மனத்தின் 'நீதி' அவரைச் சாடு பிடித்து வதைத்தது. பங்களாவைச் சுற்றிலும் நோக்கினார். அவர் உயிர் பதைத்தது.

ராமலிங்கம் சுவரில் மோதிக் கொண்டார்; முருகனின் பாதங்களில் நெடுஞ்சாண் கிடையாக விழுந்தார். உள்ளே சென்றார் செட்டியார். நூறு ரூபாய்த் தாள்கள் இருபதை எண்ணினார்; எடுத்துப் பையில் வைத்துக் கொண்டார்; திரும்பினார். திருப்பதியின் படம் அவரது கைகளில் தவழ்ந்தது. வடித்த கண்ணீர் வழிந்து படத்தில் ஓடியது. "முதலாளி! என் தப்பை மன்னித்து விடுங்கள்: நீங்கள் எங்கேயிருந்தாலும் தேடிக் கண்டு பிடித்து, உங்களுக்குச் சேர வேண்டிய பணத்தை ஒப்படைத்து விடுகிறேன். அப்போது தான் என் மனச்சாட்சி என்னை மன்னிக்கும்; வேலன் மன்னிப்பான், இனி நீங்க என் நிழலிலே—இல்லே, உங்கள் அன்பு நிழலிலே இனிமேல் நான் இருப்பேன்!" என்று தம்முள் கூறிக் கொண்டார் ராமலிங்கம்.

* * *

உதயம் கண் மலர்ந்தது; உலகமும் துயில் நீத்தது.

"எசமான்!" என்று கூப்பாடு போட்டு வந்தான் சமையற்காரன்.

ராமலிங்கம் முருகன் முகத்தில்தான் கண் விழித்தார். 'ஓம் முருகா!' என்று ஓதினார். என்றும் அடைந்திராத அமைதி அவர் மனத்தில் பிறந்தது. ஒடுங்கக் கண்ட யோகியர் உள்ளம் மாதிரி செட்டியாரின் உள்ளம் பக்குவம் அடைந்திருந்தது.

"எசமான்!"

"தவசிப்பிள்ளே, சீக்கிரம் வெந்நீர்போடும்: வெளியூர் போகவேண்டும்!" என்று கூறினார் ராமலிங்கம்.

"எசமான்! ராத்திரி வந்த அந்தப் பையன் உங்ககிட்டே கொடுக்கச் சொல்லி நூறு ரூபாய்ப் பணம் தந்துச்சுங்க!"

ராமலிங்கம் திக்பிரமை அடைந்தார். நூறு ரூபாய்ப் பணத்தின் பின்னணியில் கந்தப்பனின் உருவம் மாத்திரமல்ல, உள்ளமும் பளிச்சிட்டது. ஐந்நூறு ரூபாய்ப் பணத்தில் நூறு ரூபாயை மட்டும் எடுத்துச் சென்ற 'விந்தை நிகழ்ச்சி' புத்துயிர் பெற்றது.

"அவன் எங்கே?"

"காலையிலேயே போயிடுச்சுங்க. அந்தத் தம்பி. இந்தா பாருங்க, இதையும் உங்ககிட்டே கொடுக்கும்படி சொல்லிச்சு!"

கடிதத்தின் உறை கழன்றது; உரை வாய் திறந்து கொண்டது:

"அன்புடைய ராமலிங்கம்,

என்னை நீங்கள் மறந்திருக்க மாட்டீர்கள்; மறந்திருக்கவும் முடியாது. ஆம்; உங்களுடைய மாஜி முதலாளியான திருப்பதியே தான் இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். தவறுகளை மன்னிப்பவனே மனிதன் என்பதன் உண்மையை உணர்ந்தவன் நான். அன்று நீங்கள் செய்த குற்றத்தை என்றோ மன்னித்த நான், இப்போது உங்களிடம் என் தப்பை மன்னிக்கும்படி கெஞ்சுகிறேன். புதிராகத்தான் தோன்றும். உங்களிடம் சில காலம் வேலை பார்த்த கந்தப்பன் என் மகன். நானேதான் உங்களிடம் அனுப்பினேன். அவன் என் மகன் என்ற உண்மையையும் மறைக்குமாறு எச்சரித்தவனும் நானேதான். ஊழ்வினைப் பயனாக என் நிலை தலைகீழானது. வறுமை ஆட்டிப் படைத்தது. மனைவியை இழந்த எனக்குக் கடைசிக் காலத்தில் என் மகனே ஐந்து, பத்து அனுப்பி உதவினான். ஆனால் அவன் உங்கள் பணத்திலிருந்து நூறு ரூபாயைத் திருடி வந்து என் நோயைப் போக்கப் பிரயத்தனப்பட்ட நடப்பு நேற்று முன்தினம் தான் எனக்குத் தெரிந்தது. என் நெஞ்சே என்னைச் சுட்டது. மணச்சநல்லூரில் என் பூர்வீகச் சொத்தாக மிஞ்சிநின்ற என் வீட்டை விற்று, உங்களுக்குச் சேர வேண்டிய பணத்தை அனுப்பியிருக்கிறேன். மீதிப் பணத்தில் என் மகனுடைய எதிர்கால வாழ்வுக்கு அடிகோலும் வகையில் சிறிய மளிகைக் கடை ஒன்றையும் தொடங்கிக் கொடுத்துள்ளேன். என் மைந்தன் செய்த தவற்றுக்குத் தண்டனையை நான் அன்றே அளித்து விட்டேன். நீங்களும்மன்னித்து விடுவீர்களல்லவா? உங்கள் பணம் உங்களிடம் வந்து சேர்ந்த சேதி கிடைத்ததும்தான், என் ஆவி அமைதியாக அடங்கும்.

இப்படிக்கு,
க. திருப்பதி"

"எஜமான்....! கந்தப்பா...." என்று கதறிக் கொண்டே பிரயாணப் பையும் கையுமாகப் புறப்பட்டார் ராமலிங்கம் செட்டியார். மூடியிருந்த அவருடைய மனக் கண்கள் மலர்ந்து கொண்டிருந்தன!



# பனித் தாமரை

சுதர்சன்



தமிழாக்கம்: ரா.வீ.

## 8. துயரத்தின் எல்லையில்...

மூன்றும் நாள் மத்தியானம் சதாசுகர் லக்ஷ்மணபுரியில் இருந்தார். அப்பொழுது அவருடைய உள்ளத்தில் ஆசைக் கடல் அலைபாய்ந்து கொண்டிருந்தது. அன்பு வெள்ளம் கரை புரண்டு ஓடிக் கொண்டிருந்தது. மனம் கட்டாத கற்பனைக் கோட்டைகளெல்லாம் கட்டிப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தது. அன்று அவர் தம் மகனை யல்லவா காணப் போய்க் கொண்டிருந்தார்! 'ராமு ஓடோடி வந்து அவருடைய கழுத்தைக் கட்டிக் கொள்ளுவான். அவர் அவனைப் பார்த்து ஒரு வருஷத்துக்கு மேலாகி விட்டதே! இப்பொழுது எவ்வளவு உயர்ந்திருப்பானோ? என்ன என்ன புது விஷமங்களெல்லாம் கற்றுக் கொண்டிருப்பானோ? ஆமாம்! அவனும் அவரைப் பார்த்து ஒரு வருஷத்துக்கு மேலாகி விட்டதே! அதனால் ஒரு வேளை அவரை அடையாளமே கண்டுகொள்ள முடியாமல் திகைத்துத் திண்டாடுவானோ? சேச்சே! அதற்குள் மறந்து விடுவானா? சாருமதிக்கு அவரைப் பார்த்ததும் ஆனந்தம் ஒருநிலை கொள்ளாது; மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்தே விடுவாள்! ஆனால் அந்தக் கைலாசநாதன்...அவனுடன் முகம் கொடுத்துக் கூடப் பேசக் கூடாது. எழுதிய கடிதத்துக்குப் பதில் கூடப் போடாத மனிதன் என்ன மனிதன்?'

இவ்வாறு சிந்தனையில் ஆழ்ந்த வண்ணம் வண்டியில் உட்கார்ந்து போய்க் கொண்டிருந்தார் சதாசுகர். அமீனபாத் கடைத் தெருவை அவர் அடைந்த பொழுது சிறுவர்களின் பெரிய கும்பல் ஒன்று வழியை அடைத்துக் கொண்டு நிற்பதைக் கண்டார். அச்சிறுவர்கள் யாரையோ ஒரேயடியாகச் சூழ்ந்து கொண்டு உபத்திரவப் படுத்திக் கொண்டிருந்தார்கள் என்பதும் அவருக்குத் தெரிந்தது. அடுத்த கணம் கும்பலின் மத்தியில் நிற்பவள் ஒரு பைத்தியக்காரியென்றும், பையன்கள் அவளைச் சூழ்ந்து கொண்டு கோலால் குத்திக் கேலி செய்து தொந்தரவு செய்துகொண்டிருக்கிறார்கள் என்றும் தெரிய வந்தது. உபத்திரவம் தாள மாட்டாமல் அவள் அவர்களைத் திட்டிக்கொண்டிருக்கிறாள் என்பதையும் அவர் உணர்ந்தார். அதற்குள் அந்த வண்டி அந்தக் கும்பலை நெருங்கி விட்டது. சதாசுகர் கூட்டத்தின் மத்தி

யில் நின்றுகொண்டிருக்கும் அந்தப் பெண்ணை ஊன்றிக் கவனித்தார். அவளைக் கண்டதும் அவருக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஏனெனில் பொல்லாத பிள்ளைகளுக்கு மத்தியிலே கிழிந்த கந்தல் ஆடை உடுத்திக் கொண்டு நின்ற பெண் வேறு யாரும் இல்லை; அவர் உயிருக்கு உயிராக நினைத்துவந்த சாருமதிதான். அவளுக்குத் தன் உடலைப் பற்றியோ, உடையைப் பற்றியோ சிறிதும் சிந்தனையே இல்லை. 'நாம் எங்கே இருக்கிறோம்? என்ன செய்கிறோம்? இப்படியெல்லாம் செய்யலாமா?' என்ற எண்ணமே அவள் உள்ளத்தில் லவலேசங்கூட எழவில்லை. மூளை புரண்டு பித்தம் தலைக்கேறிய பின் இந்த நினைவுகளுக்கெல்லாம் இடம் ஏது?

அட கஷ்டமே! அவர் காண வந்தது என்ன? கண்டது என்ன? கட்டிய கற்பனைக் கோட்டை என்ன? நிகழ்ந்த நிகழ்ச்சி என்ன? சதாசுகருக்குத் தலை சுற்றியது. அவர் கண்களுக்கெதிரே கடைத்தெருவில் உள்ள அத்தனை கடைகளும் காற்றில் மிதப்பது போலத் தோன்றின. ஆகாயம், பூமி அனைத்தும் தலை குப்புறக் கவிழ்ந்து விழுவது போலிருந்தது.

அவர் வண்டிக்காரனுக்கு வாடகை கொடுத்து அனுப்பி விட்டுச் சாருமதியை நோக்கி விரைந்தார். அப்பொழுது அவருடைய உள்ளம் நொறுங்கித் தவிடுபொடியாகிக் கொண்டிருந்தது; கைகால்கள் 'வெடவெட' வென்று நடுங்கிக் கொண்டிருந்தன. அந்த நாலடி தூரமும் அவருக்கு நாற்பது மைல் நீளமாகத் தோன்றியது. அவர் அந்தப் பையன்களை அதட்டி உருட்டி, அங்கிருந்து விரட்டி விட்டுச் சாருமதிக்கு எதிரே போய் நின்று கொண்டார். சாருமதி பைத்தியத்தின் வெறிப் பார்வையோடு அவரை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தாள். பிறகு 'கடகட' வென்று ஒரு பேய்ச்சிரிப்பு சிரித்தாள்.

அதைக் கண்ட சதாசுகருக்குத் தமது உள்ளம் ஆயிரம் சுக்கலாக உடைந்து விட்டது போலிருந்தது. "சாருமதி!" என்று அன்பு பொங்கும் குரலில் அழைத்தார்.

சாருமதி எவ்விதமான உணர்ச்சியையும் வெளிக்காட்டிக் கொள்ளாமல் சதாசுகரை மறுபடியும் ஒரு முறை பார்த்து விட்டு, "நீயும் இந்தக் கோட்டான்களின் கோஷ்டியைச் சேர்ந்தவன் தானா?" என்று கேட்டாள்.

"இல்லை, சாருமதி! நான் வைஜநாத்திலிருந்து வந்திருக்கிறேன். என்னை அடையாளம் தெரியவில்லையா, உனக்கு?" என்று குரலில் பரிவு தொனிக்கக் கேட்டார் சதாசுகர்.

அதைக் கேட்ட சாருமதி பதில் பேசாமல் சதாசுகரையே பார்த்துக் கொண்டு நின்றாள். பிறகு திடீரென்று உரத்த குரலில், "இந்தக் கிழவனுக்குப் பைத்தியம்! இந்தக் கிழவனுக்குப் பைத்தியம்!" என்று கூவினாள்.

பையன்கள் எல்லோரும் அதைக் கேட்டுக் கொல்லென்று சிரித்தனர். "தாத்தா! பார்த்தாயா? இந்தப் பைத்தியத்துக்குப் பரிந்துகொண்டு பேச வந்தாயே! இப்பொழுது உன்னையே பைத்தியமாக்கி விட்டதே, இந்தப் பைத்தியம்! பார்த்தாயா?" என்று ஒரு பையன் சதாசுகரைக் கேட்டான்.

இன்னொருவன், "தாத்தா! இவள் ஒரு பைத்தியக்காரி! பார்த்தாலே தெரியவில்லை?" என்று கூறிச் சதாசுகருக்கு விளங்க வைக்க முயன்றான்.



அதைக் கேட்ட சாருமதி துணுக்குற்றாள். பிறகு துடுக்காக, "என்னை யார் பைத்தியம் என்று சொல்லுகிறது? பைத்தியம் என்று சொல்பவனின் நாக்கை ஒட்டத் துண்டித்து விடுவேன், ஆமாம், ஜாக்கிரதை!" என்றாள்.

இதைச் சொன்னதும், அவள் தன் கால்களால் தரையை ஓங்கி ஓங்கிக் குத்தி விட்டு, அங்கிருந்து ஒரு மூலைக்குப் போய் நின்று கொண்டாள். சிறிது நேரத்துக்கெல்லாம் தரையில் அப்படியே உட்கார்ந்து கொண்டு, முழங்கால்களுக்கிடையே முகத்தைப்



புதைத்துக் கொண்டாள். பிறகு அங்கேயே காலை நீட்டிப் படுத்தவாறு மிகவும் மெதுவான குரலில் ஏதோ ஒரு பாட்டை முணுமுணுக்கத் தொடங்கி விட்டாள்:-

"நானே அன்பு நகரத்தரசி
அன்பு நகரத்தரசன்-அவன்
என்னிடம்
அன்பு மொழி பல பேசுவான்
நானே அன்பு நகரத்தரசி."

உள்ளத்தைத் துளைக்கும் இந்தக் காட்சியைக் கண்ட சதாசுகர் மனம் புழுங்கினார். அவருடைய கண்களில் நீர் திரையிட்டது. அவர் தம்மை அடக்கிக் கொண்டு பக்கத்தில் இருந்த ஒரு கடைக்காரனிடம் சென்று, "ஏன் அப்பா! இந்தப் பெண் இம் மாதிரி எவ்வளவு நாட்களாக இருக்கிறாள், உனக்குத் தெரியுமா?" என்று விசாரித்தார்.

கடைக்காரன் சதாசுகரை ஏற இறங்க ஒருமுறை தலையிலிருந்து கால் வரையில் பார்த்தான். பிறகு, "என்ன கேட்டீர்கள்? எவ்வளவு நாட்களாக என்றா? கொஞ்ச நாட்களாகவே இப்படித்தான் இருக்கிறாள். ஆமாம், உங்களுக்கு அயலூரோ?" என்று கேட்டான்.

"ஆமாம், அப்பா!" என்று சொன்ன சதாசுகர் சிறிது நேரம் ஏதோ யோசனையில் ஆழ்ந்தார். பிறகு, "ஏன் அப்பா! கைலாசநாதன் இவளை வீட்டை விட்டே விரட்டி அடித்து விட்டானோ?" என்று கேட்டார்.

கடைக்காரன் சதாசுகரை வியப்புடன் பார்த்து விட்டு, "உங்களுக்கு விவரம் எல்லாம் ஒன்றுவிடாமல் தெரியும் போலிருக்கிறதே!" என்றான்.

"எல்லாம் தெரியாது. ஏதோ கொஞ்சம் கொஞ்சம் தெரியும். அவ்வளவுதான்!" என்றார் சதாசுகர்.

"என்னவென்று சொல்லுவேன்? பாவம்! இந்தப் பெண்ணின் நிலைமையை நினைத்தாலே எனக்கு அழுகை வந்துவிடுகிறது. எப்படியிருக்க வேண்டியவள், எப்படி இருக்கிறாள், தெரியுமா? இவள் பெரிய இடத்துப் பெண். முன்பு இவளுடைய தாயார் தற்கொலை செய்து கொண்டு இறந்தாள். இப்பொழுது இவள் பைத்தியம் பிடித்துப்



விஞ்ஞானி டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் அவர்களது புதல்வி சௌ. குமுதினிக்கும், விஞ்ஞான ஆராய்ச்சியாளர் ஸ்ரீ டி. எம். சீனிவாசனுக்கும் புது தில்லியில் விமரிசையாகத் திருமணம் நடந்தது. டாக்டரின் இரண்டாவது புதல்வர் ஸ்ரீ ராமனுக்கும் உபநயனம் நடந்தது. பிப்ரவரி 12-ந் தேதியன்று சிறப்பாக நடந்த இவ்வைபவங்களுக்கு டாக்டர் ராதாகிருஷ்ணன், ஸ்ரீ வி.கே. கிருஷ்ணமேனன் போன்ற பல பிரமுகர்கள் வந்திருந்து ஆசி கூறினர்.



ஸ்ரீ ராமன்

**வாழ்க, குமுதினி - டி.எம். சீனிவாசன்!**

பாயைச் சுரண்டுகிறுன். இவளுக்கு ஒரு பிள்ளைக் குழந்தை இருந்தது. குழந்தையாகவா இருந்தது அது? தங்க விக்கிரகம் என்றுல் தங்க விக்கிரகம்தான். இப்படி விளையாட்டுக் காட்டி வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளவேதான் படைத்தானே என்னவோ, அந்தக் கடவுள்! அதுவும் அவளைத் தவிக்கவிட்டு விட்டுப் போய் விட்டது!" என்று கதையைச் சொன்ஞன் கடைக்காரன்.

அதைக் கேட்டதும், சதாசுகருக்குத் தலையிலே பேரிடி விழுந்தது போலிருந்தது. நீண்ட நேரம் அப்படியே கல்லாகச் சமைந்து நின்று விட்டார். அதற்குப் பிறகு அவருடைய கண்களிலிருந்து நீர் ஆருகப் பெருகத் தொடங்கி விட்டது. அதைப் பார்த்த கடைக்காரன், "இந்தப் பெண் உங்களுக்கு ஏதாவது சொந்தமா, என்ன?" என்று கேட்டான்.

சதாசுகர் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு விட்டு, "சொந்தம் என்றுதான் வைத்துக் கொள்ளுங்களேன். ஒரு விதத்தில் பார்க்கப் போனுல் சாருமதி எனக்குப் பெண் முறை ஆக வேண்டும்!" என்ருர்.

இதைச் சொல்லி முடித்ததும், அவர் மறுபடியும் ஒரு முறை சாருமதியைப் பார்த்தார்; பிறகு தலையைத் தொங்க விட்டுக் கொண்டார்.

கடைக்காரன் திகைத்துப் போய் மறுபடியும் ஒரு முறை சதாசுகரை ஏற இறங்கப் பார்த்தான். பிறகு, "ஏன், சுவாமி! தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்? ஒருவேளை வைஜநாத்திலிருந்து வருகிறீர்களோ? தங்கள் பெயர்..." என்று கேட்டான்.

"சதாசுகர். நான் வைஜநாத்திலிருந்துதான் வருகிறேன்!" என்று பதில் அளித்தார் சதாசுகர்.

"மன்னிக்க வேண்டும். தங்களுக்கு உட்கார இடம் கொடுக்காமல் நிறுத்தி வைத்தே பேசி நான் பெரிய அபசாரம் செய்து விட்டேன். வாருங்கள், உள்ளே வந்து உட்காருங்கள். நான் தங்கள் ஊழியன்; இந்தக் கடை தங்களுடையது. ஏழையின் குற்றத்தை மன்னித்து இந்தக் குடிசைக்கு எழுந்தருள வேண்டும்!" என்று பயபக்தியுடன் கைகட்டி வாய் புதைத்து அவரை உள்ளே வருமாறு அழைத்தான் கடைக்காரன்.

சதாசுகர் தமக்கென்று போடப்பட்ட ஆசனத்தில் பேசாமல் போய் அமர்ந்து கொண்டார்.

"கைலாசநாதன் தங்களைப் பற்றி ரொம்ப ரொம்பச் சொல்லியிருக்கிறுர். இந்த உலகத்தில் தங்களைப் போன்ற மனிதர்கள் கிடைப்பது மிகவும் அரிது என்றுகூடச் சொல்லுவார்!" என்ருன் கடைக்காரன்.

சதாசுகர் அவன் சொன்னவற்றைச் சரியாகக் காதில் வாங்கிக்கொள்ளவில்லை. "என்ன நடந்தது என்று கூடத் தெரியாமல், எல்லாம் இப்படிக் கதையாக முடிந்து விட்டதே! இப்படி நடக்கும் என்று நான் கனவில் கூட நினைக்கவில்லையே!" என்று தம் போக்கில் சொல்லலானுர்.

"தாயாதி-பங்காளிகள், சுற்றத்தார்கள் எல்லோரும் கைலாசநாதனுக்கு விரோதமாகக் கிளம்பி விட்டார்கள். நானும் இன்னொருவரும்தான் கைலாசநாதனுக்குச் சாதகமாக இருந்தோம்; கைலாசநாதனின் சார்பில் பேசினோம். மற்றவர்கள் எல்லோருமே எங்களுக்கு எதிரிடை. ஏன்? அவருடைய சொந்தச் சித்தப்பா கூட எதிராளிகளின் கும்பலில்தான் கலந்து கொண்டார். கைலாசநாதன் நான்கு மாதங்கள் வரை வெகு வீம்பாகப் பல்லைக் கடித்துக் கொண்டுதான் இருந்தார். ஆனால் அதற்குப் பிறகு அவருடைய வீம்பு தளர்ந்து விட்டது" என்றான் கடைக்காரன்.

"எனக்குத் தெரியும். 'உனக்கு மனத் திடம் போதாது; தாயாதி பங்காளிகளுக்கு எதிராக உன்னால் நிற்க முடியாது' என்று நான் முன்பே முட்டிக் கொண்டேன். ஆனால் அப்பொழுது அவன் கேட்டால்தானே? 'தாயாதி பங்காளிகள் எனக்கு என்ன தீங்கு இழைத்து விடுவார்கள்? அவர்களால் இம்மி அளவு கூட எனக்குத் தீங்கு இழைக்க முடியாது' என்று வீறாப்புப் பேசினான்.—ஆமாம்! அவன் பேசினதில் என்ன தவறு? அது உண்மைதானே? அவனுக்கு யாரால் என்ன தீங்கு இழைக்க முடிந்தது? குட்டிச்சுவரானது இந்தப் பெண்ணின் வாழ்க்கைதானே?" என்று கூறியவாறே சதாசுகர் ஒரு முறை சாருமதியைப் பார்த்து விட்டு மீண்டும் நீண்ட பெருமூச்சு விட்டார். பிறகு, "ஆமாம், இம்மாதிரி இவளுக்கு எத்தனை காலமாக இருக்கிறது?" என்று மீண்டும் கேட்டார்.

"ஒரு ஆறு மாதம் இருக்கலாம், சுவாமி! முன்னால் எங்கேயோ போயிருந்தாள். திடீரென்று ஒரு நாள் கடைத்தெருவுக்கு வந்தபொழுது இந்த நிலையில் காட்சி அளித்தாள். இப்பொழுதெல்லாம் இவளுக்குத் தன் உடல்-உடை இவற்றின் சிந்தனையே சிறிதும் இருப்பதில்லை. இந்தக் காட்சியைக் காண இருதயமே வெடித்துவிடும் போலிருக்கிறது. நாள் முழுவதும் இதுமாதிரி ஏதாவது ஒன்றுக்கொன்று உளறிக் கொண்டிருக்கிறாள். இந்தப் பொல்லாத பிள்ளைகள் கைதட்டிக் கொக்கரித்து, இவளுக்கு இல்லாத உபத்திரவங்களெல்லாம் கொடுக்கிறார்கள்! சொன்னால் சிறிதாவது கேட்டால்தானே?" என்றான் கடைக்காரன்.

"ஆமாம்! இதனாலெல்லாம் கைலாசநாதனுக்கு என்ன குறைவு வந்து விட்டது? அவன் கவலை ஏதும் இன்றிக் கனகுஷியாக இருப்பான்.



வெகு வேகமாக விரிவடைந்துகொண்டு வரும் பிலிப்ஸ் இந்தியா கம்பெனியின் தென் மண்டலத்துக்கு மானேஜராகப் பதவி வகித்த திரு வி. ஆர். லக்ஷ்மிரதன் இப்போது கல்கத்தாவிலுள்ள தலைமைக் காரியாலயத்தில் விற்பனை மானேஜராக நியமிக்கப்பட்டிருக்கிறார். இதுவரை இப்பதவியை அயல்நாட்டினர்தான் வகித்து வந்திருந்தனர். இந்தியர் இப்பதவியை ஏற்பது இதுதான் முதல் தடவை. ஒரு தமிழருக்கு அந்தக் கௌரவம் கிடைத்திருப்பது மகிழ்ச்சிக்குரியது. 46 வயதேயுள்ளவரென்றாலும் நான்கு வருஷங்களுக்கு முன்புதான் சென்னைக் கிளைக்கு மானேஜராகப் பதவி ஏற்றார். இவருடைய காலத்தில் இந்தக் கம்பெனியின் முன்னேற்றம் குறிப்பிடத்தக்கது. 1955-ல் சென்னையில் நடந்த பிலிப்ஸ் ஸ்தாபனத்தின் வெள்ளி விழாவின்போது 'டெலிவிஷன்' ரேடியோ முதன் முதலாக இங்கே காட்டப்பட்டது. திரு லக்ஷ்மிரதன் வியாபாரத்தில் மட்டும் நிபுணர் அல்ல: கிரிக்கெட் ஆட்டத்திலும் திறமைமிக்கவர். பிலிப்ஸ் கிரிக்கெட் கோஷ்டி இவர் தலைமையில் பிரகாசிக்கிறது. கல்கத்தாவிலும் இவர் கீர்த்தி பரவ இப்போது வாய்ப்பு ஏற்பட்டது பற்றி அனைவரும் மகிழ்வர். இந்த வாரம் இவர் கல்கத்தா பயணமாகிறார்.

இவளது இந்த நிலைமையைப் பற்றிய நினைவு அவனுக்கு எங்கே எழப் போகிறது? மானம் – மரியாதை, சூடு - சொரணை உள்ளவனாக இருந்தால் உயிரை வைத்துக் கொண்டிருக்க மாட்டான். அதெல்லாம் இல்லாதவனை என்னவென்பது?" என்று சதாசுகர் ஆத்திரம் தீரப் பொரிந்தார்.

"முன்பெல்லாம். 'இவள் பெண் அல்ல; பெண் உருவத்தில் வந்த தெய்வம். தெய்வத்தைக் காட்டிலும் ஒரு படி மேல். இவளுடைய அன்பைப் போன்ற அன்பு இந்த உலகத்தில் வேறு யாரிடமும் கிடையாது. இவள் தியாகபுத்திக்கு இணையாக இவள் தியாக புத்தியைத்தான் சொல்ல வேண்டும். இவளுடைய இருதயம் நிர்மலமான ஸ்படிகத்துக்கு ஒப்பானது' என்றெல்லாம் சொல்லி வாய்ப் பந்தல் போட்டு வந்தார். ஆனால் இப்பொழுது அந்தக் காலம் மலை ஏறி விட்டது; அடியோடு அவருடைய அபிப்பிராயமும் மாறி விட்டது. 'இவள் ஒரு ஊர் சுற்றி; ஜாடுமாறி. குழந்தைப் பருவத்திலிருந்தே கொஞ்சம் கோணல் புத்திதான். அந்தக் காலத்திலேயே இவள் நடத்தை சற்றுச் சரியில்லை; மோசம்தான். இல்லாவிட்டால் தன்னுடன் இன்னொருவனையும் இழுத்துக் கொண்டு மூழ்குவாளா?' என்றெல்லாம் இப்பொழுது பேச ஆரம்பித்து விட்டார். அது மட்டும் அல்ல; இப்பொழுதெல்லாம் யாராவது இவளுடைய பேச்சை எடுத்தால் கூடக் கெடுதலாகத்தான் எடுத்துக் கொள்ளுகிறார். தம் கண்களால் இவளுடைய இந்த அவல நிலையைப் பார்த்தும் பார்க்காதவர் போல் போகிறார். இவளை வீட்டில் அழைத்துக் கொண்டு போய் வைத்துக் கொள்ள வேண்டும் என்று கூட எண்ணுவதில்லை, ஆள் அவ்வளவு தூரத்துக்கு மாறிவிட்டிருக்கிறார்!" என்றான் கடைக்காரன்.

சதாசுகர் நீண்ட பெருமூச்சு விட்டவாறே, "மனிதன் இவ்வளவு கீழே போய் விடுவான் என்று நான் கனவில் கூடக் கருதவில்லை" என்றார்.

"மனிதனா? அவன் ஒரு மனிதனா? நான் அவனை மனிதன் என்றே மதிக்கவில்லை. பெண்மேல் எவ்விதமான குற்றமும் இல்லை. குற்றம் முழுவதும் அந்தக் கொலைகாரப் பாவியினுடையதுதான். செய்வதையும் செய்துவிட்டு, இப்பொழுது பெரிய தர்மிஷ்டன் போல் வேஷம் வேறு போடுகிறான். அன்றைக்கு ஒரு நாள் அவனைக் கடைத் தெருவில் பார்த்தேன். எனக்கு ஆத்திரம் தாங்கவில்லை. கண்டபடி ஏசி விட்டேன். நான் கொடுத்த சூட்டில் அவன் தலை கவிழ்ந்து விட்டான்; முகம் சுண்டைக் காயாகி விட்டது. வாய் திறந்து வார்த்தை சொல்ல வழி யிருந்தால் தானே? பேய் அறைந்தவன் போல் நின்றான்" என்றான் கடைக்காரன். அவன் பேச்சிலே அத்தனை நேரம் தொனித்த மரியாதை மறைந்து ஏக வசனத்துக்குப்போய் நின்றுவிட்டது.

"எதையும் துணிச்சலுடன் சமாளிக்கக் கூடிய வகை அறியாதவன் இவளை வைஜநாத்திலிருந்து நிர்ப்பந்தப்படுத்தி அழைத்து வருவானேன்? இவள் அங்கேயே என்னுடன் இருந்திருப்பாள் அல்லவா? அங்கே எவ்விதமான சுகம் இல்லையென்றாலும் துக்கமில்லாமலாவது இருப்பாள் அல்லவா? நான் படித்துப் படித்துச் சொன்னதைக் கேளாமல் இப்படி அழைத்து வந்து இவள் மனத்தையும் புண்படுத்திப் பேதலிக்கச் செய்துவிட்டானே, பாவி!" என்ற சதாசுகர் துயரம் மீறி, விசித்து விசித்து அழலானார். (அடுத்த இதழில் முடியும்)

# கவர்ச்சிமிகும் பழம் செல்வங்கள்



வெள்ளியிலும் மற்ற உலோகங்களிலும்— மரத்திலும் துணியிலும் — கொம்பிலும் தந்தத்திலும் அழகிய கைத்தொழில் பொருள்களை உருவாக்கி வரும் சிறப்பு இந்தியாவுக்கு உண்டு. தஞ்சையின் மூன்று உலோகத் தட்டுகளும் பாத்திரங்களும், அழியாத ஒளியும் வண்ணமும் திகழும் நிர்மல் பொருள்களும், காகிதக் கூழ்ப் பொருள்களும், மரச் செதுக்கல்களும், அணிகலன்களும்—ஆகிய யாவும் இந்தியாவின் மங்காத கலை மரபின் வளர்ச்சியாகிக் காட்சியளிக்கின்றன.









**அகில இந்தியக் கைத்தொழில் போர்டு**

வணிக - தொழிலியல் அமைச்சகம்

இந்திய அரசாங்கம்

DA58/491

மார்ச்.. 7 உ முதல் சென்னை மற்றும் தென்னாடெங்கும்..

மொராக் & ஸ்ரீனிவாஸ் பிலிம்ஸ்..

# பாண்டித்தேவன்

டைரக்ஷன் - K. சுப்ரமண்யம், பி.ஏ., பி.எல்.,

சென்னை : பிரபாத் - சயானியில்

விரைவில் சென்னை கெயிட்டியில் எதிர்பாருங்கள்

Elegant

# திருச்சி உலகநாதன்

## 8. புதிய ஆபத்து!

சுகி

உலகநாதன் மேம்பாலத்தின் அடியே சரிவாகக் கல் பதித்த இடத்தில் வந்து அமர எண்ணினான். ஆனால் ஏற்கனவே அங்கே ஒரு தடியன் நின்று கொண்டிருந்தான். அவன் யாரென்று உலகநாதனுக்குத் தெரியாது.

உலகநாதன் வருவதைப் பார்த்த அத் தடியன், "யாரடா அவன்? பொடிப் பயல்! கொல்லுங்களடா, கொறுக்குங்கடா!" என்று குரல் கொடுத்தான்.

"அண்ணே! அவன் நம்ம ஆள்தான். வந்தால் வரட்டும்" என்று கூறினான் பக்கத்தில் நின்று கொண்டிருந்த மொச்சைக் கொட்டை.

"நம்ம ஆளா? இந்தமாதிரி நல்ல பயல்களை நம்பக் கூடாது. போலீஸ்காரர்கள் இவர்களைத் துப்புத் துலக்குவதற்கு அனுப்பியிருக்கலாம்!"

"அதுதான் நம்ம கட்சியிலே ஒருசிலர் இருக்கிறார்களே!"

அங்கே சிரிப்பு எழுந்து நின்றது. புலிக்குப் பயந்து சிங்கத்தின் வாயில் அகப்பட்டது போல் இருந்தது உலகநாதனுக்கு. அவர்கள் ஏதோ ரகசியமான தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பது நிச்சயமாயிற்று. தொழிற் சங்கத்துக் கூட்டத்தில் பறிகொடுத்த மணிபர்ஸ் அங்கே பிழிபட்டுக் கொண்டிருந்தது. வியர்வைக் கடல் கொட்டியது. தனக்குக் காலையில் டிபன் வாங்கித் தந்தவர்கள், அப்பால் கோலியாட அழைத்துப் போனவர்கள் திருடர் கூட்டத்துக்குக் கையாட்களா? அவனால் நம்ப முடியவில்லை. பேச்சாளி சொன்னது என்ன உண்மையாகப் போய் விட்டது? ஆனால், 'நான் திருட மாட்டேன்; உழைத்துப் பிழைப்பேன்.' இப்படியாக அவன் மனத்தில் எண்ணிக் கொண்டான்.

"என்ன கோபால் அண்ணே! ரொம்பப் பணம் இருக்குதே. இன்னும் இரண்டணா சேர்த்துக் கொடுக்கக்கூடாதா?" இரண்டு பயல்கள் கையை நீட்டினார்கள்.

"இந்தாங்க. இனி மேல் ஜங்ஷன் கூட்டத்துள்ளே போய்விடாதீங்க. சந்தேகம் வரும்."

இரண்டு சிறுவர்களும் கையிலே ஒரு ரூபாய்த் தாளையும் இரண்டணாவையும் கொண்டு வந்தார்கள். முரடன் வயலைத் தாண்டிப் போய்க் கொண்டிருந்த போது தடதடவென்று கூட்ஸ் வண்டி வேகமாக வந்தது. உலகநாதனின் உள்ளத்தில், 'வரும் அந்த வண்டி ஏறி அந்தக் கோபால் சாகவேண்டும்; அரை குறையாக உயிர் இருக்கும் போது போலீஸைக் கூப்பிட வேண்டும்' என்ற எண்ணம் வந்தது; ரயிலுக்கு அடிபடுகிற ஆளா அவன்? பெரிய கை என்பதை எங்கே கண்டான் உலகநாதன்?

குறுக்குப் பாதை வழியாகச் சங்கிலியாண்டபுரம் நோக்கி அவன் நடந்தான்.

வந்த சிறுவர்கள், உலகநாதன் அருகில் வந்து அமர்ந்தார்கள். அவர்களுக்குக் கையில் காசு கிடைத்தால் இரண்டு காரியம் செய்வார்கள்; ஒன்று கண்டதைத் தின்பது, சிகரெட்டு பீடி குடிப்பது. அல்லது பகலானால் கோலியாடுவது இரவு ஆனால் சினிமாவுக்குப் போவது. இவை தான் அவர்கள் செயல். மாலை மங்கிக் கொண்டிருந்ததால் சிற்றுண்டியை முடித்துக்கொண்டு சினிமாவுக்குக் கூப்பிட்டார்கள். உலகநாதன் மனசுக்குள் எப்படியும் அவர்களை விட்டு விலகிவிட வேண்டும் என்று உறுதி செய்து கொண்டான். அவர்களிடம் முரண்டினால் வம்பு வரும். எனவே சாமர்த்தியமாக நடப்பதென்று முடிவு செய்தான்.

"டேய், உலகநாதா! நாளைக்காலையிலே எனியைப் பலூப்பலூவாக ஒடிக்கணும். நம் கைகிறையக் காசு இருக்குது. வாடா, சினிமாவுக்குப் போகலாம். சைக்கிள் திருடன் என்ற படம் நடக்குதாம்!"

"சினிமாவிலேயும் திருட்டுத்தான் நடக்குது: நம்மை மிஞ்ச முடியுமா? ஏண்டா, போண்டா! நம்ம கோபால் அண்ணன் இன்னிக்கு நம்மை ஏமாத்திப் போட்டானே! பணம் எவ்வளவு இருக்கும்!"

"நிறையக் கத்தையாக இருந்தது. நமக்கு எண்ணத் தெரியுதா? படிக்கத் தெரியுதா? நம்மோடு உலகநாதன் இருந்தானா எவ்வளவு பணம் இருக்குது என்று சொல்லுவான். பார்த்தியா அக்கிரமத்தை! நாம் உதவி செய்தும், இந்த அண்ணன் நமக்கு ஒண்ணும் இரண்டும் கொடுக்கிறான். இனிமேல் நாம் இவங்களுக்குக் கையாளாக வரக் கூடாது. தனியாகவே 'பிஸினெஸ்' செய்யணும்."

உலகநாதனுக்கு இந்த வார்த்தைகள் சட்டி கொண்டு குத்துவதைப் போல் இருந்தன. தனியாக ஆரம்பிக்கவேண்டிய தொழிலா? திருட்டின் தீமையைப் பற்றித் தெரியாத கூட்டம். ஐயோ! கெட்ட புத்தி



உள்ளவர்கள் நல்ல புத்தி உள்ளவர்கள் எல்லாருமே தனியாகத் தொழில் செய்யவே ஆசைப்படுகிறார்கள். ஒருவரை ஏமாற்றுவதைப் பொறுக்க முடியவில்லை. ஒருவரையொருவர் நம்புவதில்லை.

"நீங்க இரண்டு பேரும் சினிமா பார்க்கப் போங்க. நான் வரலை."

"வராமல் இங்கே என்ன செய்யப் போகிறாய்?"

"படுத்திருப்பேன். இருட்டினதும் தென்காசி—பாசஞ்சர் நிற்கும் ஆறாம் பிளாட்பாரத்துக்குப் போவேன். ரயிலுக்குப் போய் ஏறி ஊருக்குப் போகணும்."

"இங்கே படுத்திருந்தா முதுகு டாரா கிழிஞ்சு போகும்டோய்! இருட்டினால் இங்கே வந்து போலீஸ்காரன் ஒரு நோட்டம் விடுவான்."

"பாலத்துக்கு அடியிலே என்ன இருக்குது, போலீஸ்காரன் வர?"

"இந்தப் பாலத்துக்கு உள்ள மவுசு எங்களைப்போல் பொறுக்கிகளுக்குத் தான் தெரியும். இவர்களைத் தேடிப் பிடிக்கப் போலீஸ்கார ஐயா வருவாரு. அகப்பட்டால் அடி விழும்; பணத்தை அவிழ்த்துக் கொடுத்தால் ஆளை விட்டு விடுவார்."

"அடபாவி, உலகமே!" என்று உலகநாதன் நொந்து கொண்டான். அவன் பள்ளிக்கூடத்தில் இருக்கும் பொழுது உலகத்தைப் பற்றி நல்லவிதமாக எண்ணிக் கொண்டிருந்தான். பாடம், சாப்பாடு, துணிமணி, கடைவீதி யெல்லாம் நல்ல முறையில் எல்லோருக்கும் கிடைக்கிறதாக எண்ணினான். இங்கே ஒரு பாதாள உலகம் அதே சமயம் தொழில் செய்து கொண்டிருப்பதை அவன் எண்ணவில்லை; அவனுக்குத் தெரியவில்லை. 'உடனேயே இந்தப் பாவிகள் கூட்டத்திலிருந்து தப்ப வேண்டும். அதுவும் அவர்கள் துளியும் சந்தேகங்

கொள்ளாமல் தப்ப வேண்டும்' என்று முடிவு செய்தான்.

அந்த இரண்டு பயல்களுக்குள் ஒருவன் நல்லவனாக இருந்தான்.

"டேய், பையன் புதுசு. அதனால் பிரன் கிறான். சினிமாவுக்கு அவன் வேண்டாம். உலகநாதா! இந்தா இரண்டணா! வைச்சுக்க. ஆனால் இங்கே மட்டும் தங்கி விடாதே. தங்கினால் போலீசு வந்து பிடிக்கும். நீ எதையாவது உளறி வைச்சால் எங்களுக்குக் கஷ்டம்."

அவர்கள் மனசுப்படி நடக்கவேண்டும். இல்லாவிட்டால் தொல்லை வரும். அதற்காக உலகநாதன் இரண்டணாவை அவர்களிடமிருந்து பெற்றுக் கொண்டான். இரண்டு பயல்களும் ஒருவர் தோளில் ஒருவர் கை போட்டு, பிரபல நடிகர்கள் பேசுகின்ற வசனத்தை வாயாடிக் கொண்டு நகர்ந்தார்கள். கைதேர்ந்த நடிகர்கள் கூட அவர்களைப்போல் அப்படி வீரவாசகம் பேச முடியாது. பணம் கையில் இருந்தால் மனத்துக்கு எவ்வளவு தெம்பு வருகிறதென்பதை உலகநாதன் உணர்ந்தான். ஆனால், அவன் கையில் இருந்த அந்த இரண்டணா என்ன இருந்தாலும் 'பிக்பாக்கெட்' அடிக்கப்பட்டதாயிற்றே! பிறர் சொத்தைப் பிடுங்கியதில் ஒரு பகுதி: அதை வைத்துக் கொண்டு இரவு ஒரு வேளை உண்ணலாம். அதற்கு அப்புறம் யார் பணம் கொடுப்பார்கள்?

"ஆண்டவனே! எனக்கு எத்தகைய கஷ்டம் வந்தாலும் வரட்டும், என்னுடைய சித்தியே வந்து என்னைப் பிடித்து உதைத்தாலும் உதைக்கட்டும், ஆனால் இவர்கள் கொடுக்கும் திருட்டுக் காசுக்கு நான் உணவு உண்ணக் கூடாது. இவர்களைப் போல் திருடும் வழியை இந்தக் காசு செய்து விடும். நான் யோக்கியமாக வாழ வேண்டும். நல்லவனாக வாழ வேண்டும்!"

உள்ளத்திலே இருந்த ஆத்திரம் தீர இரண்டணா நாணயத்தை ஓங்கி எறிந்தான். அது கணக்காகத் துள்ளிப் போய்த் தண்டவாளத்தில் தவளையைப் போல் உட்கார்ந்து கொண்டது. அடுத்த சில விநாடிகளில் ஒரு கூட்ஸ் வண்டி அதன் மேல் ஓடி மறைந்தது.

உலகநாதன் வயிறு வெடிக்கச் சிரித்தான். பெரிய காரியம் ஒன்றினைச் சாதித்து விட்டதாக எண்ணினான். தன்னுடைய வீரத்தையும், தீரத்தையும் தானே புகழ்ந்து கொண்டான்.

"என்ன சிரிக்கிறே?"

குரல் கேட்டுத் திரும்பினான். ஏணி நின்று கொண்டிருந்தான்.

"என்னதுடா கையிலே காசா?"

உலகநாதன் நகடு போல் இருந்ததைக் கொடுத்தான்.

"அட, பாவி! காசை எவனோ ரயில் சக்கரத்திலே போட்டிருக்கிறான் முட்டாள் பயல்!"

"நான்தான் போட்டேன், ஏணி!"

"தம்பி! நீ கோபத்தால் செய்தாலும் சந்தோஷத்தினால் செய்தாலும் காசை



மட்டும் இவ்வாறு வீணாக்காதே. இந்தக் காசு உனக்குப் பயன் இல்லாது போனாலும் வேறு யாருக்காவது பயன்படும். இன்று முதல் இதை நினைவில் வைத்துக் கொள். பணத்தை எறியாதே; நசுக்காதே. நீ தண்டவாளத்தில் இதை எதற்காகப் போட்டாய்?"

ஜேப்படி திருட்டைப்பற்றி, போண்டா, மொச்சைக் கொட்டை, எச்சில் பீடியோடும் சேர்ந்து செய்துள்ள திருட்டைப் பற்றிச் சொல்லப் பயம். ஏணிக்கு இது தெரியுமோ, தெரியாதோ, அங்கே உள்ளவர்கள் திருடுவதுபற்றி.

"சும்மா கிடந்தது. எனக்கு எரிச்சலாக இருந்தது. ரயில் சக்கரத்துக்குள்ளே எறிந்து விட்டேன்."

"எதற்காகப் பொய் சொல்லுகிறாய்? நீ என்னோடு வருகிறாயா? குரங்காட்டிப் பிழைக்கப் போகிறேன். நாளைக்கு மறு நாள் அந்தக் குரங்கை வலையை விட்டு எடுத்து வெளியே கொண்டு வருவேன்."

எந்தத் தொழிலும் தனியாக நடத்தினால் தான் லாபம் உண்டு என்ற சொற்கள் அவன் நினைவுக்கு வந்தன.

"உனக்குக் குரங்கு ஒன்றே போதுமே! நான் எதற்கு?"

"நீ நல்லபிள்ளையாக இருக்கிறாய். இங்கே உள்ள பொறுக்கிகள் உன்னைக் கெடுத்து விடுவார்கள். நீ ஊருக்குப் போக உனக்கு ரயிலைக் காட்டுகிறேன். அது மட்டும் இல்லை, முதல் வகுப்பில் தூங்குவதற்கு இடம் இருக்கிறது."

ரயிலில் முதல் வகுப்பு என்ற மெத்தையை அவன் பார்த்திருக்கிறான். ஏறிப் போனதில்லை. ஆசை யாரை விட்டது? தனக்கு வலிய உதவி செய்கிறவன் ஏணி; அவனை உதைத்துத் தள்ளக் கூடாது. ஏணியோடு புறப்பட்டான் உலகநாதன். ரயில்வே தண்டவாளங்கள் பல குறுக்கும்

நெடுக்குமாகக் கிடந்தன. அத்தனையும் கடந்து ஏழாவது பிளாட்பாரத்துக்கு அப்பால் வெறுமனே நிறுத்தி வைக்கும் பெட்டிகள் பல இருந்தன. ஒரு சில வண்டிகளில் சீட்டுக்கள் ஒட்டப்பட்டிருந்தன. ஒரு சில வண்டிகள் சீட்டு இல்லாமல் தனியாக நின்றன.

"இதோ, பார். இதிலே சில வண்டிகளைக் காலையிலேதான் இங்கேயிருந்து எடுத்துத் தொடரிலே சேர்ப்பார்கள். அப்போதுதான் இவை போகும். அதுவரையில் இதிலே படுத்துத் தூங்கலாம். சில வண்டிகள் ராவிலே போகும். இதிலே ஏறக்கூடாது. ஏறினாலும் 'ஷண்டிங்யார்த்'திலே விரைவாக இறங்கிப் போகணும். சமயா சமயத்திலே 'வாட்சு அண்டுவார்டு' சிப்பாய்கள் இங்கே யாராவது இருக்கிறார்களா என்று பார்ப்பார்கள். இங்கே வா. இதிலே யாரும் வரமாட்டாங்க. அப்படி வந்தாலும் டிக்கட் பரிசோதகர், எஞ்சின் டிரைவர், ஏதாவது ரயில் சிப்பந்திகள் தங்களுக்குத் தூங்க இடம் கிடைக்காமல் இந்தப் பெட்டிக்குள்ளே வருவாங்க. வந்தால் மின்னல் வேகத்திலே இறங்கி நீ ஓடிப் போய் விடு. நான் கூட இங்கேதான் சில சமயம் தூங்குவேன்" என்று யுக்தி சொன்னான் ஏணி.

அவன் யோசனைக்கு உலகநாதன் உடனே அடி பணிந்தான்.

"யாரு சார் பெஞ்சுக்கு அடியிலே? கொஞ்சம் எழுந்து வாங்க."

டிக்கெட் பரிசோதகரின் பூட்ஸ்கால் துழாவவே, நிம்மதியாக ஒண்டிக் கிடந்த உலகநாதன், நெளிந்து வெளியேவந்தான்.

டிக்கெட் பரிசோதகர் கையை ஓங்கினார். தலையை வளைத்துக் கொண்டான்.

"டிராயரில் எவ்வளவு பணம் வைத்திருக்கிறாய்?"

"ஒன்றுமில்லை, சார்!"

"பொய் சொல்லாதேடா! அதோ இருக்கிறாரே அந்தப் போலீஸ்காரரிடம் பிடித்துக் கொடுத்து விடுவேன்!" என்று பயமுறுத்தினார் பரிசோதகர். பிறகு, "மிஸ்டர் துரைவாள்! எந்த ஊருக்குப் போறீங்க?" என்று கேட்டார்.

"திருநெல்வேலிக்கு!"

வண்டியிலுள்ளவர்கள் 'குபீர்' என்று சிரித்தார்கள். அந்த வண்டி வடக்கே போகும் சென்னை எக்ஸ்பிரஸ்.

"டேய்! பூகோளப் பாடத்திலே கிழக்கே நோக்கிப் போனாலும் மேற்கே வரலாம். முதுகை வீங்க வைத்துக் கொள்ளாமல் கீழே இறங்கிப் போ. அடுத்தது வரப் போகிற விலேயம் டவுன் ஸ்டேஷன். நீயாக இறங்கவில்லையானால் பத்தடி தாண்டினால் காவிரிப்பாலம் வருது. அதிலே பிடிச்சுத் தள்ளிப் போடுவேன்."

"இது வடக்கே போகுதா?"

"சரிதாண்டா கழுதை......டிக்கெட்டு எடுத்தவங்க போல கிராஸ் கேள்வி கேட்கிறான். போய்க் கதவுகிட்டே நில்லு."






"அவனுக்கும் போய்ப் பஸ்ஸில் எழுந்து நின்று உட்கார இடம் கொடுத்தீரே! ஏன் ஐயா?"

"அவன் நாடகத்திலே பெண் வேஷம் போட்டுக் கொண்டிருந்தவன், ஐயா!"

●

"நீங்கள் எழுதிய முழு நாவலின் முடிவு சந்தோஷமான முடிவுதானா?"

"இல்லை துக்கமான முடிவுதான்!"

"எப்படி?"

"அது பத்திரிகை ஆபீசிலிருந்து திரும்பி வந்துவிட்டது!"

●

"வைத்தியப் புத்தகத்தைப் படித்தால் எல்லா வியாதிகளும் எனக்கே இருப்பது மாதிரி தோணுகிறது சார்!"

"தேவலையே! சட்டப் புத்தகத்தைப் படித்தால் நான் ஜெயிலேயே இருக்கிற மாதிரி தோன்றுகிறது, சார்!"

●

கான்ஸ்டேபிள்: நான் கையை நீட்டினால் உடனே என்ன செய்ய வேண்டும் என்று உமக்குத் தெரியாதோ?

சைக்கிள் பிரமுகர்: நான் இருபது வருஷங்களாகப் பள்ளிக்கூட வாத்தியாராக இருந்திருக்கிறேன்! எனக்கா தெரியாது?

●



மனைவி: டாக்டர் இனிமேல் என்னைப் பாடக் கூடாது என்று சொல்லி விட்டார்!

கணவன்: அடி, சக்கை! டாக்டருக்கு எங்கே இருந்து சங்கீத ஞானம் வந்தது?

●

"டேய்! என் பென்சிலை எங்கேடா வைத்து விட்டேன்?"

"ஹி...ஹி...ஹி...! உங்க காதிலேயே இருக்கு, சார்!"

"அட, அசடே! நீ சொல்லணுமா எனக்கு? அது தெரியாதா? எந்தக் காதிலே இருக்கு, அதைச் சொல்லு!"

●

"நீ பொய் சொன்னாலும் உன் மனசு உண்மையைச் சொல்லிவிடும்!"

"சொல்லி விடுமா! யாரிடம்?"

"உன்னிடம் தான்!"

"நல்ல காலம்! பிழைத்தேன். உங்களிடம்தான் சொல்லி விடுமோ என்று பயந்துவிட்டேன்!"

●

"நீராவி என்றால் என்ன?"

"தண்ணீர் சூடு தாங்காமல் வியர்த்து விட்டால் அதற்குப் பெயர்!"



— சாமா

கதவின் அருகில் வந்து குனிந்து பார்த்தான். மேற்கே மலைக்கோட்டையின் பிரும்மாண்டமான பாறை, உச்சிப்பிள்ளையார் கோவில் விளக்கு. பட்டைபட்டையான செம்மண் கோலங்கள் தெரிந்தன. வடக்கே போகும் வண்டியில் வந்தது தப்பு; கடவுளே தனக்கு அவ்வாறு உதவி செய்துள்ளார் என்று திட மனம் செய்து கொண்டு இறங்கச் சித்தமாக இருந்தான்.

வண்டி நின்றது. ஓங்கி ஒரு அறையைக் கொடுத்தார் டிக்கெட் பரிசோதகர். உலகநாதன் அலறி விட்டான். அவன் சித்தியைப் போல் மூன்றுமடங்கு பலம் கொண்ட அறையாக விழுந்தது. அழுது கொண்டே அவன் இறங்கியபோது, 'வெற்றிலை பாக்கு. பீடி' என்று கத்திக் கொண்டு வந்த குரல் 'லபக்'கென்று உலகநாதனின் கரத்தைப் பிடித்துக் கொண்டது.

அவன்தான் வெண்டர் தாண்டவராயன். பொன்னுரங்கத்தின் தாய்மாமன். ஜானகியின் சாட்சாத் சகோதரன். சற்றுமுன் அடித்த டிக்கட் பரிசோதகனே ஆயிரம் பங்கு உருவெடுத்து வந்ததுபோல் இருந்தது உலகநாதனுக்கு. இரும்புப் பிடியாக இருந்தது.

"ஏண்டா, திருட்டுப் பயலே! எவ்வளவு பணம் எடுத்துக் கொண்டு ஓடுறே? உனக்குப் போய் எங்க அக்கா சோறு போடறது. துணிமணி கொடுக்கிறது? வா...வா, பேசிக் கொள்கிறேன்" என்று கேட்டுக்கு வெளியே இழுத்துக்கொண்டு போனான் அவன். 'இந்தக் கிராதகன் என்ன செய்வானோ? எங்கே இழுத்துப் போகிறானோ?' என்று பயந்தவாறே அவன் பின்னால் நடந்தான் உலகநாதன்.

'சந்துகளைக் கடந்து சென்ற பழவெண்டர் தாண்டவராயன் ஒரு அறையைத் திறந்தான். அதற்குள்ளிருந்து பழுக்கின்ற மலை வாழைக்காயின் வாசனை; பழுத்து அழுகிய பழங்களின் நாற்றம் இரண்டும் மோதி வந்தன. மொத்தத்தில் இரண்டும் அவனுக்குச் சிரமமாக இருந்தன. தாண்டவராயன் அவனைக் கொண்டு வந்து உள்ளே நிறுத்தினான். ஒரு பெஞ்சு, ஓரடி அகலம் இருக்கும். மற்ற இடங்களில் என்னென்னவோ வாழை மட்டைகள், சிகரெட்டுப் பெட்டிகள், குப்பைகள் இரண்டு பெட்டிகள் மட்டும் ஆங்காங்கே இருந்தன.

"நீ இங்கே இரு. நான் அடுத்த வண்டியைப் பார்த்துவிட்டு வருகிறேன். உனக்குச் சாப்பாடு சாப்பிடப் பொட்டலம் வாங்கி வருகிறேன்" என்று உள்ளே தன்னைப் பூட்டி விட்டு வெளியே போய் விட்டான் தாண்டவராயன். அவன் போன பின்னர் அந்த இடத்தில் இருந்த துர்நாற்றம் போயிற்றே தவிர, வயிற்றைக் குமட்டும் காய் பழமாகும் வாசனையும் பழமான காய்கள் நாற்றமடிப்பதும் போகவில்லை. இனிமேல் தப்ப முடியாது. 'காலைப் பொழுது விடியும்போது, சித்தி வீட்டுக்கு அழைத்துப் போவானோ? அல்லது என்ன செய்வானோ?' என்ற கவலையில் அவன் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. கவலை அதிகமானால் தூக்கம் வந்து விடுமல்லவா?

உலகநாதன் தூங்கிக் கொண்டிருந்த போது, "டேய், எவண்டா உள்ளே தூங்கறது?" என்ற குரல் கேட்டது. முகம் இருட்டில் தெரியவில்லை. இனம் தெரியாமல் தூக்கக் கலக்கத்தில் "யாரு?" என்றான். தீக்குச்சி ஒன்றைக் கொளுத்திப் பார்த்தபோது வந்த ஆள் தெரியவில்லை. அவன் கிராப்பும் சட்டையும் முண்டாவில் இருந்த தாயத்தும் சிவப்புக் கயிறும் தெரிந்தன.

"எங்க மாமன் எங்கே?"

"யாருடா உங்க மாமன்?"

உலகநாதன் வெண்டர் தாண்டவராயனுக்கும் தனக்கும் உள்ள உறவைப் பற்றிச் சொன்னான்.

"ஏண்டா, பயலே! தாண்டவராயன் பெரிய கொள்ளைக்காரன் ஆயிற்றே. அவனுக்கு இப்படி ஒரு மருமகன் இருக்கான்னு தெரியாதே. அதுதான் அக்காக்காரி மத்தியானம் ஸ்டேஷனுக்கு வந்து தம்பியிடம், "எப்படியும் பிடிச்சுக் கொண்டா! 'காலில் விலங்கு போட்டு வீட்டோடு கட்டி வைக்கணும்' என்று சொன்னாளோ? அந்தப் பயல் நீதானா? ஏண்டா! கொலைகாரக் குடும்பத்துக்குள்ளே போய் மாட்டிக் கொண்டே?"

உலகநாதனின் மீது அனுதாபம் கொண்ட அவன், "இனிமேல் ஒருகணம் கூட இங்கே தங்காதே" என்று எச்சரிக்கை செய்து, "நானும் அவனைப்போல் பழ வியாபாரம் செய்கிறவன்தான். என்னிடமும் இன்னும் இரண்டு பேரிடமும் இந்த அறைக்குச் சாவி உண்டு. யார் திறந்து விட்டது என்று கேட்டால் அடையாளம் சொல்லாதே, ஓடிப் போய் விடு. தாண்டவராயன் கையில் அகப்படாதே. அகப்பட்டால் உன்னைக் கொன்று போட்டு விடுவான்" என்றான்.

உலகநாதன் தெற்கு முகமாக ஓட ஆரம்பித்தபோது, "டேய்! உன் மாமன் அந்தப் பக்கமாகத்தான் வருவான். வடக்கே ஓடடா" என்று உதவி செய்த ஆள் கூறவே, வடக்கே திரும்பினான்.

பழவெண்டர் தாண்டவராயனிடமிருந்து தப்பினால் போதும் என்று வடதிசை நோக்கி ரஸ்தாவில் ஓடினான் உலகநாதன். அவன் ஓடிக்கொண்டிருந்த இடம் காவிரி நோக்கிப் போகும் பாதை.

ஆற்றங்கரையை அடுத்த மண்டபங்கள் பகலில் பார்த்தாலே அருவருப்பின் பிறப்பிடங்களாக இருக்கும். மண் பாண்டங்கள், குரங்குக் குட்டிகள், நாய்கள், வௌவால்கள், பிச்சைக்காரர்கள் இருக்கும் இடங்கள் அவை.

அந்தப் பகுதிக்குள் உலகநாதன் போகும் போது இருட்டு; உறுமும் நாயும், உர்காட்டும் குரங்கும், குறட்டை விடும் பிச்சைக்காரர்கள் சத்தமுமாக இருந்தது. மேலே நடக்கப் பயமாக இருந்தது. பாதையைத் தாண்டும்போது 'வழ வழ' வென ஏதோ காலில் பட்டது. (தொடரும்)

# சிறைச்சாலை என்ன செய்யும்

பல நாட்களாகவே எனக்கு ஓர் ஆசை. துறவிக்கும் ஆசையா என்று யாரும் கேட்கலாம். காவி கட்டிக்கொண்டு பிச்சை கேட்கத் தொடங்கி விட்டால் ஆசைகள் அற்றுப் போகுமா? ஆசைகளை அவித்து விடவேண்டும் என்று எனக்கு ஆசை இருக்கிறது; அந்த ஆசையே என் காவிக்கு நியாயம் பேசும்.

என் ஆசை என்னவென்றால், என் அனுபவங்களைப் பத்திரிகைகளில் போடவேண்டும் என்பது தான். குடும்பத்தோடு வீட்டில்




அடைகிறவனுக்குப் புதிசுபுதிசாக என்ன தெரிந்து விடப் போகிறது? கால்நடையாகவும், ரயிலிலும் பல ஊர்கள் சுற்றியும் மலை, காடு, பாலைவனங்களில் இரவிலும் பகலிலும் வெய்யிலிலும் மழையிலும் அச்சமின்றித் திரிந்தும் பெறுகிற அனுபவம், இணைற்றுத் தவளையான கிருகஸ்தனுக்குக் கிடைக்குமா? எவ்வளவு விநோதமான மனிதர்களைத்தான் நான் பார்த்திருக்கிறேன்! ஏட்டுப் படிப்பால் கிடைக்கிற அறிவு அனுபவ ஞானத்துக்கு ஈடாகுமோ?

எனக்குத் தகப்பனார் இருந்தார்; அவரை லேகியச் சாமியார் என்று அழைப்பார்கள். எப்போதும் 'ஜோல்னா'ப்பையில் லேகியம் வைத்திருப்பார். பொழுது சாய்ந்தவுடனே லேகிய உருண்டையை வாயில் போட்டுக் கொள்வார். அந்தச் சமயம் அவர் வாயிலிருந்து உதிரும் சொற்களெல்லாம் முத்துக்களாக இருக்கும். கருக்கலில் எழுந்து, ஆற்றிலோ குளத்திலோ நீராடி, காவியைத் துவைத்து உலர்த்திக் கட்டி, உடல் முழுவதும் திருநீறு பூசிக் கொண்டு, திருவோடு ஏந்திக்கிளம்பி விடுவோம். "சங்கராசிவ-சங்கரா" என்ற ஒரே அடியைப் பல ராகங்களில் அவர் பாடுவார்; நானும் அதே அடியைப் பின்பாட்டாகப் பாடுவேன். அவருக்கு அந்தஒரு நாமம்தான் தெரியும்என்பதில்லை; நிறையப் படித்தவர்; தேவாரம், திருவாசகம், திருமந்திரம், திருப்புகழ், திருவருட்பா, சித்தர் பாடல்கள் எல்லாம் அவருக்குப் பாடம். ஆனால் அவைகளை ராத்திரி லேகியம் போட்ட பிறகு தான் பாடுவார்: பாட ஆரம்பித்தால் ஓய மாட்டார். ஆனால், பகல் முழுவதும் சங்கரநாமத்தைத்தான் மீண்டும் மீண்டும் பாடுவார். இரண்டு வயிற்றுக்குப் போதுமான அளவு அரிசியோ, காசோ திருவோட்டில் சேர்ந்து விட்டால் அதோடு பிச்சையை நிறுத்தி விடுவார்.

ஊருக்குப் புறம்பே உள்ள சத்திரம் சாவடியிலோ, மரத்தடியிலோ அடுப்புப் போட்டு, சமையல் செய்து இரண்டு கும்பிகளையும் நிறைத்துக் கொள்வோம். அட, நான் சொல்ல வந்த விஷயம் வேறு. என் தகப்பனார் எனக்குப் படிப்பு சொல்லித் தந்தார்: "தம்பி தமிழ்வாயம், நன்றாகப் படியடா; தமிழை முறையாகப் படித்தால் ஞானம் தானாக வருமடா!" என்று சொல்லித்

தலையில் குட்டுவார். என் மண்டையைப் பிளந்து படிப்பை அதற்குள் வைக்கப் பார்த்தாரோ என்னவோ, என் மொட்டைத்தலை சொட்டையானது தான் மிச்சம். எழுதவும் படிக்கவும் ஒருமாதிரியாக வந்தது. ஆனல் தேவாரம், திருவாசகம் எல்லாம் என் தந்தையாரோடு போய் விட்டன. திருவோடும் திருவுந்தியும் நிறைவதற்கு உதவுபடியாகச் சில பாடல்கள்தாம் இப்போது என்னிடம் எஞ்சியிருக்கின்றன.

என் தகப்பனர் சாகும்தறுவாயில் சொன்னதை மட்டும் லோகக்ஷேமம் கருதி இங்கே குறிப்பிட விரும்புகிறேன்; ''நமசிவாயம்! உன்னைப் படிப்பாளி ஆக்கி, ஞானவானுக்க வேணும் என்று பார்த்தேன்! ஆனல் நீ மண்டுவாகத்தான் இருக்கிறய். எனக்கு என்னவோ ஒரு நம்பிக்கை, உனக்கு ஞானம் சித்திக்கும் என்று. நீ அசல் களிமண். உன்னை உருட்டி வைக்க ஒரு குருநாதன் வருவான். நீ தேட வேண்டாம்; அவனுக வருவான். இன்னெரு சேதி. இன்றுவரை நான்தான் உன் அப்பன் என்று நினைத்திருக்கிறய். நீ யாருடைய பிள்ளையோ, எனக்குத் தெரியாது. சுவாமிமலையில் உன்னைக் கண்டெடுத்தேன்; அப்போது நீ ஐந்து வயதுப் பிள்ளையாக அழுது கொண்டிருந்தாய். உன்னை நான் பிடித்து வைத்துக் கொண்டேன். உன்னை யாராவது தேடி வருவார்கள் என்று இரண்டு நாள் கோயில் வாசலில் காத்திருந்தேன். யாரும் வரவில்லை. என்னேடு வைத்துக் கொண்டு உன்னை ஆளாக்கி விட்டேன். தம்பி! பிச்சை எடுப்பது கேவலம் இல்லை, ஆனல் திருடக் கூடாது. பெண் ஆசை மிகவும் தப்பு. சினிமா பார்ப்பது பெரிய தப்பு. உன் சிநேகிதப் பயல்கள் கையில் இரண்டு காசு சேர்ந்ததும் சினிமாவுக்கு ஓடுகிறதைப் பார்த்து, உனக்கும் ஆசையாக இருக்கிறது. இல்லையா? புராணப் படம் என்று நினைத்து ஏமாந்துகூட அந்தப் பக்கம் போய்விடாதே. புராணப் படம் பார்ப்பது பாவத்திலும் பாவம்'' என்று சொல்லி விட்டு வேலியச்சாமி ஒடுக்கம் ஆகிவிட்டது.

ஆக, முருகன்தான் என் அப்பன்; அவன்தான் என் தாய். அவன் திருவருள் பாலித்தபடி இந்த என் அனுபவத்தைக் கதைபோல் எழுதுகிறேன். முடிந்தவரையில் சாமியார்களின் பரிபாஷையை ஒதுக்கிவிட்டு இலக்கணமாகவே எழுதுகிறேன்; எழுத்துப் பிழையோ, பொருள் பிழையோ இருப்பின் பெரியவர்கள் பொறுத்தருள வேண்டும்.

❀

ஒரு நாள் சுவாமிமலைக் கோயில் வாசலில் பண்டாரக் கூட்டத்தோடு உட்கார்ந்திருந்தேன். அன்று கிருத்திகை. பக்தர்களும் யாத்திரிகர்களும் மலை ஏறி, சாமிநாத சாமிக்குப் பூசை செய்துவிட்டுத் திரும்புகாலில் சாமிகளுக்கு ஏதாவது போடுவார்கள். நான் இளமை என்றல் ஆண்டிக் கூட்டத்துக்குக் கேட்க வேண்டுமா? பல தினுசான ஆண்டிகள் வரிசையாக உட்கார்ந்திருந்தார்கள். எங்கள் கூட்டத்தாரைப் பத்தி நான் அதிகம் வருணிப்பதை விரும்பவில்லை. இந்தக் காலத்தில் சாமியார்கள் என்றலே ஒரு இளப்பமாக இருக்கிறது; வெறும் பிச்சைக்காரப் பயல்கள் என்று இழிவுபடுத்துகிருர்கள். வயிற்றையே வாழ்க்கையாகக் கொண்டவர்கள் அப்படித் தான் நினைப்பார்கள். 'வயிற்றுக்கு மேலே நெஞ்சிலும் தலையிலும் தான் சாமியார்களாகிய நம் வாழ்க்கை' என்று என் வளர்ப்புத்தந்தையான வேலியச் சாமியார் அடிக்கடி சொல்லுவார். எங்கள் கூட்டத்தாருக்குத் தலைமை ஸ்தானம் உண்டு, கட்டுப்பாடு உண்டு, ஒரு நெறி உண்டு என்பதை மட்டும் சொல்லி விட்டு நான் சொல்ல வந்த கதையைத் தொடருகிறேன்.

எனக்குப் பக்கத்தில் ஒரு சாமி குந்தியிருந்தார். நான் பரம்பரை ஆண்டியானதால் இந்த வட்டாரத்தில் பெரும்பாலான சாமிகளை எனக்குத் தெரியும். ஆனல் இந்தச் சாமி புதிதாக இருந்தது. பாலியம்தான்; முப்பது வயது இருக்கும்; தாடியும் சடையுமாக இருந்தது; குளிப்பதே இல்லை என்று தெரிந்தது. குளிக்காத சாமிகள் எத்தனையோ பார்த்திருக்கிறேன்; இதுவும் ஒன்று. இந்தச் சாமி துணியும் விரிக்கவில்லை; ஓடும் குலுக்கவில்லை; 'அம்மா, தாயே' என்று குரல்கூடக் கொடுக்கவில்லை. குந்தியிருந்தது என்று சொன்னேன்? கொஞ்ச நேரம்தான்; பிறகு யாரையும் ஏறிட்டுப் பாராமல் காலை நீட்டிக் கண்களை மூடிப் படுத்து விட்டது. நெற்றியில் திருநீறுகூட இல்லை. ஆனல், இந்த விஷயங்களெல்லாம் அவரிடம் என் கவனத்தை இழுக்கவில்லை. பக்தகோடிகளும் யாத்திரீகர்களும் 'மெனக்கட்டு' அந்தச் சாமிக்கு எதிரில் காசு போட்டுவிட்டுப் போவதைப் பார்த்துத்தான் எனக்குப் பொறுமையாக இருந்தது. என் திருவோட்டில் அரையணுக் காசுக்கு மேல் இல்லை; ஆனல் அந்தச் சாமிக்கு முன்னல் ஓரணு, இரண்டணு நாணயங்களோடு ஒரு வெள்ளி எட்டணுவும் பளபளத்தால் எனக்கு எரிச்சல் உண்டாகாதா? பிச்சை போடுகிற பக்தர்கள் எல்லோருக்கும் சமமாகப் பிரித்துப் போட்டால் என்ன ? இவ்வளவுக்கும் அந்தச் சாமி அப்படி ஒன்றும் சோனியாகவும் இல்லை; நல்ல குண்டுக்கட்டை.

''என்ன பரதேசி! மூன்றவது கண்ணைத் திறந்து பார்க்கிறய்!''

குண்டுச்சாமி என்னைத்தான் அப்படிக் கேலி செய்கிறது என்று தெரிந்ததும் எனக்குக் கோபம் வந்துவிட்டது. ''ஏது, சில்லறை அதிகம் சேர்ந்ததும் சாமி முதலாளி ஆகி விட்டதாகத் தெரிகிறது!'' என்றேன்.

''அதற்குள்ளே சாமிக்குக் கோபம் வந்து விட்டதே? இன்றைக்குத்தான் ஒருத்தரை யொருத்தர் பார்க்கிறேம்; பார்த்தவுடன் சண்டை போட வேண்டுமா ?''

''நீங்கள் மட்டும் என்னைப் பரதேசி என்று சொல்லலாமா ?''

''நிசம் சொன்னல் கேலியாகி விட்டதா அது? சரி, அது போகட்டும், இன்றையி லிருந்து நீயும் நானும் கூட்டு. எது கிடைத்தாலும் இருவருக்கும் சம பங்கு. என்ன சொல்கிறய் ?''

அந்தச் சாமிக்கு முன்னல் சேர்ந்திருந்த சில்லறையைப் பார்த்த எனக்கு அந்தக் கூட்டு பிடிக்கத்தான் செய்தது. என் திருவோட்டில் சேர்ந்தது, எட்டணு சொச்சம் தான்; அதற்கு எதிரில் இரண்டு ரூபாய்க்குக்

குறையாது: அந்தக் கூட்டிலும் இன்றைக்கு லாபம்தானே? நாளைச்செதி நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாமே?

''ஆனால் நான் சொல்கிறபடிதான் செலவு செய்ய வேண்டும், நல்ல செல்வாக இருக்க வேண்டும்'' என்றது குண்டுச்சாமி.

''நாம் என்ன அப்படிக் கெட்ட செலவு செய்துவிடப் போகிறோம்? என்பெயர் நமசிவாயம், உங்கள் பெயர் என்ன சாமி?''

''என் பெயரா? பரமானந்த பரவிவேக பரப்பிரம்ம சொரூபானந்த பொன்னம்பல சுவாமிகள்.''

''இவ்வளவு நீளப் பெயர் சொல்லி நான் அழைப்பதற்குள் நீங்கள் அரை மைல் நடந்து விடுவீர்கள். சுருக்கமாகப் பொன்னம்பல சாமி என்று அழைக்கிறேன்.''

''என்ன வேண்டுமானாலும் சொல்லு. சரி, இப்போது கும்பி எரிகிறது. உன்னிடம் இருக்கிற சில்லறையை என்னிடம் கொடு'' என்று வாங்கிக் கொண்டவர், தம்மிடம் சேர்ந்த பணத்தோடு என்னுடையதையும் சேர்த்துக் கொண்டார். பிறகு, என் கையில் ஆறரை அணா சில்லறையைக் கொடுத்து, ''நாலணாவுக்கு நீ இரண்டு தயிர் சாதம் வாங்கிச் சாப்பிடு. எனக்கு இரண்டணாவுக்கு வாழைப்பழம் வாங்கிக் கொண்டு வா'' என்றார்.

என் சில்லறையையும் எடுத்துக் கொண்டு பொன்னம்பலம் நழுவி விடுவாரோ என்று பயந்துகொண்டே, பக்கத்தில் இருந்த கடையில் வாழைப்பழம் வாங்கினேன்; அவர் கண்ணுக்குத் தென்படும்படியாகப் பக்கத்தில் இருந்த ஹோட்டலில் தயிர்சாதம் வாங்கிச் சாப்பிடத் தொடங்கினேன்.

திடீரென்று பொன்னம்பலம் எழுந்தார். ஒருவேளை ஓடப் போகிறாரோ என்று நான் கவனித்தபடி இருந்தேன். ஆனால் அவர் பக்கத்தில் ஒரு நொண்டி விரித்திருந்த துணியில் சில்லறை போடுவதைப் பார்த்ததும் எனக்குப் 'பகீர்' என்றது. 'சாமி, சாமி' என்று கத்திக் கொண்டே கையிலிருந்த சோற்றுப் பொட்டணத்தைத் தூக்கிக்கொண்டு அவரை நெருங்குவதற்குள் சில்லறையை யெல்லாம் நொண்டி முடம் குருடுகளுக்குத் தருமம் செய்துவிட்டுக் கைகளை உதறிக் கொண்டே என் பக்கம் திரும்பினார் அவர்.

''என்ன சாமி, ஆண்டி ஆண்டிக்குத் தருமம் செய்கிறதா?'' என்றேன் ஆத்திரமாய். என் சில்லறையும் அல்லவா போய்விட்டது!

'' என்ன செய்தேன்? பாவம், இந்த நொண்டி முடங்கள் சோற்றுக்குப் பறக்கிறார்கள். அவர்களுக்குப் போட்டேன். நல்ல செலவுதானே இது?'' என்றவாறு என் கையிலிருந்த பழங்களை எடுத்து உரித்துச் சாப்பிட ஆரம்பித்தார் அவர்.

''நல்ல செலவுதான்; நல்ல கூட்டுதான். இரண்டு நாட்கள் நிம்மதியாக இருக்கலாம் என்று ஆசைப்பட்டேன். என் வயிற்றில் மண்ணைப் போட்டாயே, சாமி! பெரிய தரும துரை போல என்னுடைய காசையும் சேர்த்து வாரிக் கொடுத்து விட்டாயே!''

மற்ற சாமிகள் எல்லோரும் என்னைப் பார்த்துச் சிரிக்க ஆரம்பித்ததால் நான் அவரோடு சண்டையை வளர்க்க விரும்பவில்லை. தான மாகி விட்ட பணம் திரும்பப் போவதில்லை. பொன்னம்பலத்திடம் வசூலிக்கவும் வழி இல்லை. வார்த்தையை அடக்கிக் கொண்டு மறு படியும் என் கடையை விரித்தேன்.

''நமசிவாயம்! நீ போகிறபோது என்னை எழுப்பு. நான் அங்கே தூங்குகிறேன்'' என்று கூறி விட்டுப் பொன்னம்பலம் ஒரு மூலையில் முடங்கினார். நான் பதில் பேசவில்லை!

✿

பொன்னம்பலத்தின் மீது எனக்குக் கோபம்தான். ஆனால் மாலைக்குள் நான் விரித்த துணியில் எதிர்பார்த்ததைவிட அதிகமாய்த் 'துட்டு' சேரவே என் கோபம் குறைந்து விட்டது. 'சாமியார்கள் பல ரகம். பைத்தியம் மாதிரிகூட நடிப்பார்கள்' என்று என் தந்தையார் வேலியச் சாமியார் சொன்னது நினைவுக்கு வந்தது. 'பொன்னம்பலம் ஒரு ரகம். அவரோடு பழகும்போது நம் கைச்சில்லறையை, ஜாக்கிரதையாக வைத்துக்கொண்டால் நமக்கு நஷ்டம் இல்லை' என்று எண்ணி, சேர்ந்த சில்லறையைத் துணியில் கெட்டியாக முடிந்துகொண்டு, அவரை



எழுப்பினேன். இருவரும் குடத்தையை நோக்கி நடக்கலானோம். அப்போது இருட்டத் தொடங்கி விட்டது.

''பொன்னம்பலசாமி! நம் வயிற்றை நிறைப்பதே பெரிய பாடாக இருக்கிறது. நம் பிழைப்பு பிச்சைக்காரப் பிழைப்பு. இதிலே நீங்கள் பிச்சை போட ஆரம்பித்து விட்டீர் களே!'' என்றேன் வருத்தமாய்.

''நமக்கு எதற்குக் காசு? மத்தியானப் பாடு தீர்ந்து விட்டது. மிச்சம் இருப்பதால் அச்சம் தான்'' என்றார் அவர்.

''பின்னே குட்டிக்காகவா மிச்சம் பிடிக்கப் போகிறோம்? வயிற்றுக்கு வேண்டியதைக் கூடவா சேர்க்கக் கூடாது?''

''நம் வயிற்றை நிரப்புகிற வேலையைவிடப் பெரிய வேலை முருகனுக்கு இருக்கிறதா?''

பொன்னம்பலம் பேசிக் கொண்டே வந்தார்; நிறையப் படித்தவராகத் தெரிந்தது. வேலி யச் சாமியாரை விடத் தெளிவாகப் பேசினார். கேட்கக் கேட்க எனக்கே ஆனந்தமாக இருந் தது. இருவரும் சோலையப்பன்தெரு வழியாகச்

செல்லும்போது பொன்னம்பலத்தின் பேச்சில் ஒரு குதூகலம் நிறைந்தது.

"நமசிவாயம்! பூர்வாசிரமத்தில் நான் பிறந்து வளர்ந்த தெரு இதுதான்."

"அப்படியா? உங்கள் சொந்தம் சுற்றம் எல்லாம் இங்கே இருக்குமே? பஞ்சத்துக்கு ஆண்டிதானா நீங்கள்? வீட்டுக்குத் திரும்பப் போகிறீர்களா?" என்றேன் கேலியாக.

"நான் பஞ்சத்துக்கு ஆண்டி இல்லே, நமசிவாயம். இந்த நாலு வீடுகளும் எனக்குச் சொந்தம்" என்று அவர் சுட்டிக் காட்டிய பெரிய மாடி வீடுகளைப் பார்த்தபோது என்னால் சிரிப்பை அடக்க முடியவில்லை.

"என்ன சாமி! ஆண்டி மடம் கட்டுவது என்பார்கள். நீங்களோ கட்டின மாளிகையே உங்களுடையது என்று சொந்தம் கொண்டாடுகிறீர்களே?" என்றேன்.

"நிசமாகத்தான் சொல்லுகிறேன். இந்த வீடுகளைத் தவிர, நஞ்சையும் புஞ்சையுமாக நாலுவேலி நிலம், ஒரு லட்சத்துக்கு ரொக்கம் என் பங்குக்கு இருக்கின்றன. எனக்கு ஒரு தம்பி இருக்கிறான். என்னைவிட இரண்டு வயது இளையவன். குழந்தையாயிருந்தபோது என் தாயார் காலமாகி விட்டாள். சிறு வயதிலிருந்தே எனக்கு வைராக்கியம் ஏற்பட்டு விட்டது. கல்லூரியில் பி. ஏ. வகுப்பில் கடைசி வருஷம் படிக்கும்போது, என் தகப்பனார் எனக்கு மணம் முடிக்கும் முயற்சியைச் செய்ய ஆரம்பித்தார். நான் தட்டிக் கழித்துப் பார்த்தேன். என்னால் தம்பியின் கலியாணமும் தடைப்படுகிறது என்று அப்பா வருத்தப் பட்டுக் கொண்டிருந்தார். கடைசியில் ஒரு நாள் நான் விரும்பப்படா விட்டாலும் கலியாணம் செய்துகொண்டே தீரவேண்டும் என்று கண்டிப்பாகச் சொன்னார். அன்று இரவு, நான் சன்யாசம் செய்து கொள்ளப் போவதாகவும், சொத்தில் பங்கு ஏதும் வேண்டாம் என்றும் எழுதி வைத்துவிட்டு வீட்டை விட்டுக் கிளம்பி விட்டேன்."

"இவ்வளவு சொத்தையும் விட்டு விட்டுச் சாமியாராகப் பைத்தியமா உங்களுக்கு? இல்லே, கதை அளக்கிறீர்களா?"

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. பொன்னம்பலம் அவ்வளவு தியாகம் செய்தவரா? நாலரையணா போனதற்காக நாலரை மணி நேரம் கவலைப்படுகிற எனக்கு எப்படி இருக்கும்?

"உங்களை யாரும் தேடவில்லையா?"

"தேடினார்கள். நான் அவர்களிடம் அகப்படுவதற்காகவா துறவை ஏற்றேன்?"

"உங்கள் அப்பா, தம்பி எல்லோரும் இருக்கிறார்களா?"

"அப்பா சிவபதவி அடைந்து விட்டார். தம்பி குழந்தை குட்டிகளோடு இருக்கிறான்."

"நீங்கள் இப்படிப் பிக்ஷாண்டவராக இருப்பது அவர்களுக்குத் தெரியுமா?"

"தெரியாது."

பிறகு நான் எவ்வளவோ பேசியும் அவர் மௌனமாகி விட்டார்.

❁

குடந்தை காவிரிக்கரை சக்கரப் படித்துறையில் ஒரு மண்டபம் இருக்கிறது. இரவை அங்கே கழிப்பதென்று முடிவு செய்தோம். பொன்னம்பலம் எனக்கு ஒரு பெரிய மகானாகவே தோற்றினார். இத்தனை வீடுகள், இவ்வளவு நிலம்; இவ்வளவு பணத்தையும் விட்டு விடுவதென்றால், அது சின்ன விஷயமா? அவரோடு இருப்பதே எனக்கு மிகவும் பெருமையாக இருந்தது.

மண்டபத்தில் சன்மார்க்க சங்கம் இருக்கிறது. அங்கே ஒரு சாமி இருக்கிறது. அதன் பெயர் மாமுண்டிச் சாமி. ஒவ்வொரு சாமிக்கும் ஒரு காரணப் பெயர் உண்டு. அந்தப் பெயர் வரலாற்றை விவரித்தாலே பெரிய புராணமாக விரியும். ஆகையால் நான் அதை விவரிக்கப் போவதில்லை. மாமுண்டி என்னைப் போல் பிச்சைக்காரச் சாமி இல்லை. படித்த சாமி, மகான்களைக் குருவாகப் பெற்று அநுபூதி பெற்ற பாக்கியசாலி. பொன்னம்பலத்துக்குச் சமமாக அவரால்தான் பேச முடியும். தவிர நான் ஒரு பெரிய மகானை அழைத்து வந்திருக்கிறேன் என்று மாமுண்டியிடம் காட்ட வேண்டும் என்கிற ஆசை எனக்கு. ஆகையால், அவரை மண்டபத்துக்கு அழைத்துக் கொண்டு வந்தேன்.

"மாமுண்டிச்சாமி! இந்தச் சாமிக்குப் பூர்வாசிரமம் இந்த ஊர்தானாம்" என்று பொன்னம்பலத்தின் வரலாற்றைப் பெருமையாகச் சொன்னேன்.

மாமுண்டியிடம் ஒரு பழக்கம். எதையும் அதிசயமாகப் பாராட்டமாட்டார். "சிவபோகத்துக்கு ஈடாகுமோ பவபோகம்?" என்றார் இலேசாகச் சிரித்தபடியே.

"நமக்கு ஒரு திண்ணை இருந்தால் போதுமே; இத்தனை வீடு..."

"நமசிவாயம், மூடு வாயை!" என்று பொன்னம்பலம் அதட்டவே, நான் வாயை மூடி விட்டேன்.

பிறகு அவர்கள் இருவரும் சுவாரசியமாகப் பேசுவதை நான் மெய்மறந்து கேட்டுக்கொண்டிருந்தேன். என்னைப் போல ஆண்டிகள் சேரும் இடத்தில் வெறும் அக்கப்போர்தான் அதிகம் இருக்கும். அவர்கள் இருவரும் பெரியவர்கள். பேசுவதற்கு விஷயமா இல்லை? ஏதேதோ பேசிக்கொண்டே துறவின் பெருமையைப் பற்றிப் பேசத் தொடங்கினார்கள்.

"நம்முடைய பரம்பரை எவ்வளவு மகத்தானது! சர்வலோக நாயகனான சங்கரன் ஓர் ஆண்டி, ஆண்டி பெற்றபிள்ளை முருகன் ஓர் ஆண்டி. தாயுமானவர்; பட்டினத்தடிகள், பத்திரகிரியார், ராமலிங்கஸ்வாமிகள், ராமகிருஷ்ணர், விவேகானந்தர்..." என்றார் மாமுண்டி.

"விட்டால்தானே வீடு?" என்று கூறினார் பொன்னம்பலம்

"விடுவது அவ்வளவு எளிதா? நாம் விட்டாலும் உலகம் நம்மை விடுவதில்லை. காட்டுத் தனிமையில் கூட நம்மை மாயை கவிழ்த்து விடுகிறது. மாயா விலாசம் கொடுமையால் மட்டும் நம்மை ஏய்க்க வேண்டும் என்பதில்லை. அன்பின் பெயராலும் அது நம்மை ஏய்த்து விடும்."

பிறகு கொஞ்ச நேரத்துக்குமேல், என்னால் விட முடியாத தூக்கம் என்னைச் சூழ்ந்தது.

மறுநாள் காலையில் நான் விழிக்கும்போது, கருக்கிருட்டுத்தான். அந்த நேரத்தில் பொன்னம்பலம் பத்மாசனமிட்டு நிஷ்டையில் இருந்

---

தார். அவர்தான் குளிக்காதவராயிற்றே; நான் காவிரியில் குளியலை முடித்து, காவியை உலர்த்தி, திருவோட்டைக் கழுவிக் கொண்டு, மண்டபத்துக்கு வந்த போது, அவர் உற்சாகமாக என்னோடு கிளம்பினார். கோயில்களில் சுற்றி விட்டுக் கடைத்தெருவை வந்தடைந்தோம்.

கடைத்தெரு கறுகறுப்பாயிருந்தது. 'சாம்ப சதாசிவ, சாம்ப-சதாசிவ, சாம்ப சிவோமரா' என்று நான் பாடி, திருவோட்டைக் குலுக்கிக் கொண்டே சென்றேன். பொன்னம்பலம் பின் பாட்டு பாடிக்கொண்டே உடன் வந்தார். இருவரும் ஒரு வெள்ளி நகைக்கடை வாசலில் நின்றோம். வழக்கமாய்ப் பிச்சை கிடைக்கும் இடம் அது. எதிர் எதிராக நின்று நாங்கள் பாடத் தொடங்கினோம்.

திடீரென்று பொன்னம்பலத்தின் குரல் தடைப்படவே நான் அவரைக் கவனித்தேன். அவர் கடை மேஜைமீது கிடந்த வெள்ளி நகை ஒன்றை வெகு லாகவமாக எடுத்துத் தன் ஒற்றைத் துணிக்குள் மூடிக் கொண்டு, 'விடு விடு' என்று நடப்பதைக் கண்டதும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. சாம்பசதாசிவத்தின் குரல் தடைப்பட்டு, 'திருடன், திருடன்' என்று கத்திக்கொண்டே பொன்னம்பலத்தைத் துரத்தினேன். கடைக்காரரும், தெருவில் இருந்தவர்களும் எனக்குப் பின்னால் வந்தார்கள். திமிறி ஓட முயன்ற பொன்னம்பலத்தை எல்லோருமாகச் சேர்ந்து கட்டிப் பிடித்தோம். காலடியில் அவர் நழுவ விட்ட நகையைக் கடைக்காரர் எடுத்துக் கொண்டு விட்டார்.

பிறகு என்ன? தலைக்குத் தலை திருட்டுச் சாமியாரைப்புடைத்தார்கள். என் ஆத்திரம் எனக்கு. 'பிச்சை வாங்கிப் பிழைக்கலாம்; திருடலாவது! பெரிய மகான் போலப் பேசி என்னையும் அல்லவா ஏமாற்றி விட்டான்!' அவருடைய தாடியையும் சடையையும் பிடித்திழுத்துக் குலுக்கி நாலும் நாலு அறைகள் விட்டேன்.

''உன்னைப்போல் திருட்டுப்பயல்கள் இந்தவேஷம் போடுவதால்தான் சாமியார் என்றாலே எல்லோரும் பயப்படுகிறார்கள்'' என்று கத்தினேன்.

''உன்னைப்போல் நல்லவர்களும் இருப்பதால்தான் சாமியார்களுக்கு இன்னும் கொஞ்சம் மதிப்பு இருக்கிறது'' என்றார் கடைக்காரர்; அவர் சிவபக்தர். கூட்டத்தில் எல்லோரும் என்னைப் புகழவே, எனக்குப் பெருமிதமாக இருந்தது.

அதற்குள் அங்கே வந்து சேர்ந்த போலீஸ்காரர்கள் தங்கள் பங்குக்குப் பொன்னம்பலத்தின் முதுகைப் பதம் பார்த்தனர்.

இவ்வளவுக்கும் அவர் கலங்க வேண்டுமே, ஒரு சொட்டுக் கண்ணீர் விட வேண்டுமே! நல்ல நெஞ்சழுத்தம்!

''சும்மா அடிக்காதே, சாமி, பரமசிவம் அறியச் சொல்கிறேன். நான் ஒன்றும் திருடவில்லை!'' என்று சொன்னபோது எனக்கே ஆத்திரத்தை அடக்க முடியவில்லை; போலீஸ்காரர்களுக்கு எப்படி இருக்கும்?

''பழைய கேடிபோல் இருக்கிறது'' என்றுஅவர்கள் இடுப்பு பெல்டை எடுத்து விளாசினார்கள். எவ்வளவு அடிதான் தாங்க முடியும்? கீழே வீழ்ந்த பொன்னம்பலத்தை, வைக்கோல் போரை இழுப்பதுபோல் பரபரவென்று அவர்கள் இழுத்துச் சென்றார்கள்.

''திருட்டுப் பயலுக்கு நன்றாக வேண்டியது தான். நேற்று முழுவதும் பெரிய மகான் போலப் பேசினான், சாமி! கொழுப்பைப் பாருங்கள். பரமசிவத்தின் மேலே ஆணை வேறு வைக்கிறான்!'' என்றேன் எரிச்சலாக.

கடைக்காரருக்கு என் மேல் மிகவும் சந்தோஷம்; ஒரு முழு ரூபாய் இனாமாய்க் கொடுத்தார்.

## இவரேதான்!












நிம்மதியாகச் சாப்பிட்டாலும் என் மனசு குளிரவில்லை. 'பெரியவர் போலப் பேசி ஒரு திருடன் உன்னை ஏமாற்றி விட்டானே! பெரிய பண்ணைக்காரன் என்று வேறு சொல்லிக் கொண்டான் திருட்டுக் கழுதை; அதுவும் வெறும் கயிறுதானோ?' என்பதை விசாரித்து அறிய வேண்டும் என்று எண்ணினேன். அந்தத் தெருவுக்குச் சென்று, பொன்னம்பலம் காட்டிய வீடுகளுக்கு அக்கம்பக்கத்தில் விசாரித்தபோது. அப்படி ஒருவர் துறவியாகப் போனது உண்மை என்று தெரிந்தது. போகிறது. அதுவும் பொய்க்காமல் இருந்ததே என்று நினைத்தவனாய், சன்மார்க்க சங்கத்தை நோக்கி நடந்தேன். மாமுண்டிச் சாமியிடம் சேதியைச் சொன்னால்தான் மனம் ஆறும் என்று தோன்றியது.

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு அவர் வழக்கப்படி சிரித்தார்: "அந்த வெள்ளி நகைஎன்னவிலே இருக்கும்?" என்று கேட்டார்.

"முப்பது ரூபாய் என்றார்கள்."

"அத்தனை சொத்துக்களையும் விட்டவர், இன்றைக்கு வீடு திரும்பினாலும் அவ்வளவும் அவருக்குக் கிடைக்கும். அவர் ஏனப்பா திருட வேண்டும்?"

"என்ன சாமி, நான் பொய்யா சொல்கிறேன்? என் கண்ணாலே பார்த்தேன். திருடினதும் இல்லாமல் பரமசிவத்தின் பேரில் ஆணை வைக்கிறான். இத்தமாதிரி செய்தால் சாமியார்களை ஏன் வெறுக்க மாட்டார்கள்?"

"நீ சொல்கிறது உண்மைதான். திருடர்கள் சாமியார் வேஷம் போடுவதால்தான் ஆண்டியை வெறுக்கிறார்கள். ஆனால் உன் கதை, சாமியார் திருடன் வேஷம் போட்ட கதை. நேற்று ராத்திரி சொன்னாரே, கொழுப்பை ஒழிக்க வேண்டும் என்று. அதற்குத்தான் இந்தவழியைப் பிடித்திருக்கிறார். உடல்செய்த வினையும் தீரும்; சிறையில் இருப்பதால் நிம்மதியாகத் தவமும் செய்யலாம் என்று அவர் நினைத்தார் போலிருக்கிறது."

"பரமசிவத்தின்மேல் பொய்ச் சத்தியம் செய்தாரே, அது என்ன நியாயம் சாமி?"

"நன்றே செய்வேன், பிழை செய்வேன், நானோஇதற்குநாயகமே?" என்றார் மாமுண்டி.

அவர் ரொம்ப நேரம் விளக்கியபிறகுதான் எனக்குப் பொன்னம்பலம் திருடிய ரகசியம் புரிந்தது. என்னைச் சாட்சியாக வைத்துத் திருடி, அவர் சிறை சென்று தவம் செய்ய வழி செய்து கொண்டார் என்கிற உண்மை என் களிமண் மண்டையில் இலேசில் ஏறவில்லை; ஏறியதும் எனக்கு மிகவும் விசனமாக இருந்தது.

"அப்படியானால் அவர்கள் வீட்டுக்குத் தகவல் தரட்டுமா? பாவம், என்ன அடி அடித்தார்கள்! நான்கூடத் தாடியைப் பிடித்துக் குலுக்கி அடித்தேன் சாமி! இவ்வளவு பெரிய பணக்காரருக்கு இந்த அவஸ்தை ஏன்? விஷயம் தெரிந்தால் அவர் தம்பி எவ்வளவானாலும் செலவு செய்து மீட்டு விடுவார்."

"அடப்பாவி, கெடுத்துவிடாதே!" என்று குறுக்கிட்டார் மாமுண்டி. "விடுதலை பெறுவதற்காகத்தான் அவர் சிறைப்பட்டார்; அவரை மறுபடியும் உலகச் சிறைக்கு இழுத்து விடாதே. நீ சும்மா இருந்தால் அதுவே அவருக்கு நீ செய்யும் பெரிய உபகாரம்."

அப்பால் நான் வடக்கே யாத்திரை கிளம்பி விட்டேன். எங்கு சுற்றினாலும், எவ்வளவு சாதுக்களோடு பழகினாலும் என்னால் பொன்னம்பலனாரை மறக்க முடியவில்லை. என் வளர்ப்புத் தந்தையான வேலியச்சாமியார் தம் இறுதிக் காலத்தில் கூறியதும் நினைவுக்கு வந்தது. 'நீ அசல் களிமண்; உன்னை உருட்டி வைக்க ஒரு குருநாதன் தேடி வருவான்' என்று அவர் சொன்னது போல் என்னைத் தேடி வந்தவர் பொன்னம்பலனார்தான் என்று எனக்கு நம்பிக்கை உண்டாகிவிட்டது. தேடி வந்தவரைப் பிடித்து ஜெயிலுக்கு அனுப்பி விட்டேன் என்கிற எண்ணம் என்னை முள்ளாய்க் குத்திக் கொண்டிருந்தது. சுமார் இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு, ஓர் ஆடிக் கிருத்திகையன்று சுவாமிமலையில் இருந்தேன்; அன்றைக்கு எனக்கு உடம்பு சுகம் இல்லை; ஒரு வீட்டுத் திண்ணையில், அன்று இரவு, முனகியபடி படுத்துக் கிடந்தேன். நள்ளிரவு இருக்கும். 'நமசிவாயம்' என்னும் குரல் கேட்டுத் துள்ளி எழுந்தேன்.

என் எதிரில் பொன்னம்பலனார் நின்றார்: அப்படியே, அன்றைக்கு நான் பார்த்தது போலவே இருந்தார். "நான் மகாபாவி, உங்களை அடித்து, ஜெயிலுக்கும் ........"

"நமசிவாயம்! நீ நல்ல களி மண்; எழுந்திரு!" என்று அவர் தூக்கி நிறுத்திய போது என் ஜுரம் பறந்துவிட்டது.

"சாமி! இந்தக் களிமண்ணை நீங்கள்தான் உருட்டி உருவாக்க வேண்டும். நான் உங்கள் அடிமை" என்றேன்.

"என்னிடம் இன்னும் மிச்சம் இருக்கிறது; அதையும் செலவுசெய்து தொலைக்க வேண்டும்; நாளைக்கு நான் சிறைக்குப் போகிறேன்..."

"மறுபடியுமா? வெளியில் இருந்து சாதிக்க முடியாததை ........"

'பளார்' என்று கன்னத்தில் விழுந்த அறை என் வாயை மூடியது. "ரொம்பத் தெரிந்தவன் நீ. எனக்கு வேறு உபதேசம் செய்கிறாயா? இரண்டு வருஷங்கள் கழித்து ஆடி முதல் கிருத்திகையன்று உன்னை இதே கோயில் வாசலில் எதிர்பார்க்கிறேன், இருப்பாயா?"

"இருக்கிறேன், சாமி!"

"அதுவரையில் என்ன செய்வாய்?"

"பஞ்சாட்சரம் சொல்லிக் கொண்டிருப்பேன்."

என் பதில் ஆண்டைக்கு மகிழ்ச்சி அளித்தது போலும். என் உடல் முழுவதும் தொட்டுத் தடவினார். எனக்குப் புது வலிமை உண்டானதை உணர்ந்தேன்.

"சொல்வதைக் கவனமாய்க் கேட்டுக் கொள். நான் திரும்பி வரும் வரையில் தென்னாட்டு க்ஷேத்திரங்களில் சுற்றிக் கொண்டிரு. எந்த இடத்திலும் மூன்று இரவுகளுக்கு மேல் தங்கக் கூடாது. வயிற்றுத் தீயைத் தணிக்கத்தான் திருவோடு ஏந்தினும்; நாளைக்காகச் சேமித்து வைப்பதற்கு அல்ல என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள். சேமிக்க முயலுவதை விடத் திருடுவது மிகக் கேவலம். சினிமா பார்ப்பது பெரும் பாவம். உன் பெயரை ஒருபோதும் மறக்காதே!" என்று கூறிவிட்டு என் குருசாமி தெருவில் இறங்கி விசையாக நடந்தார்.

# எக்லா

## தென் இந்தியா விரும்பும் டால்க்!

*தெம்பூட்ட, மணமளிக்க தனிப்பட்ட தயாரிப்பு*



இந்த பரத நாட்டியக்காரியைப் போல், நீங்களும் தென்னாட்டின் அதி உஷ்ண நிலையிலும்கூட குளுமையும் இதமும் பெறலாம்... மனோரம்மிய மணம் பெற்ற எக்லா டால்க் உபயோகித்தால். குளுமையான நுண்ணிய சுகந்தத்திற்கு இந்த ஒப்புயர்வற்ற டால்க்கை அடிக்கடி தாராளமாக உபயோகியுங்கள்

மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட




காால்கேட்

# எக்லா

## டால்க் பவுடர்

ECG/2A

---

தந்தி விலாசம்: "ஜீவன்" மதராஸ் & எல்லா கிளை ஆபீஸ்கள்.
டெலிபோன் நம்பர் - மதராஸ் ஆபீஸ்: 4618; மதராஸ் பங்களா: 85457
மதுரை: 3114; விஜயநகரம் சிடி: 30 & கட்டக்: 728

# கே. எம். எஸ். எல். சுந்தரராமன் & ஸன்

நூல் வியாபாரம் & ஏஜண்டுகள்

31, தங்கசாலைத் தெரு - - மதராஸ் - 3

**கிளை ஆபீஸ்கள்**

மதுரை ... (மதராஸ் ஸ்டேட்) ராய்பூர் (மத்திய பிரதேஷ்)

காகினாடா & விஜயநகரம் சிடி } (ஆந்திர பிரதேஷ்) கட்டக் (ஒரிஸா ஸ்டேட்)

★

DISTRIBUTORS TO:

## மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்

மதுரை அம்பாசமுத்திரம் தூத்துக்குடி




ராமசுப்பன் பூஜை அறையை விட்டுக் கிளம்பமனம் இல்லாதவராகவேதான் புறப்பட்டார். அம்பாள் படத்தைத் தரிசனம் செய்து கொண்டே நிற்கவேண்டும் போல் இருந்தது அவருக்கு. குத்துவிளக்கு ஒளியிலும் ஊதுவத்தியின் மெல்லிய புகை நடுவிலும் அம்பாள் இன்று புன்சிரிப்புக்காட்டுவது போல் அவருக்குப் பிரமை. ஆனாலும் எட்டரை மணிக்கு நாகசுந்தரத்தை அவர் வீட்டுக்குப் போய்ப் பார்ப்பதாக ஏற்பாடாகி யிருந்தது.

''தாயே!...... அந்த மனிதனின் நாவில் எழுந்தருளி எனக்கு நீதான் நல்ல வாக்குக் கொடுக்க உதவி செய்தாக வேண்டும். அந்த இடம் மாத்திரம் என் பெண்ணுக்கு அமைந்ததோ, அதை விட மகிழ்ச்சி தரக் கூடிய விஷயம் என் வாழ்க்கையிலே வேறு இல்லை'' என்று உரக்கவே பிரார்த்தித்துக் கொண்டு கிளம்பினார்.

தெருவில் சுப்புசாமித் தாத்தாவின் மனைவி காமாட்சி தான் நிறைகுடத்துடன் காலை வெய்யில் ஒளியில் மஞ்சள் பூசிய முகம் பளபளக்க ஆற்றங்கரையிலிருந்து வந்து கொண்டிருந்தாள். ராமசுப்பனுக்குப் பரம ஆனந்தம். இப்படி ஒரு நல்ல சகுனம் வாய்க்கும் என்று அவர் எதிர்பார்க்கவேயில்லை. அநேகமாக எண்ணெய்க்கார நாராயணன்தான் அந்த வேளையில் சைக்கிளுக்குப் பின்னால் தகர டப்பாக்களை அடுக்கிக் கொண்டு வருவது வழக்கம்.

ராமசுப்பன் வடக்கு மாட வீதியை நோக்கி நடந்து கொண்டிருந்தார். அவர் நடை வேகத்தை விடப் பன்மடங்கு அதிகமாக அவர் சிந்தனை சுழன்று கொண்டிருந்தது.

ராமசுப்பனுடைய ஒரே பெண், அம்புஜு என்று சுருக்கமாகவும் செல்லமாகவும் அழைக்கப்படும் அலமேலு. அவள் கல்யாணப் பருவத்துக்கு வந்து மூன்று வருடங்கள் முழுசாக ஆகி விட்டன. அவளுடைய கல்யாணத்துக்காக அவர் முயற்சி எடுத்துக் கொள்ள ஆரம்பித்து நான்கு வருஷங்களும் பூர்த்தியாகி விட்டன. எத்தனையோ பிள்ளைகளையும் அவர்களுடைய ஜாதகங்களையும் அலசிப் பார்த்து விட்டார். பிள்ளைகளைப் பிடித்திருந்த இடத்தில் ஜாதகங்கள் பொருந்த மறுத்தன. ஜாதகங்கள் பொருந்திய இடங்களில் பிள்ளைகளை அம்புஜுவுக்குப் பிடிக்காமல் போய் விட்டன.

ராமசுப்பன் ஜாதக வேட்டையில் ஈடுபட்டிருந்தபோது அம்புஜு சும்மா வீட்டில் உட்கார்ந்திருக்க வில்லை. எஸ். எஸ். எல். சி. அம்புஜு இண்டர்மீடியட் அம்புஜுவாக மாறி பி. எஸ்ஸி. அம்புஜுவாகவும் பரிணமித்து விட்டாள். அது ஓரளவு ராமசுப்பனுக்கு ஜாதக வேட்டையில் சிரமத்தைக் குறைத்தது. புலி வேட்டைக்குப் புறப்படுகிறவர்கள் முயலையும் மானையும், குறி பார்க்க விரும்பாததுபோல், பட்டதாரிப் பிள்ளைகள் ஜாதகத்தை மாத்திரம் தேடுவதற்கு ஆரம்பித்தார். ராமசுப்பன் சுமாரான வசதியுள்ளவர்தான். உத்தியோகத்திலிருந்து கூடக் கால அளவுக்கு முன்பே

ஓய்வெடுத்துக் கொண்டவர். பத்தாயிரம் ரூபாய் வரை மகள் கல்யாணத்தை முன்னிட்டுச் செலவழிக்கத் தயாராக இருந்தார். அந்தக் காரியம் முடிந்து விட்டால் அவருக்கு வேறு கவலையில்லை.

கடந்த ஒரு வருடமாக அம்புஜு அவருடைய கவலையில் பங்கு எடுத்துக் கொண்டதாகவே தெரியவில்லை. பட்டப் படிப்பு முடிந்தவுடன், அவள் தாயாருடன் சேர்ந்து நன்றாகச் சமைக்கக் கற்றுக்கொண்டாள். கிழிந்த துணிகளைத் தைப்பதிலும், கல் இயந்திரத்தில் மாவு திரிப்பதிலும், சுவாமி படங்களுக்குப் பூத்தொடுப்பதிலும் நேரத்தைக் கழித்தாள். உடம்பு நல்ல ஆரோக்கியமாக இருந்தது. பகட்டில்லாத துணிகளை உடுத்துப் பழகியிருந்தாள். "இதென்ன கூத்து! பட்டிக்காட்டுப் பெண் போலல்லவா இவள் இருக்கிறாள்?" என்று ராமசுப்பனேகூட நினைத்திருக்கிறார்.

உள்ளூர்த் தாலூக்கா ஆபீசில் ரெவினியூ இன்ஸ்பெக்டராக வந்திருந்த நாராயணனோடு முதன்முதலில் அவர் காரணமில்லாமல் சண்டை போட்டுக் கொண்டாலும், பிறகு அவன் நல்ல பையன் என்று தோன்றியது. வாசகசாலையில் அரசியல் சர்ச்சையில் ஏற்பட்ட வாக்குவாதத்தை மறந்து, ரகசியமாக அவனுக்குத் தெரியாமல் அவன் ஜாதகத்தை வாங்கிப் பரிசீலனை செய்தார். நல்ல பொருத்தம் இருந்தது. பையன் கண்ணுக்கு இலட்சணமாக இருந்தான். முன்னுக்கு வரக் கூடியவன். ஆனால் அவன் பெயருக்குப் பின்னால் ஒரு பி. ஏ. யோ, பி. எஸ்ஸி. யோ, பி. காமோ ஒட்டிக் கொண்டிராதது அவருக்கு ஏமாற்றமாக இருந்தது. நாராயணனை நினைவிலிருந்து அவர் அகற்றி விட்டார்.

அன்று இரவு அவர் கோவிலிலிருந்து திரும்பியபோது ஏனோ அம்புஜு உற்சாகமாக இருந்தாள். "அப்பா!.....உங்கள் நண்பராமே!...நாராயணன் ........அவர் உங்களைப் பார்க்க வந்திருந்தார். உங்களிடம் சம்ஸ்கிருதத்தில் ஏதாவது காவியங்கள் இருக்கின்றனவா என்று கேட்க வந்தாராம்" என்றாள். ராமசுப்பன் நடந்துவந்த அலுப்பில் அவள்முகத்தைக் கவனிக்கவில்லை. நாராயணன் ஒரு பட்டதாரியாக இல்லையே என்றதால் அகாரணமாக அவன் மேல் கோபம் வேறு வந்தது.

"இங்கேஏது?...'இல்லை' என்றுசொல்லி அனுப்புவதுதானே?" என்றார் அலட்சியமாக. அம்புஜு தலையை ஆட்டினாள். அப்போது ஏற்பட்ட முக மாறுதலையும் ராமசுப்பன் கவனிக்கத் தவறவில்லை.

அம்புஜு இந்தக் காலத்துப் பெண் அல்ல. அப்படி இருந்திருந்தால், "ஏனப்பா! நம் வீட்டில் தான் ஒரு அலமாரி நிறைய வால்மீகியும், பவபூதியும் ஹர்ஷனும் உட்கார்ந்திருக்கிறார்களே! நாளைக்கு நானே இரண்டு புத்தகங்கள் கொண்டுபோய்க் கொடுத்து விட்டு வருகிறேன்" என்று சொல்லியிருப்பாள்.

மகளைத் தந்தை புரிந்து கொள்ளவில்லை. தந்தை உள்ளத்தை மகள் தெரிந்து கொள்ளவுமில்லை. அதற்குப் பிறகு நாராயணன் அங்கே வரவுமில்லை. திடீரென்று அவனை வேறு ஊருக்கு மாற்றி விட்டார்கள்.

கடைசியாகத்தான் நாகசுந்தரத்தைப் பிடித்தார் ராமசுப்பன். நாகசுந்தரம் பெரிய உத்தியோகம் பார்த்து ரிட்டயரானவர். அவர் பையன் மணி, ஹானர்ஸ் பட்டம் பெற்று, ரஷ்யாவெல்லாம் போய்த் திரும்பி, இப்போது வடநாட்டு எஃகுத் தொழிற்சாலையில் எண்ணூறு ரூபாய் சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தான். வயதும் இருபத்தி எட்டு ஆகிவிட்டிருந்தது. கல்யாண மார்க்கெட்டில் அவனுக்கு நல்ல கிராக்கி.

நாகசுந்தரம் நிஜமாகவே பிகு பண்ணிக் கொண்டார். முதலில் 'பார்க்கலாம்' என்றார். பிறகு 'கலெக்டர் ரங்கசாமி ஜாதகம் வாங்கிக் கொண்டு போயிருக்கிறானே ஐயா! அவருடன் போட்டி போடுகிறீரா?' என்றார் குத்தலாக. கடைசியில் 'நீர் கையில், காலில் பணம் கொடுக்க வேண்டாம் காணும்! பையனுக்கு ஒரு 'பிளிமத்'கார் வாங்கிக் கொடுக்க முடியுமா?" என்று கேட்டார்.

ஜாதகங்கள் ஓரளவுக்கு ஒத்துப் போயிருந்தன. எப்படியும் இந்த இடத்தைப் பிடித்துவிட வேண்டும் என்று ஒற்றைக் காலில் நின்றார் ராமசுப்பன். நண்பர்களைச் சிபாரிசு செய்யச் சொன்னார். பதினாயிரம் ரூபாய் கையில் கொடுத்து விடுவதாகச் சொன்னார்.

அன்றைக்குத்தான் அந்த விஷயமாக முடிவுகட்டிப் பேச நாகசுந்தரம் வாயிதாப் போட்டிருந்தார். நல்ல சகுனம் கிடைத்த உற்சாகத்தில் ராமசுப்பன் நம்பிக்கையுடன் வடக்கு மாடவீதியில் பிரவேசித்தார்.

"ஐயா உன்னை யாருடனோ பேசிக் கொண்டிருக்கிறார். இப்படி உட்காருங்க" என்று அந்த வேலைக்காரன் பெரிய இடத்துத் தோரணையில் உத்தரவிட்டான். ராமசுப்பன் உட்கார்ந்திருந்தார். ஒரு மணி நேரம் ஓடியது.

"ஏனப்பா!.....ஐயாகிட்டே போய்ச் சொல்றியா?" என்றார் கெஞ்சும் குரலில்.

"எஜமான் கோவிச்சுப் பாருங்க!..... ஏதோ முக்கிய விஷயம் சின்ன எஜமான்

சம்பந்தமாகப் பேசிக்கிட்டு இருக்கார். சின்ன எஜமானுக்குச் சம்பளம் ஆயிரத்து ஐந்நூறு ஆயிப் போச்சுன்னு தகவல் வந்திருக்கு...'' வேலைக்காரன் தனக்குச் சம்பள உயர்வு கிடைத்தது போல் மகிழ்ச்சியுடன் பேசினான்.

ராமசுப்பனுக்குப் 'பகீ'ரென்றது. 'நாக சுந்தரம் பேரத்தை மேலும் நிச்சயமாக ஏற்றி விடுவார். நிச்சயதாம்பூலம் ஆன பிறகு இந்த சந்தோஷ சமாசாரம் வந்து தொலைத்திருக்கக் கூடாதா? பெண்ணின் அதிருஷ்டம் என்றாவது சொல்லலாமே' என்று நினைத்தார். இருந்தாலும் அதை அவர் வாயாலேயே கேட்டு விடுவது என்று உட்கார்ந்திருந்தார். மேலும் ஒரு மணி நேரம் ஓடியது.

கடையில் மாடியிலிருந்து நாகசுந்தரம் இறங்கி வந்தார். ''ஓ!...நீங்களா! வாருங்கள்! நீங்கள் வேறு இடத்தில் முயற்சி பண்ணுவதுதான் உசிதம் என்று தோன்றுகிறது. சர்க்கார் உதவிக் காரியதரிசி குஞ்சிதபாதம் ஒற்றைக்காலில் தம் பெண்ணைத்தான் மணிக்குக் கொடுப்பேன் என்று நிற்கிறான். எனக்கு மிகவும் வேண்டியவன்.'' நாகசுந்தரத்தின் முகத்தில் சலனமே இல்லை. அனுதாப உணர்ச்சி கூட இல்லை.

'பாவி! உன் பணத்தாசை உன்னை ஆட்டுவிக்கிறது' என்று கூச்சலிட விரும்பினார் ராமசுப்பன். ஆனால் தைரியமில்லை. 'விடு விடெ'ன்று கிளம்பினார்.

''தெய்வமாவது, சகுனமாவது!.... எல்லாம் மூட நம்பிக்கை! என்னவோ பிரமாத வெற்றி கிட்டி விடுமென்று போனேனே! எல்லாம் மண்!'' என்ற எரிச்சல் உணர்ச்சியில் வீடு திரும்பினார். அப்புறம் அவர் பூஜை அறைப் பக்கமே போகவில்லை. காமாட்சிப் பாட்டியைக் காணும் போதெல்லாம் ஆத்திரம்.

ஒரு மாத காலத்துக்குத் தம் வரன் வேட்டையை ஒத்திப் போட்டார். சிநேகிதர் வீட்டுக் குழந்தையின் பிறந்தநாளுக்குத் தொலைவிலுள்ள ஒரு ஊருக்குப்போய் விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தார். பஸ் பிரயாணம்.

திடீரென்று பின் ஆசனத்திலிருந்து பழக்கமான குரல் ''சார்! சௌக்கியமா?'' என்று எழுந்தது. ராமசுப்பன் திரும்பிப் பார்த்தார். நாராயணன் உட்கார்ந்திருந்தான்.

''நாராயணா!.....சௌக்கியம்தானப்பா? எங்கேயிருக்கிறாய்?'' என்றார்.

பஸ் நடுவழி ஊரில் காப்பிக்கடை ஒன்றின் முன் நின்றது. பிரயாணிகள் ஓய்வுக்காக இறங்கினார்கள். வண்டியில் ராமசுப்பனும் நாராயணனும் மட்டும்தான் இருந்தார்கள்.

''இங்கே பக்கத்து ஊரிலே டிப்டி தாசில்தாராக இருக்கிறேன். ஊரிலிருந்து வரும் போது உங்களிடம் சொல்லிக் கொள்ளக் கூட முடியவில்லை.

சார்!....இந்தச் 'சாகுந்தலம்' புத்தகத்தை ஒரு நாள் உங்கள் பெண்ணிடமிருந்து வாங்கி வந்தேன். வீட்டுக்கு வந்த போது நீங்கள் இல்லை. நீங்கள் ஆட்சேபணை ஏதும் சொல்ல மாட்டீர்கள் என்று சொல்லிக் கொண்டுதான் உங்கள் பெண் கொடுத்தாள். உங்கள் பெண் சம்ஸ்கிருதத்தில் நல்ல பாண்டித்தியம் உடையவள் போலிருக்கிறது. சில குறிப்புகளை வெகு அழகாக விளக்கம் கூறி ஆராய்ச்சி முறையில் எழுதியிருக்கிறாள். எனக்கு சம்ஸ்கிருதம் என்றால் ஒரே பித்து'' என்று



சொல்லி நாராயணன் புத்தகத்தை மரியாதையுடன் நீட்டினான்.

ராமசுப்பன் சில வினாடிகள் வரை நாராயணனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"நாராயணன்! நீங்கள் இறங்குமிடத்தில் நானும் இறங்கிச் சில விஷயங்கள் பேச விரும்புகிறேன்" என்றார் மனத்தில் சில முடிவுகளைச் செய்து கொண்டு.

நாராயணன் வீட்டில் நாராயணனும் அவன் அக்காவும்தான் இருந்தார்கள். வேறு மனிதர்கள் இல்லை.

"நாராயணன் உங்களுக்கு என் பெண் அம்புஜத்தைத் திருமணம் செய்து கொடுத்துவிடலாமென்று நினைக்கிறேன். உங்கள் ஜாதகத்தை நான் ஏற்கனவே பார்த்தாகி விட்டது. ஆனால் எனக்காகத் திருமணம் முடியுமட்டும் ஒரு சிறு பொய் சொல்லச் சம்மதிக்க வேண்டும். அவள் பட்டம் பெற்றவள். கணவனுக்குப் பட்டம் இல்லையே என்று ஏக்கம் உண்டாகலாம். ஆனால் கல்யாணம் ஆனால் சரியாகி விடும். அதுவரையில் நீங்கள் ஒரு பட்டதாரி என்று சொல்லிக் கொள்ள வேண்டும்." ராமசுப்பன் கெஞ்சினார்.

நாராயணன் கலகலவென்று சிரித்தான். "சார்! உங்கள் பெண் அறிவாற்றல் உள்ளவள். குடும்பப் பெண்களுக்குண்டான அழகும் குணமும் இருக்கின்றன. அவளை மணம் செய்து கொள்வதில் எனக்குப் பூர்ண சம்மதம். ஆனால் எங்கள் வாழ்க்கையைப் பொய் என்னும் அஸ்திவாரத்தின் மேல் எழுப்ப நான் தயாரில்லை. அவளும் விரும்ப மாட்டாள். அவளிடமே விஷயத்தைச் சொல்லிக் கேளுங்கள். நானே வேண்டுமானாலும் கேட்கிறேன். அவள் சம்மதித்தால் மேற்கொண்டு காரியங்களைப் பாருங்கள். அவள் சம்மதம் தருவதற்கு முன்பே நான் என் நிபந்தனைகளைச் சொல்லி விடுகிறேன். பணம் என்றோ, சாமான் என்றோ நான் ஒன்றும் தங்களிடம் பெற முடியாது. தங்கள் பெண் சம்மதித்தால், விவாகம் மூலம் நான் ஒரு சிறந்த கல்வி அறிவுள்ள, நற்குணமுள்ள வாழ்க்கைத் துணைவியை அடைவேன் என்ற நம்பிக்கை ஒன் [illegible] எனக்கு லாபமாக இருக்கட்டும்."

ராமசுப்பன் திகைத்துப் போனார். நேர்மையின் உருவமே அவன் முன் நாராயணனாக நிற்பது போன்ற பிரமை.

"நாராயணன்!...எனக்குப் பட்டதாரி நாராயணன் வேண்டாம்! நீயே போதும். ராமசுப்பன் அடுத்த பஸ்ஸில் புறப்பட்டு விட்டார்.

வீடு வந்ததும் ராமசுப்பன் தமது மகளிடம் "ஏனம்மா!...இந்தச் சாகுந்தலம் புத்தகத்தை நாராயணனுக்குக் கொடுத்ததைப் பற்றி நீ எனக்குச் சொல்லவே இல்லையே! இந்தா!" என்று அம்புஜ முகத்தைப் பார்த்துக் கொண்டே கேட்டார். அவள் முகம் மலர்ந்தது. அதரங்கள் திறக்கவில்லை.

"இந்தாம்மா!....நாராயணனைத் திருமணம் செய்து கொள்ளச் சம்மதமா? உன்னைப் போல் பட்டம் வாங்கியவனில்லை. ஆனால்...."

"அப்பா!...இந்தப் பட்டத்தை திருப்பிக் கொடுத்து விட முடியுமானால் நான் திருப்பி விடுகிறேன். என் அறிவை விசாலப்படுத்திக் கொள்ளும் ஆசையில் தான் படித்தேனே தவிர, மல்யுத்தக்காரர்கள் தங்கள் முண்டாக்களைக் காட்டிப் பிறரைப் பயமுறுத்துவது போல் பிறரை எடைபோடவோ மட்டம் தட்டவோ படிக்கவில்லை. பள்ளிக்குப் போகாமல் ஞான மார்க்கத்தின் எல்லையைக் கண்டவர்கள் அநேகர்! எனக்குத் தெரியும்." அவள் குரல் கரகரத்தது. உள்ளே போய்விட்டாள். அவள் விருப்பத்தை நன்கு வெளிக் காட்டி விட்டாள்.

ராமசுப்பன் பூஜை அறைக்குள் நுழைந்தார். பரவசமடைந்து நின்றார். "தாயே! பேதைமையால் வாழ்க்கையைப் புரிந்து கொள்ளாமல் விழிக்கிறேன் என்பதற்காக என்னைப் பார்த்துச் சிரிக்கிறாயா, தாயே!...இன்று புரிந்து கொண்டேன். நாகசுந்தரத்தின் வலையில் விழாமல் தடுத்தாய்! எனக்கு ஒரு உத்தமனைத் தேடித் தந்தாய்! உன்னையே நான் கடிந்து கொண்டேனே!...என்னை மன்னித்துவிடு, தாயே!" என்று கண்ணீர் மல்கப் புலம்பினார். அம்பாள் அப்போதும் சிரித்துக் கொண்டுதான் இருந்தாள்.

'ஜாம் ஜாம்' என்று கொட்டு மேளம் முழங்கியது. தாலி கட்டிய பிறகு ஹோமப் புகையிலே ஒருவரையொருவர் மறைமுகமாகப் பார்த்துப் புன்முறுவல் செய்து கொண்டார்கள் மணமக்கள்.

"நாகசுந்தரம் ஏன் வரவில்லை? ஊரில் இல்லையா?" என்று ராமசுப்பன் யாரிடமோ கேட்டுக் கொண்டிருந்தார்.

"விஷயம் தெரியாத உமக்கு? அவர் பையன் மணி யாரோ சட்டைக்காரியை நான்கு வருஷங்களுக்கு முன்பே கல்யாணம் செய்து கொண்டு குழந்தை குட்டிகளோடு இருக்கிறானாம். விஷயம் நாகசுந்தரத்துக்கு இப்போது தான் தெரியுமாம்! மகனோடு சண்டை போட விமானத்தில் பறந்து போயிருக்கிறார்" என்றார் பக்கத்தில் இருந்தவர்.

"பாவம், நாகசுந்தரம்! ரொம்ப ஆசைப் பட்டார்" என்று ராமசுப்பனின் உதடுகள் அசைந்தன.

Printed and Published by R Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk Madras 10
Managing Editor: T Sadasivam

உங்கள்
வேலையை
இலகுவா
க்குவதற்
கென்றே
தயாரிக்
கப்பட்டுள்ள
அற்புத
சோப்பவுடர்




## வெட்டவெளிச்சமான உண்மை...

# ரின்ஸோ வெளுப்பது அதிவெண்மை

ரின்ஸோ-வெண்மை யென்றால் உண்மையான வெண்மை! சக்தி வாய்ந்த ரின்ஸோவின் நுரை, நூலிழைகளில் மறைந்துள்ள அழுக்குகளையும் அறவே அகற்றிவிடுகிறது. அடித்துத் துவைக்கவோ, அழுத்தித் தேய்க்கவோ வேண்டாம். வெள்ளைத் துணிகள் வெள்ளைவெளேரென்றும், வர்ணத் துணிகள் அதிகப் பிரகாசமாகவும் ஆகிவிடும். புடவைகள் முதல் கைக்குட்டை வரை, குடும்பத்தின் சகல துணிகளுக்கும் உகந்தது ரின்ஸோ!

R. 21-60 TM

ஹிந்துஸ்தான் லீவர் லிமிட்டெட் தயாரிப்பு

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon



**பூவைப் போல...**
**உங்கள் மேனியை <u>மலரச்செய்வது</u> ரெக்ஸோனு**

ரெக்ஸோனு சோப்பில் இருப்பது கேடில் — பற்பல எண்ணெய்கள் கலந்த விசேஷத் தைலமாகிய கேடில், சருமத்திற்கு ஊட்டமளித்து உங்கள் இயற்கை அழகை வெளிக் கொணரத் துணைபுரியும்.






கேடில் கலந்த டாய்லெட் சோப்
இது ஒன்றே

RP. 131-30TM